# தொல்காப்பியம்

## எழுத்து அதிகாரப் பொருளும் விளக்கமும்



**சொல்லாக்கியன்**

தொல்காப்பியம்: எழுத்து அதிகாரப் பொருளும் விளக்கமும்

சொல்லாக்கியன்

*பனுவலை வாசிக்கும்போது இப்படியும்கூட தொல்காப்பியத்தை அணுகமுடியுமா என்ற எண்ணமும் நாம் ஏன் இதை, இவ்வாறு அணுகவில்லை என்றும் நினைத்தேன். அந்த அளவுக்கு இதிலுள்ள சில மாற்றங்கள் என்னை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது.*

***-முனைவர் கி. சங்கர நாராயணன்***

விலை ரூ.300

**சொல்லாக்கியம் வெளியீடு**

# தொல்காப்பியம்

## பொருளும் விளக்கமும்

**சொல்லாக்கியன்**



சொல்லாக்கியம் வெளியீடு

1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், ‘சி’ தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088

நூலின் பெயர்: **தொல்காப்பியம் – பொருளும் விளக்கமும்**

ஆசிரியர் : சொல்லாக்கியன்
பதிப்பு : ஆகஸ்ட் 2018
உரிமை : ஆசிரியர்க்கு

வெளியீடு : சொல்லாக்கியம் வெளியீடு
1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், ''சி'' தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088.
பேசி : 91–9940369834 / 001 780 838 3993
email: dheena.subramanian@gmail.com

பக்கங்கள் : 870
விலை : ரூ. 900

## காணிக்கை...

*உயிரூட்டிய தந்தை* **சோழமூர் சுப்பிரமணியம்**
*அவர்களுக்கும்!*

*உடலீந்த தாய்* **வக்கனம்பட்டி சரோஜா**
*அவர்களுக்கும்!*

*உரைப்பணியில் நான் இருக்க, உறைபனியில் தான்*
*வருந்தி, நிறை ஊக்கமும் நிதமளித்த,*
*துணைவி* **லட்சுமி சங்கரனுக்கும்***!*

*ஆயிரமாயிரம் கேள்விகளுக்கு பதில்பெற குருவாய்*
*நிற்கும் திருவண்ணாமலை*
**இரமண மகரிஷி** *அவர்களுக்கும்!*

*ஒருமையாய், முழுமையாய், அமைதியாய்,*
*ஆனந்தமாய் அசைவின்றி நிலையாய், எல்லா*
*பொருளும், உயிரும், இருத்தலும், பௌதிக*
*விதிகளுக்கும், அதற்கு ஒப்பான கரும விதிகளுக்கும்,*
*அதாவது தருமத்திற்கும் ஏற்ப, தனக்குள் இயங்க,*
*ஆற்றலை ஓயாது அருளும்,*
*ஞானம் கூட்டும், நுண்ணிய பொருண்மையாம்,*
**பிரக்ஞையாம் தெய்வத்திற்கும்***!*

## ஆலோசனை

முனை.பொற்கோ
முனை. ரா. செயராமன்
முனை. ப.வேல்முருகன்
முனை.சங்கர நாராயணன்
முனை. ப. குமார்
முனை. செந்தில்குமார்
முனை. அ. காமாட்சி
திரு. த. பார்த்திபன்
முனை. ஷேக் மீரான்

# உள்ளடக்கம்

## சொல்



## பொருள்

# அணிந்துரை

**பேராசிரியர் ப. மருதநாயகம்**
*செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்*
*தரமணி, சென்னை – 600 113*

உலக மொழிகளில் நமக்குக் கிடைத்திருப்பதில் முதல் முழு இலக்கண நூல் (Earliest Complete Grammar) என்னும் பெருமைக்குரியது தொல்காப்பியம். எல்லா மொழிகளுக்கும் பொருந்தும் இலக்கணத்தைத் தருவது (Universal Grammar) என்ற சிறப்பும் அதற்கு உண்டு. மிச்சிகன் பலகலைக்கழகத்து மொழியியல் பேராசிரியர்களான ஏ.எல். பெக்கர் (A.L.Becker), கீத் டெய்லர் (Keith Taylor) ஆகியோர் சிகாகோ பல்கலைக்கழகத்துப் பேரறிஞர் ஏ.கே. இராமானுஜனுடன் நிகழ்த்திய கலந்துரையாடலில் குறிப்பிட்ட கருத்துகள் தமிழ் ஆர்வலர்களும், தமிழின் உட்பகைவர்களும், புறப்பகைவர்களும் அறிந்திருக்க வேண்டியவை:

அவ்வறிஞர்களுள் பெக்கர் கூறுவது:

"அமெரிக்கப் பல்கலைக்கழக நூலகங்களில் எல்லாம் தொல் காப்பியரின் சிலையை நிறுவ வேண்டும்; ஏனெனில், அவர் மேலை உலகின் பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்றோரோடு ஒப்பிடற்குரிய தகுதி பெற்றவர்; அவர்களுக்கிருந்த சிந்தனை யாற்றல், கற்பனைத்திறன், மொழியின்பால் ஈடுபாடு ஆகிய வற்றைப் பெற்றிருந்த தொல்காப்பியர், தமிழின் அறிவுலகைத் திறந்து காட்டினார்; மொழி பற்றிய நுணுக்கங்களையெல்லாம் நுட்பமான ஆய்வுக்கு உட்படுத்தினார்; கோட்பாடுகளின் வரையறைகளையெல்லாம் தெளிவு படுத்தினார்; மொழியைப் புரிந்துக் கொள்ளத் துணை செய்யும் மரபுகளையும், நாம் ஆராயாது ஏற்றுக் கொண்ட எல்லாவற்றையும் தெளிவாக விளக்கியமையால்,

தொல்காப்பியர் தமிழ் மொழிக் கல்விக்கு இன்றியமையாத அறிஞர் ஆகிறார்.''

ஏ.கே.இராமனுசன் கூறுவது:

''தொல்காப்பியர் கவிதையியல் தந்த மனிதர்; அவர் மொழியிலக்கணம் உரைத்தவரும் ஆவார்; அன்னார் தமிழ்மொழிக்குச் செய்ய வேண்டிய யாவற்றையும் செய்திருக்கிறார். சொல்லாட்சிக்கலை (Rhetoric), யாப்பிலக்கணம் (Prosody), கவிதையியல் (Poetics) ஆகிய மூன்றிலும் அவர் வித்தகர்; மொழியியல் ஆசான்களுக்கெல்லாம் ஆசான் (The Ultimate Linguistic Guru) ஆவார். மொழிக்கு அவர் செய்யாதது ஏதுமில்லை. அவர் தம் மொழியியல் ஆய்விற்கு, பேச்சு மொழியிலிருந்து கவிதை மொழி வரை உள்ள எல்லாக் கூறுகளையும் எடுத்துக் கொள்கிறார்.''

தொல்காப்பியத்தை ஒத்த இலக்கண நூல் உலக மொழிகளில் வேறு எதுவும் இல்லை என்னும் முடிவு, மேலை மொழியியல் வல்லுனர்களால் இப்பொழுது உணரப்பட்டு வருகிறது. அதற்குப் போட்டியாக முன்னிறுத்தப் பெற்ற வடமொழிப் பாணிணீயம் ஒரு காலத்தில் அளவுகடந்து புகழப்பெற்றது. அதன் குறைகள் இப்பொழுது வடமொழி வாணர்களாலேயே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அது வடமொழியின் முழு இலக்கணத்தையும் கூறவில்லை; அதன் ஆசிரியர், கவிதை மொழியின் உயர்வு அறியாதவர்; அதன் தனிச்சிறப்பென்று பாராட்டப்பெற்ற வேர்ச்சொல்லாய்வு அடிப்படையற்றது; அது குறிப்பிடும் வேர்களுள் அறுபது விழுக்காட்டிற்கு மேலானவை, அம்மொழியில் இல்லாதவை; கற்பனையாக, பொய்யாகச் சொல்லப்பட்டவை.

சட்டம்பி அடிகளார் தமது ஆதிமொழி என்னும் நூலில், தமிழ், பிராகிருதம், சமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழி இலக்கணங்களையும் முறையாக ஆராய்ந்து தமிழிலிருந்து பிராகிருதமும், பிராகிருதத்திலிருந்து சமஸ்கிருதமும் தோற்றம் பெற்றன என்னும் நேர்மையுணர்வுடைய ஆய்வு முடிவை நிறுவுவார். வேதநூல் வல்லுநரான சுந்தரராசு, தமிழ் எழுத்துக்களிலிருந்தே வடமொழி எழுத்துக்கள் உருவாக்கப்பட்டன என்பதற்கு இருக்கு வேதத்திலிருந்தே மேற்கோள்கள் தருவார்.

தமிழருக்கே உரிய அக இலக்கிய மரபைப் பேசும் தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கணமாக மட்டுமல்லாமல் வாழ்வியல் விழுமியங்களைக் கூறும் இலக்கியமாகவும் திகழ்வது.

''தொல்காப்பியம்: எழுத்து அதிகாரப் பொருளும் விளக்கமும்'', ''தொல்காப்பியம்:சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்'' என்னும் இரண்டு நூல்களை வெளியிட்ட சொல்லாக்கியன், இப்பொழுது, ''தொல்காப்பியம்: பொருளதிகாரப் பொருளும் விளக்கமும்'' என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூலிலும், நூற்பாக்களுக்கு பொருளும் விளக்கமும் தருவதோடு அமையாது, சில இடங்களில் தமக்கே உரிய முறையில் வேர்ச்சொல்லாய் வையும் மேற்கொள்கிறார். ''பொருளதிகாரத்தைத் தொடுவதற்கு அச்சமாய் இருந்தது'' என்று அவர் முன்னுரையில் கூறினாலும், தம்முடைய புதுமையான ஆய்வு முடிவுகளை அச்சமும் தயக்கமும் இன்றிச் சொல்லிச் செல்கிறார்.

தொல்காப்பியம் புதிய, புதிய அணுகுமுறைகளைத் தாங்கக் கூடியது, புதிய, புதிய கோணங்களில் பார்க்கப்பட வேண்டியது என்பதால், அதுபற்றி வந்துள்ள இந்நூலும் வரவேற்புக்குரியது.

**பேராசிரியர் ப. மருதநாயகம்**

# வாழ்த்துரை

## முனைவர் ஜி.ஜான் சாமுவேல்

**ஆசியவியல் நிறுவனம், சென்னை**

*கனடா நாட்டில் வாழ்ந்துக் கொண்டு தாய்த்தமிழுக்கு தாங்கள் ஆற்றும் அரும்பணிகள் வியந்து செயல் மறந்து பாராட்டத் தக்கன. எழுத்து, சொல் ஆகிய இரு அதிகாரங்களுக்கும் அவற்றி லுள்ள நூற்பாக்களுக்கும் தாங்கள் நல்கியுள்ள விளக்கங்கள் பாராட்டத்தக்கன.*

*தொல்காப்பியத்தை ஒரு விஞ்ஞான ஆய்வுத்தொகுப்பு நூலாகக் காணும் தாங்கள் இத்தகைய பண்பாட்டு விழுமியங்களுக்கு தற்காலத் தமிழர்கள் அந்நியப்பட்டு நிற்கும் அவல நிலையை மிகுந்த ஆதங்கத்துடன் வெளிப்படுத்தியுள்ளது அனைத்து அறிஞர் களுக்கும் ஏற்புடையதே.*

*இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு மொழியை அறிவியல் கண்ணோட்டத்துடன் விரிவாக விளக்கும் ஒரு பெரிய இலக்கண நூல் தமிழர்களின் சிந்தனையில் தோன்றியுள்ளதை உலகின் பல்வேறு மொழியியல் வல்லுநர்களும் இன்று வியந்து பாராட்டுகின்றனர்.*

*இளம்பூரணர் சற்று சமயச்சிந்தனைகளோடு தொல்காப்பியத்தை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அணுகினார். தொடர்ந்து வந்த சேனாவரையார் வடமொழி இலக்கண அறிவுப்பின்புலனுடன் உரை யாத்தார். நச்சினார்க்கினியர் உரையில் அழகு தமிழ் நடையும் சற்று சைவக்கோட்பாடுகளும் வெளிப்பட்டன. தங்கள் உரையில், அறிவியல் தத்துவக்கண்ணோட்டங்கள் மலிந்துள்ளன.*

*காலங்கள் பல கடந்தும் கால மாற்றங்களுக்கு ஈடு கொடுத்து நிற்கும் தன்மையால், தொல்காப்பியம் போன்ற பெருநூல்கள் காலங்கடந்து வாழும் செம்மொழிப் படைப்புகளாக ஏற்றம் பெற்றுள்ளன. காலத்திற்கு ஏற்ற நூலாக மட்டுமன்றிக் காலங்கடந்து அல்லது காலத்தை வென்று நிற்கும் நூல்களின் வரிசையில் தொல்காப்பியம் முதல் இடத்தைப் பெற்றுள்ளது.*

*தொல்காப்பியர்கால வரிவடிவத்திலிருந்து தமிழின் தற்கால வரிவடிவம் மிகப்பெருமளவிற்கு மாற்றம் பெற்று விட்டது என்பது ஒருசில வரி வடிவங்களுக்கு தொல்காப்பியம் தரும் விளக்கங்களையும், அவ்வரிவடிவங்களின் இடைக்கால (கல் வெட்டு), பிற்கால (ஓலைச்சுவடிகள்) தற்கால வரிவடி வங்களையும் ஒப்பிட்டு நோக்கும்போது புலனாகும். எனினும் அடிப்படை ஒலியன்கள் மாறுபடாமல் இருப்பது குறிப்பிடத்தக்கது.*

*ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன்னர் எழுந்த ஓர் உயரிய படைப்புக்கு புதுமையாக உரை கண்டுள்ளீர்கள். பொருளதிகாரத்திற்கும் உரை எழுதி வெளியிடுவீர்கள் என நம்புகிறேன். தங்களின் அரிய முயற்சிக்கு என் அன்பு வாழ்த்துக்கள்.*

**முனைவர் ஜி.ஜான் சாமுவேல்**

*14.04.2018*

# ஆசிரியன் உரைகள்

## எழுத்து

தொல்காப்பியம்தான், நமக்கு கிடைத்திருக்கும், தமிழ் மொழியின் முதல் அடிப்படை இலக்கண நூல். அதற்கு முன்னும், பல இலக்கண நூல்கள், சிறிதும் பெரிதுமாய் இருந்திருக்க வேண்டும், என்பதை தொல்காப்பிய நூற்பாக்களில் இருந்தே அறியமுடிகின்றது. ஆனால், தொல்காப்பியத்தின் அளவிலும், முறையிலும் வேறெந்த இலக்கண நூலும் இருந்ததா என்பது கேள்விக்குறியே. ஏனெனில், பிற்பாடு வந்த உரையாசிரியர்கள், இலக்கியங்களை மேற்கோள்களாய் எடுத்தாண்டது போல், தொல்காப்பியத்திற்கு முன்பிருந்த எந்த இலக்கண நூலையும் எடுத்தாளவில்லை.

தொல்காப்பியம் எனும் தமிழ் இலக்கண நூலும் அதன் வழிவந்த பற்பல இலக்கண நூல்களும் இல்லாமல் இருந்திருந்தால், நம்முடைய தமிழ் என்றோ எப்படியெல்லாமோ மாறிப் போயிருக்கும். எத்தனையோ மொழியுடைய அரசுகள் வந்து இருந்த போதிலும், தமிழ், தன்னுடைய இயல்பு மாறாமல் நிலைத்து வருவதற்குக் காரணம், தொல்காப்பியமும், அதை விளக்கும் விதமாக, சுருக்கும் விதமாக, நீட்டிக்கும் விதமாக, பின்வந்த காலங்களில் உருவாக்கப்பட்ட பற்பல இலக்கண நூல்களும்தான். அவற்றுள், குறிப்பிடப்பட வேண்டியவை: நன்னூல், தொன்னூல் விளக்கம், வீரசோழியம், முத்துவீரியம், சுவாமிநாதம் போன்றவை.

தொல்காப்பியம் வெறும் மொழி நூலா? பொருள் அதிகாரத்தில், சொற்களுக்குப் பொருள் கூறும் விதமாக, ஒரு அகராதியை உருவாக்கி இருப்பாரானால், அதை மொழிநூல் எனலாம். ஆனால், பொருள் அதிகாரத்தில், தமிழரின் பல்வேறு வாழ்க்கைத் துறை

களில் பயன்படுத்தப்பட்ட சொற்களை ஒழுங்குபடுத்தியதன் மூலம், அன்றைய தமிழரின் வாழ்வு இடவியல், உளவியல், போர்முறை, சமூகவியல், மானுடவியல், பொருளாதாரம், அரசியல், இலக்கியம், இசை, நடனம், நாடகம் என எல்லாச் சமூகக் கூறுகளையும், பயன்பாட்டு அடிப்படையில், விளக்கி உள்ளார். எனவே, தொல் காப்பியத்தைத் தமிழரின் வாழ்வியல் நூல் எனலாம்.

தொல்காப்பிய இலக்கணம் இன்று பொருந்தாது, அன்றைய வாழ்வியலை மீட்க முடியாது என்ற கருத்துகள் மேலோங்கி உள்ளன.

தொல்காப்பிய இலக்கணத்தின் சில விதிகள் வழக்கொழிந்தன என்பதாலேயே, மொத்தத் தொல்காப்பியத்தையும் புறக்கணித்தல் என்பது, தமிழையே புறக்கணிப்பதற்குச் சமமாகும். விதிகளுக்கான காரணங்கள் ஆழமானவை, விஞ்ஞானப் பூர்வமானவை, சமூக உரையாடலின் தெளிவிற்கானவை, வரலாற்றுப் பதிவுகளுக்கு இன்றியமையாதவை. அவற்றை ஆராயாமல் விலக்குவது, அறிவுப் பூர்வமானது அல்ல.

தொல்காப்பியம், தமிழ்மொழி மற்றும் தமிழர் வாழ்வியலின், ஒரு விஞ்ஞான ஆய்வுத் தொகுப்பு நூல். அதன் அமைப்பு, அளவை யியல் மற்றும் நுணுக்கமான விஞ்ஞான வகைப்பட்டது. அதன் கூற்றுகள், படிப்படியாக வளர்ந்து விரியும் விதம், விதிகளையும், விலகலையும், விதிவிலக்குகளையும் அமைத்துள்ள ஒழுங்கு முறைமை, நவீன ஆய்வு நூல் எதையும் வீழ்த்தும் வலிமை உடையது. சட்ட நூலின் கட்டமைப்பு ஒழுங்கைப் பெற்றுள்ளது, தொல்காப்பியம்.

இன்று, விழுமியங்கள் பலவனவற்றையும் இழந்து நாம் ஒருமைப்படுத்தப்பட்ட வெறுமையான நுகர்வியல் கருவிகளாக ஆக்கப்பட்டுள்ளோம். உடல்சார்ந்த நுகர்வுப் பொருட்களே முன்னி றுத்தப்படுகின்றன. அவைதான், வர்த்தகத்திற்கும், இலாபத்திற்கும் பெரிதும் வழிவகுக்கின்றன. மனம், அறிவு, ஆன்மா போன்ற இதர மனிதக் கூறுகள் இரண்டாம் நிலைக்குத் தள்ளப் படுகின்றன. இல்லையெனில், அவையும் வியாபாரச் சந்தைக்கு உட்படுத்தப் படுகின்றன.

புதிய இலக்கணம் படைப்பதில் தவறில்லை. ஆனால், நெடுங்கால இலக்கணப் பரிணாம வரலாற்றைக் கணக்கில் கொள் ளாமல், அது சாத்தியமில்லை. இழந்த கலை இலக்கிய, வாழ்வியல் விழுமியங்களை மீட்டு எடுப்பதன் மூலம், வாழ்விற்குப் பொருளும் பயனும் காணமுடியும்.

உதாரணமாக, பலவித யாழ்கள், பறைகள் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளன. இன்றைய தொழில்நுட்பக் காலத்தில், அவற்றை மீட்டு வடிவமைப்பது மிகவும் எளியது. அவை, உலகளாவிய இசைத்துறையில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தலாம். மேலும், இன்றைய சமூக வாழ்வியலுக்கு ஏற்றவாறு, புதிய வடிவங்களையும் உருவாக்கலாம். அதற்கான உந்துதலை, தொல்காப்பியம் தரும். தொல்காப்பியத்தின் எழுத்து அதிகாரத்தைப் பற்றிக் கூறுவ தென்றால், ஒரு வரையறைக்குள்ளேயே அதற்குரிய விளக்கங்களும் பொருந்தியுள்ளமை, ஆசிரியரின் முழுமையான புலமையை வெளிப்படுத்தும் (நூற்பா 104).

பொதுக்கருத்தை உருவாக்குதல் (Generalization), உய்த்துணர்தல் (Deduction) போன்ற அறிவியல் நுணுக்கங்களைக் கொண்டது தொல்காப்பியம் (நூற்பா 108).

தொல்காப்பிய இலக்கண விதிகள், பொருண்மைத் தெளிவிற் காகவும், ஒலிப்பின் எளிமைக்காகவும் உருவாக்கப்பட்டனபோலும்.

தொல்காப்பிய இலக்கண விதிகள், பேச்சு வழக்குடன் எழுத்து முறையினைப் பொருத்தி, பொருள் மாறாமல் காப்பன.

இங்கு, சில நூற்பாக்களுக்கு விதி அமைந்ததன் அடிப்படையும் ஆராயப்பட்டுள்ளன. பொதுவான விதியிலிருந்து விலகி, சிறப்பு விதி காண்பதன் நோக்கம், பொருண்மையின் தெளிவிற்கும், உறுதிக்கும்தான்.

இந்நூலை எழுதத் தூண்டிய தருமபுரி திரு.த.பார்த்திபன் அவர் களுக்கு, முதல் நன்றி.

இளம்பூரணர் மற்றும் நச்சினார்க்கினியர் உரைகள், திக்குத் தெரி யாத காட்டின் வழிகாட்டிகள்.

பாவலரேறு பாலசுந்தரனார் எழுதிய உரை, பல சமயங்களில் நூற்பாக்களின் சிக்கல்களை தெளிவுப்படுத்துகின்றன. (நூற்பா 482)

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட தொல்காப்பிய உரைவளம் பரந்த, ஆழ்ந்த நோக்கை உருவாக்கியது. அறிமுகப் படுத்திய முனைவர். ப. வேல்முருகன், மத்தியப் பல்கலைக்கழகம், திருவாரூர் அவர்களுக்குச் சிறப்பான நன்றி.

சுப்பிரமணிய சாஸ்திரி மற்றும் வேங்கடராசுலு ரெட்டியார் அவர்களின் விமரிசன உரைகள், சில நூற்பாக்களுக்கு, புதிய கோணங்களைத் தந்தன.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, எப்பொழுதும் என் துணை நின்றது.

ஆலோசனை வழங்கிய மேற்கூறிய தமிழ் அறிஞர் பெருமக்களை நன்றியுடன் நினைவு கூர்கின்றேன். குறிப்பாக, மேநாள் துணை வேந்தர் முனை. பொற்கோ அவர்களுக்கும், திருவள்ளுவர் பல்கலைக்கழகத் தமிழ்ப்புலத் தலைவர் முனை. ரா.ஜெயராமன் அவர்களுக்கும் சிறப்பு நன்றி.

முன்னுரை தந்த இளைஞர், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்கப்பலகை முனை.சங்கர நாராயணனுக்கு நன்றி.

இயன்றவரை, எழுத்ததிகாரப் பொருள் விளக்கம், எளிமையான தெளிவான நடையில் தரப்பட்டுள்ளது. மாணவர்கள், இனி, தொல்காப்பியத்தை தாங்களே நேரடியாக எதிர்கொள்ள முடியும் என நம்புகிறேன். பேராசிரியர்களுடனான ஆக்கப் பூர்வமான கலந்துரையாடலுக்கும், தமிழ் இலக்கணத்தை, இலக்கியத்தைச் செழுமைப்படுத்துவதற்கும், இந்நூல், அடித்தளமானால், பெரிதும் மகிழ்வேன்.

பிரதியின் சந்திப்பிழைகளைத் திருத்தித் தந்த மொரிசியசு நாட்டு உதவிப் பேராசிரியை முனை. உமா அழகிரி அவர்களுக்கு நன்றி.

அட்டைப் படத்தை உருவாக்க உதவிய என் மகள், நவீனாவிற்கு நன்றி.

என்னுடைய எழுத்துக்கு அயராது ஊக்கம் அளிக்கும் என் மனைவி இலட்சுமி சங்கரன் அவர்களுக்கு, என்றென்றும் நன்றி!

## சொல்

தொல்காப்பியத்தின் இரண்டாம் பகுதியான சொல் அதிகாரம் பொருள் விளக்கத்தை, தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைப்பதில் மகிழ்கிறேன்.

இந்நூலை எழுதத் தூண்டிய தர்மபுரி திரு. த. பார்த்திபன் அவர்களுக்கு, முதல் நன்றி.

இளம்பூரணர் மற்றும் நச்சினார்க்கினியர் உரைகள், திக்குத்

தெரியாத காட்டின் வழிகாட்டிகள்.

பாவலரேறு பாலசுந்தரனார் எழுதிய உரை, பல சமயங்களில் நூற்பாக்களின் சிக்கல்களை தெளிவுப்படுத்துகின்றன. (நூற்பா 482)

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட தொல்காப்பிய உரைவளம் பரந்த, ஆழ்ந்த நோக்கை உருவாக்கியது. அறிமுகப் படுத்திய முனைவர். ப. வேல்முருகன், மத்தியப் பல்கலைக்கழகம், திருவாரூர் அவர்களுக்கு சிறப்பான நன்றி.

சுப்பிரமணிய சாஸ்திரி மற்றும் வேங்கடராசுலு ரெட்டியார் அவர்களின் விமரிசன உரைகள், சில நூற்பாக்களுக்கு, புதியக் கோணங்களைத் தந்தன.

சென்னைப் பல்கலைக்கழக தமிழ்ப் பேரகராதி, எப்பொழுதும் என் துணை நின்றது.

ஆலோசனை வழங்கிய மேற்கூறிய தமிழ் அறிஞர் பெருமக்களை நன்றியுடன் நினைவு கூர்கின்றேன். குறிப்பாக, முனை. பொற்கோ அவர்கள், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு ஓய்வுக்காக வந்தப் போதும், அவரைத் தமிழால் தொல்லை செய்தேன். அவருடைய பொறுமையும் கருணையும் அளவில்லாதது. முனை. ஜெயராமன் அவர்களும் சளைக்காமல் என்னுடைய கேள்விகளுக்கும் முன் வைப்புகளுக்கும் பதிலிறுத்தார். அவர்களுக்கு சிறப்பு நன்றி.

முனை. பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி அவர்களின் பெயரனான மதுரை முனை. பிரணதார்த்தி ஹரன், என்னுடைய எழுத்தையும் கருத்தையும் ஊக்கப்படுத்தினார். அவர்க்கும் நன்றி.

இயன்றவரை, சொல்லதிகாரப் பொருள் விளக்கம், எளிமையான தெளிவான நடையில் தரப்பட்டுள்ளது. மாணவர்கள், இனி, தொல்காப்பியத்தை தாங்களே நேரடியாக எதிர்கொள்ள முடியும் என நம்புகிறேன். பேராசிரியர்களுடனான ஆக்கப் பூர்வமான கலந்துரையாடலுக்கும், தமிழ் இலக்கணத்தை, இலக்கியத்தைச் செழுமைப்படுத்துவதற்கும், இந்நூல், அடித்தளமானால், பெரிதும் மகிழ்வேன்.

வேற்றுமையியலே, தமிழ் மொழியின் இயங்குசக்தியாக உள் ளது. பெயரும், வினையும்கூட வேற்றுமையால்தான் இயக்கம் கொள்கின்றது.

உரியியலும், எச்சவியலும், இங்கு, புதிய பொருண்மைகளைப் பெறுகின்றன.

*அளவையியலும், சட்ட நூலின் கட்டமைப்பு ஒழுங்கமைப்பும் தொல்காப்பியத்தில் பயன்படுத்தி இருப்பது, வியக்கத்தக்கதாகும்.*

*பல பணிகளுக்கிடையில், கருத்துரை வழங்கிய முனை.சங்கர நாராயணனுக்கு நன்றி.*

*பிரதியின் சந்திப்பிழைகளைத் திருத்தித் தந்த மௌரீஷியஸ் நாட்டு உதவிப் பேராசிரியை முனை. உமா அழகிரி அவர்களுக்கு நன்றி.*

*அட்டைப்படத்தை வடிவமைக்க உதவிய என் மகள், நவீனா விற்கு நன்றி.*

*என்னுடைய எழுத்துக்கு அயராது ஊக்கம் அளிக்கும் என் மனைவி இலட்சுமி சங்கரன் அவர்களுக்கு, என்றென்றும் நன்றி!*

# பொருள்

*பொருள் அதிகாரத்தைத் தொடுவதற்கு, சற்று அச்சமாய் இருந்தது. அதில், நிறைய இடைச்செருகல் நிகழ்ந்திருப்பதாய் பலரும் கூறினர். சங்க இலக்கியப் புலமையும் ஆழமாக தேவையாய் இருக்குமே என்று தயங்கினேன்.*

*ஆனால், முனை. சங்கர நாராயணன் மற்றும் பல்லடம் மாணிக்கம் போன்றவர்களின், 'கற்சிலைக்கு கண் திறத்தல் போன்றது, பொருள் அதிகாரத்திற்கு உரை காண்பது' என்றதாலும், சில நூற்பாக்களுக்கு இயல்புரையும், கால உரையும் தேவைப்பட்டதாலும், செய்யுள் இலக்கணத்தை நன்கு அறிந்து, பின்னாளில் பயன்படுத்தலாம் என்ற நினைப்பிலும், தொல்காப்பியம் எனும் சொற்சிலைக்கு கண்ணாம், பொருளதிகாரத்திற்கு உரை எழுதத் துணிந்தேன்.*

*நாடோடி வாழ்க்கை வாழ்ந்த மனிதரிடையில், கைக்கிளை முதலாய் பெருந்திணை இறுதியாய் அனைத்து வகையான அக உணர்வுகளும் கலந்து இருந்தன போலும். அவர்கள், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நிலங்களில், நிலையாய் வாழ முற்பட்டபோது, குறிப்பிட்ட வெவ்வேறு அக உணர்வுகள் அவர்களிடம் முதன்மை பெறத் துவங்கின.*

*நிலத்தின் தன்மை, தட்பவெப்பம், உயிரினங்கள், தாவரங்கள்,*

கருத்துருவங்கள், விளைபொருட்கள், உற்பத்திப் பொருட்கள் ஆகியவை, அவ்வம் மக்களின் அகவாழ்வினையும், புறவாழ் வினையும் நிர்ணயம் செய்தன. அவ்வகையில்தான், ஒவ்வொரு நிலத்திற்கும் சிறப்பான இயல்புகள் நிலைபெற்றன. எனவே, ஒருவரின் தனிமனித வாழ்வையும், சமூக வாழ்வையும், அவருடைய சூழலும் சுற்றுப்புறமும்தான் தீர்மானிக்கின்றன என்பதற்கு, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் தொல் காப்பிய நிலத்திணைப் பகுப்பு, சிறந்த சான்றாகும்.

அகத்திணை உணர்வுகளுக்கும், புறத்திணை செயல்பாடு களுக்கும் இடையிலான, கீழ்காணும் இணையான ஒப்புமை வியக்கத்தக்கதாகும்:

களவு (தலைவியைக் களவாடுதல்) = வெட்சி (பசு மாடுகளை களவு செய்தல்)

உடன்போக்கு, கரணம் (தலைவனுடன் தலைவி உடன்போதல், தலைவியை மீட்கும் முயற்சி, திருமணம்) = கரந்தை (களவாடப்பட்ட பசுக்களை மீட்டல்)

கற்பு (கல் போன்ற உறுதியுடன் தனித்து வாழ்தல், பிரிந்த கணவனை மீட்க முயலுதல்) = வஞ்சி ( உறுதியுடன் நின்றுப் போரிட்டு இழந்த பசுக்களை மீட்டல்)

பிரிவு (கல்வி, தூது, பொருளுக்கானது) = வாகை ( சமூக சாதனைகள்,வெற்றி)

ஊடல் (பிரிந்த மற்றும் மீண்டு வந்த தலைவனுடன் நீண்ட ஊடல்) = உழிஞை (நீண்ட முற்றுகை)

தோல்வி (வாயில்கள் மூலம் தலைவனை மீட்கும் முயற்சி) = நொச்சி (கோட்டைக்குள் போர்)

நிரந்தரப்பிரிவு (அகப்பிரிவுக்கு சூளுரைத்தல்) = நெய்தல். (மடியும் வரையிலான உக்கிரப்போர்)

மேற்கூறிய அகம் மற்றும் புறச் செயல்பாடுகள், எல்லா திணைநிலங்களிலும் நிகழ்ந்தாலும், குறிஞ்சிக்கு புணர்ச்சியும், முல்லைக்கு இருத்தலும், பாலைக்கு பிரிவும், மருதத்திற்கு ஊடலும், நெய்தலுக்கு இரக்கமும் முதன்மையான பண்புகளாகின்றன.

இவை யாவும், ஒருவர் வாழ்விலோ, எல்லோர் வாழ்விலும் நிகழ்வன அல்ல. இவை, எல்லா திணை மாந்தரிடத்தும் இருந்து

தேர்ந்தெடுக்கப்பட்டு, பிரதிநிதித்துவம் செய்யப்பட்ட சமூக அம்சங்கள். இந்நாளிலும், எல்லா சமுதாயங்களிலும் இத்தகைய அம்சங்கள், சற்று மாறிய, வெவ்வேறு வடிவங்களில் உள்ளன.

குறிப்பாக, களவு என்பது வாழ்வு முறை அல்ல. அது, முற்பிறப்பின் தொடர்பால், இப்பிறப்பிலும் உள்ளப்புணர்ச்சி கொண்டோர் மேற்கொள விழைவது. ஆனால், அதை பலவகையிலும் தவிர்க்க முயலப்படுகின்றது. கரணம் முன் நிறுத்தப்படுகின்றது. பிரிவால் ஏற்படும் துன்பத்தையும், கற்பால் ஏற்படும் துயரத்தையும் முன் வைக்கின்றது. இன்றும் நிகழும் பிரிவுகளைத் தடுக்க, உளவியல் வகையான ஆலோசனைகள் தோழர்கள், தோழிகள் மூலமே வருகின்றன.

தோழி மற்றும் தோழனின் தேவை, சுட்டிக்காட்டப்படுகின்றது. நல்லெண்ண தோழியையும், தோழனையும் தேர்வு செய்வது, அவரவர் அறிவையும் பக்குவத்தையும் பொறுத்தது.

நான் அறிந்த வரை, மெய்ப்பாட்டியலில், இடைச்சொருகல் இல்லை. அக உணர்வை உடலால் வெளிப்படுத்துதல், எவ்வாறு படிப்படியாக மேலும் வெளிப்படையாகின்றது என்பதை, மிகவும் நுண்மையாக காட்டப்பட்டுள்ளது.

உவமையியலும், இசைமையும்தான் செய்யுளின் அடிப்படைகள். செய்யுள் இலக்கணத்தின் சீர்களின் தளைகளும், அடிகளின் தொடைகளும், எல்லையில்லா சுதந்திரத்தை படைப்பாளிகளுக்கு வழங்கியுள்ளதை எண்ணி, ஒவ்வொருவரும் ஆனந்தம் அடைய லாம். எவரும் சற்று முயன்றால், கவிஞராகலாம்.

பிசி, முதுமொழி, மந்திரம் போன்ற படைப்பாக்க முயற்சிகள், பெரிதும் மேற்கொள்ளப்பட வேண்டும்.

பல திருத்தங்களைக் கூறிய முனை. செயராமனுக்கு நன்றி.

**சொல்லாக்கியன்**

# முனைவர் கி. சங்கர நாராயணன் முன்னுரைகள்

### உதவிப் பேராசிரியர், சென்னை பல்கலைக்கழகம்

## எழுத்து

சொல்லாக்கியனாரின் கவனம் தொல்காப்பியம் பக்கம் திரும்பியிருப்பது வரவேற்கத்தக்கது. தொல்காப்பியத்திற்கு இன்று வரை எளியவுரை, பதவுரை, தெளிவுரை, ஆராய்ச்சியுரைஎனப்பலஉரைகள் வந்தவண்ணம் உள்ளன. தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற்குப் பொருளும் விளக்கமும் தந்துள்ள சொல்லாக்கியரின் முயற்சி ஒரு வித்தியாசமான அணுகுமுறை. தொடக்கத்தில் இந்த நூலை வாசிக்கும் போது சொல்லாக்கியத்தின் தாக்கம் பிறப்பியல் முழுமைக்கும் இருந்ததைக் கண்ணுற்றேன். இதுதான் நூல் முழுவதும் பிரதிபலிக்கப் போகிறதோ என்ற நினைப்புடன் பயணித்த எனக்குப் பல நூற்பாக்களுக்குச் சொல்லாக்கியர் தந்த விளக்கங்களும் அதற்கு அவர் கூறுகின்ற காரணங்களும் பெரிதும் வியப்பிற்குள்ளாக்கியது. நன்னூலையும் தொல்காப்பியத்தையும் உரைகளுடன் பயின்ற போது அதில் உரையாசிரியர்களின் உரை உத்திகளை மட்டும் இனம் கண்டு படித்தேன். என்னுடைய ஆசிரியர்களும் அவ்வாறே இலக்கணத்தை கற்பித்தார்கள். நானும் அவ்வாறுதான் என் மாணாக்கர்களுக்கும் கற்பிக்கத் தொடங்கினேன். பனுவலை வாசிக்கும்போது இப்படியும்கூட தொல்காப்பியத்தை அணுக முடியுமா என்ற எண்ணமும் நாம் ஏன் இதை, இவ்வாறு அணுக வில்லை என்றும் நினைத்தேன். அந்த அளவுக்கு இதிலுள்ள சில மாற்றங்கள் என்னை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. நான் பார்த்து வியந்த சிலவற்றை உங்கள் பார்வைக்காக..,

* *ஆய்தக்குறுக்கத்தை அகர குறுக்கம் எனல். அகரம் முதலாக இருந்தும், அக் என மெய்யோடு சேர்ந்ததால், இகரத்திற்கும் உகரத்திற்கும் அடுத்து இறுதியாகக் கூறப்பட்டிருக்க வேண்டும் (நூ.2)*

* *மகரத்தின் மேலே ஒருபுள்ளியும் உள்ளே ஒரு புள்ளியும் இருக்க வாய்ப்பில்லை. மகரத்தின் உள்ளே மட்டும் புள்ளி இருக்கலாம் (நூ.14)*

* *கேண்மியா, உண்மியா, இருமியா என்ற சொற்களின் சேர்க்கைக் கான காரணங்கள் (நூ.34)*

* *முன் என்ற கிளவி இல்லொடு முடிதல் – முன்றில் என்பதற்கு 'முன்பைக்காட்டிலும்' என்ற புதிய பொருளை வருவித்தல் (நூ.356)*

* *ஒன்று என்பது ஒரு எனத் திரிந்தது பேச்சுமொழி வழக்கு என்பதாலா? எனின் அதற்கு ஏன் இலக்கணம் கூறப்படவில்லை (நூ.200)*

* *திசைப்பெயர் புணர்ச்சியில் கிழக்கண், மேற்கண், வடக்கண், தெற்கண் (நூ.202)*

* *ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, எட்டு ஆகிய ஆறு எண்களின் இறுதிக் குற்றியலுகரம் இல்லாமல் போக வேண்டும் (நூ.438)*

* *இயும், ய்யும் சொல்லின் இறுதியில் ஒலிப்பில் சமமானவை (நூ.58)*

* *பொருளைத் தெளிவாக்க, எளிமையாக்க, உறுதியாக்க ஒற்றுக்கள் மிகுகின்றன என்பதைப் பல இடங்களில் சான்றுகளுடன் எடுத்துரைத்தல் (நூ.241)*

* *அதான்று என வந்தால், எச்சொல் எதனுடன் புணர்ந்தது என்றும் குழப்பம் ஏற்படும். இதைத் தவிர்க்கவே அகரம் கூடியது எனச் சுட்டுதல் (நூ.259)*

* *அடூஉக்களம் என்ற சொல்லைப் பிரிக்கும் முறைமை:*

*அடுகளம் என்றால் அடுக்களம் என்று பொருள்படும். அடுஊக்களம் என்றால் சமைக்கும் தசைக்களம் எனப் பொருள்படும். அடூஉக்களம் என்று உகரம் இணைத்துப் புணர்ந்தால் தான் போர்க்களத்தைக் குறிக்கும் என்று உ என்ற*

சொல்லைச் சேர்க்காமல் இருந்தால் ஏற்படும் பொருள் மாற்றத்தினையும் குழப்பத்தினையும் தெள்ளிதின் தெளிவாக விளக்குகிறார் சொல்லாக்கியனார் (நூ.268)

• புணர்ச்சியில் நேரும் பொருள் குழப்பங்களைத் தீர்க்க, பொதுவாக நிலைமொழியிலேயே மாற்றங்கள் நிகழ்கின்றன என்பதை நூற்பா 289 வழியாகச் சான்றுடன் எடுத்துரைத்தல்.

• பொருளை வேறுபடுத்தித் தெளிவாக்குவதற்காக அக்குச் சாரியைப் பயன்படுத்தும் நுட்பம் (நூ.385)

• பேச்சின் வேகத்தால் குற்றியலுகரம் அரை மாத்திரையிலிருந்து கால் மாத்திரையாய் குறைதல், பேச்சின் நிதானத்தால் குற்றிய லுகரம் அரை மாத்திரையாய் நிற்றல் (நூ.410).

• ஒரு பகுதி குறைந்த நூறு தொண்ணூறு, ஒரு பகுதி குறைந்த ஆயிரம் தொள்ளாயிரம் என நிறுவுதல் (நூ.445)

இதுபோன்ற பல விரிவான மற்றும் வித்தியாசமான விளக்கங் களுடன் பயணப்பட்டுள்ள இந்நூல் எனக்குள் பல கேள்விகளை எழுப்பியது என்றால் அது மிகையாகாது. பலர் தொல்காப்பியத்தில் இவ்வாறு கைவைப்பது முறையாகாது என்றும், தொல்காப்பியத்தை பழைய உரைகாரர்கள் மற்றும் தொல்காப்பியரின் வழி நின்று அணுகவேண்டும் என்றும் கூறுவர்: கூறலாம். ஆயினும் ஆராய்ச்சி என்பது பல தளங்களில் பல கோணங்களில் விரிந்து செல்லவேண்டும். இவ்வாறு தான் இருக்கவேண்டும் என்பதை விட்டு, இப்படியும் இருக்கலாம் என்ற தளங்களில் விரிய வேண்டும். அதனை இந்நூல் செவ்வனே செய்துள்ளது. இந்நூல் உங்களால் வாசிக்கப்படும்போது உங்களது பார்வைகளையும் பதிவுகளையும் நிச்சயம் நூலாசிரியர்க்குத் தெரிவிக்கவும். அதுவும் இந்நூலை இன்னும் ஒருபடி மேலாக எடுத்துச் செல்லும்.

எழுத்ததிகாரத்திற்கு மாறுபட்ட கோணத்தில் பொருளும் விளக்கமும் தந்துள்ள சொல்லாக்கியனாருக்கு என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்கள். இதன் தொடர்ச்சியாகச் சொல்ல திகாரம், பொருளதிகாரத்திற்கும் பொருளும் விளக்கமும் எழுதப் படவேண்டும் என்ற எனது எண்ணத்தை நான் சொல்லாமலே நூலாசிரியர் நிச்சயம் நிறைவு செய்வார். இப்பனுவலை வாசிக்கும் வாசகர்களே.. விமர்சனங்களை நூலாசிரியருடன் விவாதியுங்கள். நிறைகளைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு எடுத்துரையுங்கள்.. வாசிக்கத் தொடங்குங்களேன்.

# சொல்

சொற்களை உருவாக்கும் நெறிமுறைகளை வகுத்தளித்த சொல்லாக்கியனார், தொல்காப்பியனாரின் சொல்லதிகாரத்தை கையிலெடுத்தது காலத்தின் தேவையாகும். எழுதப்படுவது எழுத்து. சொல்லப்படுவது சொல் என்பார்கள். வரிவடிவம் காலத்திற்குக் காலம் மாறுபடும். ஒலி வடிவம் என்றும் மாறாதது. தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குப் பொருள் விளக்கம் தருவது மட்டும் இந்நூல் மையமல்ல. அது இந்நூலின் விளிம்புநிலையில் தான் உள்ளது. ஏனென்றால் பொருள் விளக்கம் தந்த நூல்களின் எண்ணிக்கை இன்றுவரையில் புற்றீசல்கள் போல பெருகிக்கொண்டே செல்கின்றன. இந்நூல் தொல்காப்பியச் சொல்லதிகாரப் பொருள் விளக்கத்தை மற்றுமொரு தளத்தில் அணுகி, அதன் வழியில் பயணிக்கும் நூலாகும். வெறும் பொருள் விளக்கத்தை மட்டும் படித்து வந்த பலருக்கும் இந்நூல் சற்றும் வித்தியாசமானதுதான். ஆனால் அந்த வித்தியாசம் தான் இந்த நூலை மற்ற பொருள் விளக்க நூல்களிலிருந்து தனித்துவமாக அடையாளம் காணச் செய்கின்றது. இந்நூலில் நான் கண்ட தனித்துவமான சில செய்திகள் பின்வருமாறு,

பெண்பாலிருந்து ஆண்பால் சொற்களை உருவாக்குகின்ற விதிகளை மாற்றி, ஆண்மை பெண்மையாகத் திரிந்ததால் உருவாக்கப்பட்ட சிறப்புப் பெயரே பேடி என்கிறார் (நூ.12).

முதலும் உறுப்பும் தாமாகப் பொருளை வேறுபடுத்தாது. பேசும்போது, சொற்களும் உருபுகளும் எங்கு, எப்படி பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பொருத்தே பொருள் மாறுபடும் (நூ.85).

வயங்கினோர் என்ற சொல்லுக்கு உள்ளும் புறமும் பொருண்மையின் இயல்பை உணர்ந்தோர் என்றும், முதிர்வு என்பதற்கு, மனத்தின் ஓட்டத்தை எதிர்த்துப் பயணித்தால், மனத்தின் இயக்கமும் மூலமும் இடமும் வெளியும் புலப்படும், உணரப்படும். மனத்தின் ஓட்டம், உடலின் இயக்கத்தாலும், புலன்களின் உள்ளீடுகளாலும் தொடர்கின்றது. உடலும் புலன்களும் அசையாமையில் நிலைக்கும்போது, மனக்காலத்தில், அகவெளியில் பின்னோக்கிய பயணத்தில் மனம் நிலைப்படும், உதிரும் என்று பொருள் விளக்கம் தருவது சொல்லாக்கியனாரின் சொல்வளத்தை

எடுத்துக்காட்டுகின்றது.

தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் சேர்ந்து வரும் போது, அதன் பக்கத்தில் வினைச்சொல், திணை மாறி வருவதை தடுப்பதில்லை.

**யானும் எருதும் வருகின்றோம்**
**நாங்களும் பசுக்களும் வருகின்றோம்**

இங்கே,எருதுகளும் பசுக்களும் அஃறிணையாயினும், அவற்றிற்குரிய வினைச்சொல்லுக்குப் பதில், உயர்திணைக்குரிய வினைச்சொற்கள் வந்து, உயர்திணைக்கு முக்கியத்துவம் அளிக்கப் படுகிறது என்கிறார்.

கண் என்னும் ஏழாம் வேற்றுமை உருபு பொதுப்பொருளிலும் சிறப்புப் பொருளிலும் வருவதைச் சுட்டும் சான்றுகள் மிகவும் சிறப்பானது.

**புத்தகம் எங்குள்ளது?**
**வீட்டின்கண் உள்ளது**

**வீட்டில் எங்குள்ளது?**
**வீட்டின் அகத்துள்ளது**
**அகத்தே எங்குள்ளது?**
**படிப்பு அறைக்குள் உள்ளது.**

**அறைக்குள் எங்குள்ளது?**
**பெட்டியின்முன் உள்ளது?**

**பெட்டி எங்குள்ளது?**
**நாற்காலிமேல் உள்ளது.**

**நாற்காலி எங்குள்ளது?**
**கட்டிலின்வலம் உள்ளது.**

என்பதை விளக்கிக் குறிப்பான வேற்றுமைச் சொல்லை அடுத்தும் பொதுவான வேற்றுமைச் சொல் வரும் எனவும் சுட்டுகின்றார்.

பலரை எண்ணும் தனிப்பால் சொற்கள் வராது என்கிறது தொல்காப்பியம். பலரை எண்ணும்போது இருவர், மூவர் என இருபாலரையும் பொதுவாய்க் குறிக்கும் பலர்பால் சொல் வரும் என்பதும்,

உருபுகள் இல்லாமல் சொற்கள் பொருளை வேறுபடுத்தும்

*என்பதும், (கந்தன்நந்தன் வந்தான், கந்தன்மயில் இது)*

*வினையெச்சமானது ஆண்பால், பெண்பால், பொதுப்பால் ஆகியவற்றைக் குறிக்கும் விகுதியின் சேர்க்கையால் வினைப் பெயராகின்றது (நூ.153). எனவே சொல்லை அதன் அடிப்படை அலகுகளாய்ப் பிரித்து, அதன் பொருளையும் தன்மையையும் அறிய முடியும் என்பதும் இவரது மறுவாசிப்பு தளத்தில் நம்மையும் இணைத்துப் பயணிக்கச் செய்யும் சுவடுகளாகும்.*

*உரிச்சொற்கள் திரிந்து வந்த காரணத்தால், பொருண்மை வெளிப்படையாய் தெரியாது. அவற்றின் மூலத்தை ஆழ்ந்து ஆராய்ந்தால் தெரியும் என்கிறார்.*

*சொற்கள் வரிசையாய் சேர்ந்து வந்து ஒரு புதிய கூட்டுப் பொருண்மையையும் அளிக்கும் என்பதை நிரல்நிரையில் விளக் குதல், முன்னிலைச் சொற்களை அடுத்துவரும் வினைச்சொற்கள் நிகழ்காலத்தில் இருந்தால், சொல் குறைந்து வராது என்பதும், உரிச்சொற்களை இசை, குறிப்பு, பண்பு என்ற வகையின் அடிப் படையில் நோக்கிப் பிரித்து விளக்கும் நுட்பமும் இந்நூலின் சிறப்பினை விளக்கும் வலிமையான காரணிகளாகும்.*

*வேற்றுமையியலே, தமிழ் மொழியின் இயங்குசக்தியாக உள்ளது. பெயரும் வினையும்கூட வேற்றுமையால்தான் இயக்கம் கொள்கின்றது. அளவையியலும், சட்ட நூலின் கட்டமைப்பும் ஒழுங்கமைப்பும் தொல்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்ற ஆசிரியரின் பிரதி அணுகுமுறைகள் சற்றும் எதிர்பாராதது வித்தியாசமானது.*

*தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் பொருள் விளக்கத்தை மற்றொரு பரிமாணத்தில் அணுக விரும்புவோர்க்கு இந்நூல் சிறந்த பொக்கிஷம். பலரும் சொல்லாக்கியனாரின் கருத்தில் முரண்படலாம். மாற்றங்களும் வளர்ச்சிகளும் என்றும் மாறாதது. மாற்றங்களுடன் பனுவல்களை வாசிக்கத் தொடங்கினால்தான் வாசிப்பும் அறிவும் அர்த்தப்படும். பழமையில் கால் ஊன்றிப் புதுமையில் திளைத்துத் தமிழ் உலகில் பயணிப்பவர்களுக்கு இப்பிரதி அவரவருள் ஊடாக நின்று பயணிக்கும். நானும் பயணித்துக் கொண்டிருக்கின்றேன். நீங்களும் உங்கள் பயணத்தைத் தொடங்குங்களேன்...*

# பொருள்

எழுத்து, சொல்லிற்குப் பொருளும் விளக்கமும் வழங்கிய சொல்லாக்கியனாரின் தொல்காப்பியப் பயணம் பொருளதிகாரத்தால் முழுமையடைந்தது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தை மாறுபட்ட கோணத்தில் பயணிக்கச் செய்துள்ள சொல்லாக்கியனாரின் பதிவுகளில் சில இதோ உங்களுக்காக,

- உள்ளுறை உவமம் – தென்றல் வந்தது மின்னல் பிளந்தது இடியும் வெடித்தது மழையும் படிந்தது. ஏனை (வெளிப்படை) உவமம் – தென்றலெனத்தான் வந்தான் – ஆனால் மின்னலென நுழைந்தான். (நூ.49)

- கைக்கிளை, பெருந்திணை போன்ற பாலியல் முறைகேடுகளைத் தடுக்க வேண்டுமானால், நாடகம், திரைப்படம், மேடைப்பேச்சு, சமூக கலந்துரையாடல்கள், பொது மக்களின் கருத்துகள் போன்றவை புலன்களை ஒழுங்குபடுத்துவனவாக இருக்கவேண்டும். விளிம்பினர் சுதந்திரம், உரிமை என்ற பெயரில், புலன் கட்டவிழ்த்தலைப் பரப்பக்கூடாது, பாலியல் முறைகேடுகளை ஊக்குவிக்கக்கூடாது. (நூ.56)

- உவமவியலில் உவம உருபுகளுக்குத் தனித்தனியே சான்றாகப் பல்வகை இலக்கியங்களிலிருந்து மேற்கோள் காட்டுவது மரபார்ந்த உரையாசிரியர்களின் உரைமரபுகளை நினைவு கொள்ளச் செய்கிறது.

- மாத்திரை என்பது பெரும் திரை. மயனின் ஐந்திரம்படி, பிரபஞ்சத்தின் தோற்றத்தில், முதலில் வெளிப்படுவது ஒளி. அதன் பின் தோன்றுவது ஒலி. பொருள், இயக்கம், காலம் என அனைத்தும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் வெளிப்படுகின்றன. பெரு வெடிப்புக் கோட்பாட்டிற்கு இயைந்தே இவை இருக்கின்றன. பொருட்கள் உயிராய் மாறி, பல்கிப் பெருகி, இறுதியில் மனம் கொண்ட மனிதனாய் பரிணாம வளர்ச்சி பெறுகின்றது. (நூ.310)

- குறிலிணையில், இரண்டாவது குறில் எழுத்து, உகரமாய் வராமல் இருக்கையில், குற்றியலுகரம், முற்றியலுகரம் ஆகிய இரண்டு வகைகளும், நேர், நிரை ஆகியவற்றுடன் இணங்கி வந்தால், அவை நேர்பு, நிரைபு என்றும்,

பெயர் கொள்ளும்.

- நேரசை, நிரையசை, நேர்பசை, நிரைபசை ஆகிய நான்கில் ஏதேனும் இரண்டு அல்லது மூன்றசைகள் சேர்ந்து, தனி அலகாகப் பிரிவது சீர். (நூ.320)
- உயிரின் தன்மையான இயக்கம் இல்லாததால், உயிர் இல்லாத எழுத்துகளான தனிமெய்களை, சீரின் எழுத்து எண்ணிக்கைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக்கூடாது. (நூ.351)
- பாக்களின் இடையில், பொருத்தமான பொருளுடன், இசைப் பாட்டின் இயல்புடன் வருவது பண்ணத்தி.
- மரபியலில் வரும் இளமைப் பெயர்களுக்கான விளக்கம் சற்றே சிந்தித்தற்குரியது.
- மனம் அதன் இயக்கத் தேவைகளுக்கேற்ப மையத்தில் இருந்து தலையின் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு கோணங்களில் தன் கவனத்தைத் திருப்புகின்றது, குவிக்கின்றது. மனத்தின் புறம் புலன்களின் அறிவுகளே.
- சொல் விளக்கம் தருதல்...

பாங்கர் – தலைவனுக்கு உதவும் நல்லெண்ணம் கொண்ட தோழர்கள்

அம்பல் – அம்பின் செயலைப் போல், இலக்கின் மீது பாய்வது. ஊர்மக்கள் பார்வையாலும், சைகையாலும் களவைப் பரப்புவது

பொய் – கொண்டதை முழுவதுமாய் இருத்துதல்

வழு – புறமும் அகமும் தாழ்ந்து வெளிப்படுதல்

ஐயர் – உயிரை நிலைப்படுத்துபவர், யோகி, ஞானி

மடம் – மௌனம் ஒட்டித் தொடரும் தன்மை.

தரவு – வடிவம் பிரிந்து வெளிப்படுதல்

குட்டி – மெய்யின் புறத்தே ஒட்டித் தொடர்ந்து நிலைப்பது

எருது – உயர்ந்து இருந்து புறத்தே தேகமாய் வெளிப்படுதல்

தமிழ் இலக்கியம் பயின்ற பலர் தொல்காப்பியத்தின் எழுத்

தினையும் சொல்லினையும் செய்யுளியலினையும் தொடக்கூடத் தயங்கும் இக்காலத்தில் தரக்கட்டுப்பாட்டு ஆய்வாளரான சொல் லாக்கியனார் இந்தப் பாதையில் தன்னுடைய பயணத்தை ஆரம் பித்து, தற்சமயம் வெற்றிகரமாக முடித்துள்ளதை எண்ணினால் சொல்வதற்கு வார்த்தைகள் இல.

தொல்காப்பியத்தை அவர் தொட்டநாள் முதல் இன்றுவரையில் அவருக்கு இந்நூல் தொடர்பான பல எதிர்மறையான கருத்துக்களும் சொல்லாடல்களும் வந்தன, வந்து கொண்டிருக்கின்றன, இனியும் வரச்செய்யும் என்பதில் எனக்கு மிகுந்த நம்பிக்கையுண்டு. அவர்கள் எல்லாம் தொல்காப்பித்தை உள்ளதை உள்ளவாறே இருக்கவேண்டும் என்று நினைப்பவர்கள். மாற்றுப்பாதையில் சிந்திக்கவும் பயணிக்கவும் தெரியாதவர்கள். சொல்லாக்கியனாரின் எண்ணத்தை முதலில் புரிந்துகொண்டவர்களே இந்நூலில் தங்களை இணைத்துப் பயணிக்கமுடியும்.

தொல்காப்பியத்தைக் குறைகூறுவதும் அதை தவறு என்று கூறுவதும் இந்நூலின் நோக்கமல்ல. ஆசிரியரின் நோக்கமும் அதுவல்ல. தொல்காப்பியத்தை இந்த வகையிலும் நாம் அணு கலாம் என்ற கருத்தைதான் அவர் முன்வைக்கிறாரே தவிர, தொல்காப்பியம் சொன்னது சரியல்ல. இதுதான் சரி என்னு கூறுவில்லை. அவருடன் இணைந்து பயணிப்பதால் அவருக்கு வருகின்ற எதிர்மறையான சொல்லாடல்களும் என்னுடைய செவிகளிலும் சில நேரம் வந்தடையும்.

மரபினைப் புறந்தள்ளாமல் புதுமையில் மரபினை இணைத்து பயணித்துள்ள நூல் இந்நூல். இந்த நோக்கத்தை அறிந்தவர் களுக்குத்தான் இந்நூல் புரிதலாகும். மற்றவர்களுக்கு இந்நூல் வெற்று காகிதங்கள்தான்.

இந்நூல் சிறக்க: வெற்றிபெற: பயனுற என்னுடைய வாழ்த்துகள்.

பழமைக்குப் பழமையாய்...

புதுமைக்குப் புதுமையாய்...

தொல்காப்பியத்தை அணுக...

புரட்டுங்கள் பிரதியினை...

வாசியுங்கள்...

நம்பிக்கையுடன் இந்நூலை அறிமுகப்படுத்தும்

**சங்கர நாராயணன். கி**

# தொகுப்புரை

'தொல்காப்பியம் – பொருளும் விளக்கமும்' எனும் இந்நூல், 'எழுத்து அதிகாரப் பொருளும் விளக்கமும்', 'சொல் அதிகாரப் பொருளும் விளக்கமும்', 'பொருள் அதிகாரப் பொருளும் விளக்கமும்' என தனித்தனியாக வெளியிடப்பட்ட நூல்களின் தொகுப்பாகும்.

'எழுத்து அதிகாரப் பொருள் விளக்கத்தில், சில மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாக, 43, 44, 45 வது நூற்பாக் களுக்கான விளக்கம் விரிவாக்கப்பட்டுள்ளது. அவை, சொல் பகுப்பாய்வுக்கும், சொல் உருவாக்கத்திற்கும் பயன்படும் என நம்புகின்றேன்.

நூலுக்கு உரிய அணிந்துரை, முன்னுரைகள் ஆகியவற்றுடன், முனை. ஜான் சாமுவேல், ஆசியவியல் நிறுவனம், அளித்த வாழ்த்துரையும் இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளது.

'பொருள் அதிகாரப் பொருளும் விளக்கமும்' நூலுக்கு அணிந்துரை வழங்கிய பேராசிரியர் முனை. ப. மருதநாயகம் அவர்களுக்கும், பல திருத்தங்களைக் கூறிய திருவள்ளுவர் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனை. ரா. செயராமன் அவர்களுக்கும் சிறப்பு நன்றி.

இந்நூலின் துவக்கம் முதல் இறுதி வரை, கருத்துகள் அளித்தும், விவாதங்கள் நிகழ்த்தியும், கடுமையான குற்றச்சாட்டுகள் வைத்தும், ஊக்கம் அளித்தும் உதவிய தமிழ் அறிஞர் பெருமக்கள் அனைவருக்கும் நன்றி.

அட்டையையும், பக்கங்களையும் வடிவமைத்த திரு. ஜீ. முரு கனுக்கும், அச்சாக்கத்திற்கு உதவிய நண்பர் பொன். கதிரவனுக்கும், அச்சிட்ட மணி ஆஃப்செட் சண்முகசுந்தரம் அவர்களுக்கும் நன்றி.

வாழும் தமிழ்!

**சொல்லாக்கியன்**

# துவக்கம்

''தொல்காப்பியம்–எழுத்து அதிகாரப் பொருளும் விளக்கமும்'' எனும் இந்நூலில் வரும் சொல் பகுப்பாய்வுகளின் புரிதலுக்கு, ''சொல்லாக்கியம்'' எனும் நூலின், சில அடிப்படை விதிகளை அறிதல், அவசியமாகும்.

சொல்லாக்கியத்தின் சாரத்தை சுருக்கமாக, இந்நூலுக்கு நேரடி யாகத் தொடர்புள்ள வகையில், கீழ்வருமாறு காணலாம். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்ற தொல்காப் பியத்தின் கூற்றை நாம் அனைவரும் அறிவோம். ஒரு சொல் ஒரு பொருளைக் குறிக்குமானால், சொல்லின் அங்கங்களான எழுத்துகளும், பகுதிப் பொருட்களைக் குறிக்க வேண்டும் அல்லவா? எனவே, ஒவ்வொரு எழுத்துக்கும் தனிப்பொருள் அல்லது பொருட்கள் உண்டு என்பது பெறப்படுகின்றது அல்லவா? எழுத்துகளின் பல்வேறு சேர்க்கையால், பல சொற்கள் உருவா கின்றன, மாறுபட்ட பொருள்களும் வெளிப்படுகின்றன.

அப்படியெனில், ஒவ்வொரு எழுத்துக்குமான பொருள் என்ன? வேறு எந்த மொழியிலும் இல்லாமல், தமிழ் மொழியில் மட்டும், எழுத்துகள் – உயிர் எழுத்துகள், ஆய்த எழுத்து மற்றும் மெய் எழுத்துகள் எனப் பெயரிடப்பட்டதேன்? மொழிக்கு உயிர்போல் இருப்பதால், உயிர் எழுத்து என்கிறோமா? மனித உயிரின் ஒலியாக அல்லது எழுத்தாக இருப்பதால், அப்பெயர் பெற்றதா? அணுவின் தோற்றத்திலிருந்து அண்டத்தின் மாற்றத்தினூடே உயிரின் ஒலி தொடர்கின்றதா? மெய் எழுத்துகள், மொழிக்கு மட்டும் உடலாக இல்லாமல், மனித உடலின் அங்கங்களைக் குறிக்கின்றனவா? ஆய்த எழுத்தின் தன்மை எத்தையது? உயிரும் மெய்யும் இறுகிய தனி இருப்பா?

உயிர் எழுத்தின் தன்மை: உடலும் மனமும் சலனமற்று

*இருக்கையில், ''அ'' எனும் உயிர்அதிர்வு, உடலின் மையத்தில் தோன்றி, இயல்பாகத் தன்னிச்சையாக தொடர்ந்து வெளிப்பட்டுக் கொண்டு உள்ளது. வெளிவரும் காற்றை வெவ்வேறு வகைகளில் இதழ்களாலும், நாக்காலும் தடுக்க முயல்வதன் மூலம், வெவ்வேறு உயிர் எழுத்தொலிகள் உருவாகின்றன. அப்போது உடலின் மையத்திலும் வெவ்வேறு (அகத்தெழு வளியிசை) அழுத்தங்கள் ஏற்படுகின்றன.*

*உயிர், வெளியின் தன்மை உடையது. அதனால்தானோ என்னவோ, தமிழ் உயிர் எழுத்துகளின் குறிகள், வெளியின் தளங்களையும், பரிமாணங்களையும் குறிக்கின்றன.*

*''அ'' எனும் எழுத்தில், புள்ளி அல்லது சுழி எனும் குறி அலகு, அண்ட வெளியில் இருப்பு நிலையையும் துவக்கத்தையும் குறிக் கின்றது. மேல் வளைவும், கீழ் வளைவும் சேர்ந்து ஒரு வட்டத்தை அல்லது கோளத்தை குறிக்கின்றது. படுக்கைக் கோடு உள் – வெளி அச்சையும், செங்குத்துக் கோடு மேல் –கீழ் அச்சையும் குறிக்கின்றன. எனவே, வடிவ இயல்படி, ''அ'' எனும் எழுத்து, இருப்பின் அனைத்துப் பரிமாணங்களையும் குறிக்கின்றது. ''அ'', தனக்குள் துவக்கம் அல்லது மையத்தையும், இருப்பு வெளியையும், பரிமாணத்தையும், உள்இயக்கத்தையும் குறிப்பதாய் உள்ளது. ''அ'', உயிரைச் சுட்டுகின்றது; மொழியின் உயிராய் இருக்கின்றது; மொழியின் அமைப்பை இயக்குகின்றது; அகத்தைக் குறிக்கின்றது. எல்லா எழுத்துகளும், ''அ'' வை வெளிப்படையாகவோ, மறைமுகமாகவோ வெளிப்படுத்தியே எழுகின்றன. (அகர முதல எழுத்தெலாம்)*

*''ஆ'' எனும் எழுத்தில், ஒரு உயிரிலிருந்து இன்னொரு உயிருக் கான புள்ளி அல்லது சுழி, கீழே இறங்குகின்றது. ''அ'' (பசு) என்பதிலிருந்து இன்னொரு ''அ'' (கன்று) வருவதை, ''ஆ'' குறிக்கின்றது. ''ஆ'', ஒன்று மற்றொன்றாய் ஆதலைக் குறிக்கின்றது. ''ஆ'' விலும் ''அ'' உள்ளது.*

*''இ'' எனும் எழுத்தில், ''அ'' வைச் சுற்றி மேலும் ஒரு மேல் வளைவுக் கோடும், கீழ் வளைவுக் கோடும் உள்ளன. இயக்கம் கட்டுப்படுத்தப்பட்டு ஓர் குறிப்பிட்ட வெளியில் உயிர் நிலைக் கொள்கின்றது. ''இ'' உயிருக்கு சற்று முன் இருத்தலைக் குறிக்கின்றது. ''இ'' யிலும் '' அ'' உள்ளது. அகத்திற்கும் புறத்திற்கும் இடையில் உள்ளதைக் குறிக்கின்றது.*

*“ஈ” எனும் எழுத்தில், “இ” யின் ஒற்றுமை சிறிதும் இல்லை, “அ” வின் கூறும் பெரும்பகுதி இல்லை. புள்ளி அல்லது சுழி மட்டும் இரண்டாக உள்ளன. அவை இரணடு இருப்பு நிலைகளைக் குறிப்பதாய் உள்ளன. “ஈ” யிலும் இரண்டு புள்ளிகள் அல்லது சுழிகள், “அ” வில் ஒன்று இருப்பது போல், உள்ளன. ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்வதாய் உள்ளது. இடையில், செங்குத்துக் கோடான தடையும் உள்ளது. அவை தனித் தனியாய் உள்ளதைக் குறிக்கின்றது. ஈதல் அல்லது தருதலைக் குறிக்கின்றது.*

*“உ” எனும் எழுத்தில், புள்ளி, மேல் வளைவுக் கோட்டோடு படுக்கைக் கோடு முன் நீளுகின்றது. அது உயிருக்கு முன் உள்ள புறத்தைக் குறிக்கின்றது. “உ” விலும் “அ” வின் கூறுகளான புள்ளி, மேல் வளைவுக் கோடு மற்றும் படுக்கைக்கோடு உள்ளன.*

*“ஊ” எனும் எழுத்தில், “உ” வின் மேல், “ள” ஏறி பயணிக்கின்றது. “ள” என்பது “ அ” வின் ஒரு பகுதியும், துணைக்கால், “ா” உம் சேர்ந்ததாய் இருக்கலாம். அது உயிரின் இடப்பெயர்ச்சியை அல்லது நீட்சியைக் குறிக்கலாம். மேலும், “ள்” என்பது மிகையைக் குறிப்பது எனச் சற்று நேரத்தில் காண்போம். “ ஊ” என்பது, விரிந்துப்பரவுதலையும், நீள்தொடர்ச்சியையும் குறிக்கும்.*

*“எ” எனும் எழுத்தில், “அ” வின் கூறுகளான புள்ளியும், மேல் வளைவுக் கோடும் இருக்கின்றன. மேல் வளைவுக் கோடு உயர்வதை, செங்குத்துக் கோடு தடுக்கின்றது. “எ” உயர்தலைக் குறிக்கின்றது.*

*“ஏ” எனும் எழுத்தில், தடுக்கும் செங்குத்துக் கோடு இழுக்கப் படுவதால், உயர்வு மேலும் மிகுகின்றது. எனவே, “ஏ” என்பது மிகுந்த உயர்வைச் சுட்டும். அதன் தர்க்கம், புள்ளி உயர்ந்து இடம் பெயர்ந்ததைக் குறிக்கும். எனவே மிகுந்த உயரத்தை, “ஏ” குறிக்கும்.*

*“ஐ” என்பது, “அ” வும் “இ” யும் சேர்ந்த கூட்டு உயிர். இது, உயிரோடு உயிர் சேரும் வியப்பையும், ஒன்று, இருக்கும் வேறொன்றோடு சேர்ந்து ஒன்றாக ஐக்கியமாவதையும் குறிக்கும். (நூற்பா 54. ‘அகர இகரம் ஐகாரம் ஆகும்.’*

*“ஒ” எனும் எழுத்தில், “அ” வும் “உ” வும் சேர்ந்துள்ளன. “அ” அகத்தைக் குறிப்பதாலும், “உ” புறத்தைக் குறிப்பதாலும், “ஒ” அகத்தையும் புறத்தையும் ஒரு சேர குறிக்கும் முழுமையாகும். “ஒ”*

உயிரையும், உயிரை ஒட்டிய புறத்தையும் குறிக்கும்.

"ஓ" என்பது, "ஒ" வின் நீட்சியாதலால், உயிரின் முழுமை உயர்ந்து நீண்டு விரியும் தன்மையை, ஒட்டு மொத்தத்தையும், அனைத்தையும் உள்ளடக்கிய தன்மையைக் குறிக்கும். உயர்ந்து விரிந்து படர்ந்த தன்மையைக் குறிக்கும். விரியும் கோளத்தைக் குறிக்கும். விரிவின் முடிவைக் குறிக்கும்.

"ஔ" எனும் எழுத்தில், "அ" வும், "ஊ" வும் இணைகின்றது. உயிரின் புற நீள் தொடர்ச்சியைக் குறிக்கும். உயிர் புறத்தில் விரிந்து பரவும் தன்மையைக் குறிக்கும். தொல்காப்பியரும், ஞானப்பிரகாச சுவாமி அவர்களும், "ஔ" என்பது "அ" வும் "உ" வும் சேர்ந்ததாய்க் கூறுகின்றனர். "ஔ" வில், "ள" இருப்பதால், "அ" வும் "ஊ" வும் இணைந்து "ஔ" ஆகி இருப்பது தர்க்க ரீதியாகச் சரியாக இருப்பதாய்த் தோன்றுகின்றது. மேலும், குறிப்பில், "ஒ" வின் பொருளுக்கு மாறுபடுகின்றது.

**ஆய்தத்தின் தன்மை:**

"ஃ", இது உயிர் மட்டுமாகவோ, மெய் மட்டுமாகவோ இன்றி, இரண்டும் இணைந்த ஒன்றாக உள்ளது. இரண்டுமற்ற அலியாக இல்லை, இரண்டுமான பெரும் ஆய்தமாய் உள்ளது. 'க், ங், ச், – –, ன்' ஆகிய மெய் எழுத்துகள் வடிவம் பெறக்காரணம், 'ஃ. இந்த 'ஃ' கே 'அ' எனும் உயிரும், 'க்' எனும் மெய்யும் இறுக்கமாய் இணைந்த ஒன்று என்பதால், உயிரின்றி (Outer Dynamics) புற இயக்கமில்லா மெய்யும் அல்லது (Inner Dynamics) தன்னியக்க மெய்யும் உருவாகியே இருக்க முடியாது என்பது தெளிவாகும். அல்லது, ஒவ்வொரு மெய்யிலும் உயிர் மறைமுகமாக, உறைந்து இருக்கின்றது என்பது தெளிவாகும். உடலின் ஒவ்வொரு உறுப்பும் தனித்தனியாக உயிர்ப்பு பெற்று விளங்குவதையும், உடல் முழுமையும் உயிர் பெறுவதையும் சிந்திக்க வேண்டும்.

எனவே, மொழியை மனித சமூக உயிரின் இயக்கம் அல்லது உயிர்ப்பான இயக்கம் எனலாம். உடலின் புற இயக்கத்தையும், மனதையும், அறிவையும் இயக்கும் சக்தியாக, மொழி உள்ளது. ஆன்ம விடுதலைக்கு, மௌனம் எனும் மொழி அழிதலும், அதன் முன் நிபந்தனைகளாக புலனடக்கமும், உடல் அமைதியும், மன அடங்கலும், அறிவின் இடைவெளி இன்மையும் தேவைகளாகின்றன.

### மெய் எழுத்துகளின் தன்மை:

மெய் எழுத்துகள் உடலில் மையம் கொண்டு இயங்கும் இடங்களாக உணரப்படுவன (உதாரணமாக "ங்ங்ங்ங்..." என்று மெல்ல உச்சரிக்கும்போது கழுத்துப்பகுதியில் எங்கே அதிர்வுகள் ஏற்படுகின்றன எனக் கூர்ந்து நோக்குங்கள். அதே போன்று "ச்ச்ச்ச்..."க்கும் செய்து பாருங்கள்), கீழ் வருமாறு:

க் – சிறு நாக்கு தொண்டைத் துளையை அடைக்கும் இடம்.
ங் – தொண்டைச் சங்குப் பகுதி
ச் – தொண்டைக் குழி
ஞ் – தொண்டைக்குக் கீழ் உள்ள மேல் மார்புப் பகுதி
ட் – இடை மார்புப் பகுதி
ண் – மார்புப் பகுதி
த் – கீழ் மார்புப் பகுதி
ந் – நெஞ்சுக் குழி
ப் – வயிற்றுப் பகுதி
ம் – தொப்புள் குழி
ய் – தொப்புள் கீழ் உள்ள வயிற்றுப் பகுதி
ர் – அடி வயிற்றுப் பகுதி
ல் – குதத்திற்கு மேல் உள்ள பகுதி
வ் – குதம்
ழ் – மூலாதாரம் / குண்டலினி
ள் – பெண்குறிப் பகுதி
ற் – விறை
ன் – ஆண்குறிப் பகுதி

### மெய் எழுத்துகளின் பொருள், இடம், இயக்கம், காலத் தன்மை:

மெய்யின் / உடலின் / பொருளின் வெவ்வேறு தன்மைகளைப் பல்வேறு மெய் எழுத்துகள் குறிக்கின்றன.

"க்" எனும் எழுத்து மெய்யையும் பொருண்மையையும் குறிக்கின்றது. முப்பரிமாண வடிவில், ஒருவர் அமர்ந்திருக்கும் நிலையை ஒத்து இருக்கின்றது. அசைவற்ற மனிதர் அல்லது தனிப்பொருளைக் குறிக்கும்.

"ங்" என்பது "ன் + க்" என்பதாலும், "ன்" என்பது சுழிகளின்

நெருக்கத்தால் நெருக்கத்தைக் குறிக்கின்றதாலும், ‘‘ங்’’ என்பது மெய்க்கு / பொருண்மைக்கு நெருக்கமானதைக் குறிக்கும். இடத்தைக் குறிக்கும்.

‘‘ச்‘‘ என்பதில், ‘‘க்‘‘ இன் ஒரு கீழ் வளைவுக்கோடு இல்லாமல், படுக்கைகோடு தடையற்று இருப்பதால், மனிதர் அல்லது பொருளின் இயக்கத்தையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் குறிக்கும். உடல், உயிர், இயக்கம், சத்தம், அதிர்வு போன்றவற்றை, ‘‘ச்‘‘ குறிக்கும்.

‘‘ஞ்’’ என்பது ‘‘ன் + ச்‘‘ என்பதால், இயக்கத்திற்கு நெருக்கமானதைக் குறிக்கும். மிக நெருக்கமான அதிர்வைக் குறிக்கும்.

‘‘ட்’’ என்பதன் வடிவைக் காண்கையில், இருப்பதைச் (செங்குத்துக் கோடு) ஒட்டித் தொடர்வதாக உள்ளது. தொடர்ச்சியை, வெளியின் நீட்சியைக் குறிக்கும்.

‘‘ண்’’ என்பதில், மூன்று சுழிகள் நெருங்கி உள்ளதால், மிகுந்த நெருக்கத்தைக் குறிக்கும். அண்மையை, வெளியின் குறுக்கத்தைக் குறிக்கும்.

‘‘த்’’ என்பது ‘‘க்‘‘ விற்கு கால் முளைத்தது போல் உள்ளதால், இயங்குகின்ற உடல் அல்லது தேகத்தைக் குறிக்கும். தேக உணர்வையும் குறிக்கும்.

‘‘ந்’’ என்பது ‘‘ன் + த்’’ என்பதால், தேகத்தின் நெருக்கத்தை / தேகத்திற்கு நெருக்கமானதைக் குறிக்கும். அகந்தையைக் குறிக்கும்.

‘‘ப்’’ என்பது பாத்திரம் போல் கொள்ளும் தன்மை உடையதாய் உள்ளதால், வெளி, உடல், மூளை, வயிறு, மனம், எண்ணம் போன்றவற்றைக் குறிக்கும்.

‘‘ம்’’ என்பது பாத்திரத்தை மூடியது போல் உள்ளதால், உடல், உயிர், மனம், ஆழ்மனம், மௌனம், அமைதி, ஆன்மா போன்றவற்றைக் குறிக்கும்.

‘‘ய்’’ என்பது ‘‘ப்’’ எனும் பாத்திரத்தின் நடுவில் செங்குத்துக்கோடு இருப்பதால், ஒன்றிலிருந்து பிரிவது எனப் பொருள்படும். ‘‘இ + அ’’ என்பதுதான், ‘‘ய’’ ஆகி இருக்கலாம். எனவே, ‘‘ய்’’ என்பது இருப்பதில் இருந்து உயிர் பெறுதல் என்றோ, உயிர்ப்புடன் இருத்தல் என்றோ பொருள் கொள்ளலாம்.

“ர்” என்பது இருத்தல் என்பதையும், பிரித்தல் / அறுத்தல் என்பதையும் குறிப்பதாய் உள்ளது. “அர், இர், உர், அரம், கரம்” என்ற சொற்களில் இருந்து உய்த்துணர்க.

“ல்” என்பது மேலும் கீழுமான அலை வரிசையைக் குறிக்கும். அதிர்வு, அசைவு, இயக்கம், ஒலி, உயிர்ப்பு, இருப்பு ஆகியனவற்றைக் குறிக்கும்.

“வ்” என்பது “உ + அ” என்பதை வடிவத்தின் அமைப்பிலும் காணமுடியும். “உ” என்பது புறம் என்பதாலும், “அ” என்பது அகம் என்பதாலும், “வ” என்பது “புறம் மற்றும் அகம்“ அல்லது புறமும் அகமும் சேர்ந்து “முழுமை” யைக் குறிக்கும்.

“ழ்” என்பது “ம்” என்பதிலிருந்து வேர் முளைத்தது போல் உள்ளதால், உடல், மனம், ஆன்மா ஆகியனவற்றின் ஆழத்தைக் குறிக்கின்றது. ஆழம், கீழ் என்பதையும் குறிக்கின்றது.

“ள்” என்பது “ல்” என்பதன் நீட்சி / பன்மை. மிகையைக் குறிக்கும். அள், எள், ஒள், அளம், களம், வளம் போன்ற சொற்களிலிருந்து உய்த்துணர்க.

“ற்” என்பது இன்மை, அறுப்பு போன்றவற்றைக் குறிக்கும். அறு, அறம், அற்றம், இற, பற, மற போன்ற சொற்களிலிருந்து உய்த்துணர்க.

“ன்” என்பது இரண்டு சுழிகளின் சேர்ப்பு ஆவதால், நெருக்கத்தைக் குறிக்கும்.

இவ்வாறு, வெளி, பொருள், இணைதல், அதிர்வு, இயக்கம், தூரம், நெருக்கம், காலம், உடல், உயிர், அறிவு, மனம், ஆன்மா, பிரிவு என இருப்பின் தோற்றம், மாற்றம், இருத்தல், மறைவு என்று இருப்பின் அனைத்து அம்சங்களையும் குறிக்கும் நுண் குறிகள் கொண்டது, தமிழ்.

மேலே கூறியதன் அடிப்படையில், சொல் பகுப்புகளைத் தொடர்வோம்.

தொல்காப்பியம் = தொல் + காப்பியம்.

தொல் = த் + ஒல். தேகத்தின் முழுமையான அதிர்வு.

காப்பியம் = காப்பு + இயம். பாதுகாக்கும் தன்மை.

காப்பு = க் + ஆப் + உ. மெய்யை அகவெளியாக்கி வெளிப்படுத்து.

இயம் = இ + அம். நிலைத்த தன்மை.

தொல்காப்பியம் = தேகத்தின் முழுமையான அதிர்வால், மெய் அகவெளியாகி நிலைக்கும் தன்மை. ஞானம் நிலைக்கும் வழி.

இலக்கணம் = இலங்கு + கணம். நிலவுகின்றதன் தொகுதி. தொல்காப்பியம், நிலவிய வழக்கு மற்றும் இலக்கிய நிலைமைகளைத் தொகுத்த, வெறும் ஆவணம் அன்று. மொழியின் எழுத்து, சொல், சமூகப் பயன்பாட்டுப் பொருள் ஆகியவற்றின் வரையறைகளையும், நெறிமுறைகளையும் வகுத்தளித்த ஆய்வு நூல். எனவே, ‘நிலவுகின்றதன் தொகுதி’ எனும் பொருள், இச்சொல்லுக்குப் பொருந்தாது.

இலக்கணம் = இலக்கு + கணம். இலக்கு + அணம். தமிழரின் இலக்கு, வீடுபேறு. கணம் = கண் + அம். நோக்கும் தன்மை. அணம் = அண் + அம். உயிர் மிக நெருங்கிய தன்மை. இலக்கணம் = வீட்டை நோக்கும் தன்மை. வீட்டை, உயிர் மிகநெருங்கும் தன்மை.

# சிறப்புப் பாயிரம்

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம் தொகுத்தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவின் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமையோனே.

**– பனம்பாரனர்.**

வேங்கடம் = வேல் + கடம். வேல்கடம் –> வேன்கடம் –> வேங்கடம்.

வேல் = உள்ளும் புறமும் மிக உயர்ந்து அதிர்தல். கூரிய. காவல்.

கடம் = க் + அட் + அம். பொருண்மை ஒட்டித் தொடரும் தன்மை. மலை.

வேங்கடம் = காவல் மலை. காக்கும் மலை. கூர்மையான மலை.

குமரி = க் + உம் + அரி. பொருண்மையைப் புறத்தே கொண்டு மூடி அறுப்பவள். நிலத்தை அலைகளால் மூடி அரிப்பவள்.

கடல்.

ஆய் = நிலையான உயிர்ப்பானது. கடல்.

வழக்கு = வ் + அழ் + அக் + உ. புறமும் அகமும், முழுமையாய் உயிர்ப்புடன் ஆழ்ந்திருக்கையில், உயிராயும், மெய்யாயும், உயிர்மெய்யாயும் வெளிப்படுதல். எழுத்து. அடிப்படை. மரபு. பழமை.

செய்யுள் = செய் + உள். படைப்பு. புதுமை. சொல்லாக்கம்.

சொல் = ச் + ஒல். இயக்கத்தின் முழுமையான அதிர்வு.

நாடி = நெருங்கித் தொடர்ந்து. ஆய்ந்து.

சிவணிய நிலத்தொடு = சேர்ந்த திணையுடன்.

முந்துநூல் = முதல் நூல். எழுத்து. சிறப்பு நூல். பழைய நூல்கள்.

கண்டு = ஆராய்ந்து.

முறைப்பட = அமைப்பு ஒழுங்குடன்.

புலம் = புல் + அம். படைப்பு துறை, வகை.

போக்கறு = போக்கு + அறு. வீணாகும் படைப்பு ஆற்றலைத் தடுத்தல்.

பனுவல் = பல் + நுவல். பல கோணங்களில் இருந்து வெளிப் படுத்தல்.

அறங்கரை = அறம் + கரை. அறத்தில் கரைந்த. அறத்தின் எல்லை.

நான்மறை = நான்கு மறை. அறம், பொருள், இன்பம், வீடு.

முற்றிய = முற்று + இயம். முடிவான தன்மை.

அதங்கோட்டு = அதம் + கோடு. பள்ளத்தாக்கு மலை.

ஆசாற்கு = ஆசானுக்கு

அரில்தப = அரில் + தப. அரில் = அர் + இல். பிரிதல் இல்லாமை. முழுமை. வெறுமை. தப = த் + அ + ப் + அ. உயிர்ப்புற்ற தேகம், உயிர்ப்புற்ற அகம்.

மயங்கா = மாறா

மல்குநீர் வரைப்பு = மிகுந்த நீரை, கடலை எல்லையாய்

கொண்டது. இலங்கை.

ஐந்திரம் = ஐந்து + திரம். திரம் = த் + இர் + அம். தேகம் நிலைத்து இருக்கும் தன்மை. கலைகள். ஐந்திரம் = ஐந்து கலைகள், இயல் (மண்), இசை (நீர்), நாடகம் (காற்று), ஓவியம் (தீ), சிற்பம் (வெளி).

பல்புகழ் = பல சிறப்பு.

நிறுத்த = நிலைபெற

படிமையோன் = படிமை + ஓன். அகவெளியாய்த் தொடர்ந்து நிலைத்து இறுகி ஒன்றானவன்.

பனம்பாரனார் = பனம் + பார் + அன் + ஆர். பனை உலகத்தவர். தெற்கு அல்லது இலங்கை நாட்டவர்.

வடக்கே, வேல் போன்ற கூரிய காவல் காக்கும் மலைகளையும், தெற்கே, நிலத்தை அலைகளால் மூடி அரிக்கும் குமரிக்கடலையும் கொண்டு, கிழக்கிலும் மேற்கிலும், நிலையாய் உயிர்ப்புடன் இயங்கும் கடல்களுக்கு இடையில் உள்ள, தமிழ் பேசுகின்ற நல்ல மக்களிடையில் நிலவும், மரபு மற்றும் புதுமை ஆகிய இரண்டு அடிப்படைகளின் எழுத்து, சொல் மற்றும் பொருளை ஆராய்ந்து, செந்தமிழின் (உயிர்) இயல்பு, ஐந்து (உடல்) நிலத்திணைகளுடன் கலந்த தன்மைகளை, நிலவுகின்ற நூல்களில் ஆராய்ந்து, முதல் நூலாக உருவாக்கி, அமைப்பு ஒழுங்குடன் சிந்தித்து, வகைப் படுத்தித் தொகுத்து, வீணாகும் படைப்பு ஆற்றலைத் தடுத்து, பல கோணங்களில் இருந்து வெளிப்படுத்தி, நிலத்தைப் பரிசாகத் தரும் செல்வம் நிலைப்பெற்ற பாண்டியன் அவையில் அரங்கேற்றி, அறத்தில் கரைந்து மௌனமான, அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு மறைகளின் முடிவான தன்மையான, பள்ளத்தாக்கைக் கொண்ட மலையில் வாழும் ஆசிரியனுக்குக் காணிக்கையாக்கி, முழுமையை உடலாலும் உள்ளத்தாலும் உணர்ந்து, மாறாத வரலாற்றைக் கொண்ட எழுத்து முறையை விளக்கி, இலங்கையின் ஐந்து கலைகளையும் உள்ளடக்கிய ஐந்திரத்தின் அடிப்படையில், படைப்பின் பெயரையே ஆக்கியோன் பெயராக உருவாக்கி, பல சிறப்பு நிலைப்பெறச் செய்தான், அகவெளியாய்த் தொடர்ந்து நிலைத்து இறுகி ஒன்றான, இறைவன்.

தொல்காப்பியர் காலத்தில், பாயிரம், வழக்கில் இல்லை என்பதால், பிற்காலத்தில், இச்சிறப்புப் பாயிரம், தொல்காப்பியத்தை

விரும்பிக் கற்ற பனம்பாரனரால் இயற்றப் பட்டிருக்க வேண்டும். பாயிர இலக்கணங்களுக்கு உட்பட்டு இருந்தமையால், பின்னாளில், தொல்காப்பியத்தின் முதலில் வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

# 1. நூன் மரபு

*நூன்மரபு = நூல் + மரபு. நூல் = ன் + ஊல். (துகள்களும், துண்டுகளும்) நெருக்கமாகி நீள்புறத்தே (தொடர்ச்சியாய்) அதிர்வது. அடிப்படை.* (Static Particles becoming Dynamic Strings). *மரபு = ம் + அர் + அப் + உ. (பொது, சமூக) மனத்தில் இருப்பதை / பிரிந்ததைக் கொண்டு வெளிப்படுவது. வழிவழியாய் வந்தது. மாறி வந்தது.*

***எழுத்துகளின் தொகை, வகை, முறை***

***1.*** ***எழுத்தெனப் படுப***
***அகரமுத னகர விறுவாய்***
***முப்பஃதென்ப***
***சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே.***

*எழுத்து = எழு + த் + உ. கீழிருந்து மேலே தேகமாய் / வடிவமாய் வெளிப்படுவது.*

*அலம் = அல் + அம். இல்லாத தன்மை.*

***பொருள்:*** *எழுத்து எனப்படுவன, அகரம் முதல் னகரம் வரையில், முப்பது என்பர், வழக்கமாய் அவற்றைச் சார்ந்து வருகின்ற, மூன்று எழுத்துகளையும் சேர்க்காமல் போனால்.*

***விளக்கம்:*** *உயிர் எழுத்தையும், மெய் எழுத்தையும் சார்ந்து, வழிவழியாய் வருகின்ற மூன்று எழுத்துகளையும் சேர்க்காது விட்டால், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் ஆகிய பதினெட்டு மெய் எழுத்துகளும் சேர்ந்து, மொத்தம் முப்பது எழுத்துகள், என்பர் பெரியோர், அறிஞர்.*

*சார்பெழுத்துகள் இவையெனல்*

**2.** ***அவைதாம்***
***குற்றிய லிகரம் குற்றிய லுகரம்***
***ஆய்தம் என்ற***
***முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.***

*குற்றியலிகரம் = குற்று + இயல் + இகரம். குறுகிய தன்மை யுடைய "இ". அளவும் எடையும் குறைந்த "இ".*

*குற்றியலுகரம் = குற்று + இயல் + உகரம். குறுகிய தன்மையுடைய "உ". அளவும் எடையும் குறைந்த "உ".*

*முப்பால் = மூன்று + பால். மூன்று வகை. உயிர் வகை, மெய் வகை, உயிர்மெய் வகை. அகம், மெய், புறம்.*

***பொருள்:*** *தனி எழுத்துகள் போன்ற அந்த மூன்றுதான், குற்றியல் இகரம், குற்றியல் உகரம், ஆய்தம் என்ற மூன்று வகைப் புள்ளி எழுத்துகளும். (நூற்பாக்கள் 104 மற்றும் 105 ஐ இணைத்துக் கற்க)*

***விளக்கம்:*** *சில சொற்களின் புணர்ச்சியில், இகரத்தின் உச்சரிப் பில், இதழ்கள் பக்க வாட்டில் முழுமையாய் விரியாமல், அளவும் எடையும் குறைந்து, குற்றியலிகரமாய் வெளிப்படும். அதாவது, அரை மாத்திரையாகக் குறைந்து விடுகின்றது. எனவே, தனிமெய்யைப்போல் புள்ளி பெறுகின்றது. முற்றியல் இகரத்–திலிருந்து, குற்றியல் இகரம் உச்சரிப்பில் மாறுபடுகின்றது. அது ஒரு தனி எழுத்தொலி போன்று இருக்கின்றது.*

***எடுத்துக்காட்டு:*** *புணரியல்.*

*அதே போல், சில சொற்களின் புணர்ச்சியில், உகரத்தின் உச்ச ரிப்பில், இதழ்கள் முன்பக்கமாய் முழுமையாய்க் குவியாமல், அளவும் எடையும் குறைந்து குற்றியலுகரமாய் வெளிப்படும். அதாவது, அரை மாத்திரையாகக் குறைந்து விடுகின்றது. எனவே, தனிமெய்யைப்போல் புள்ளி பெறுகின்றது. முற்றியல் உகரத்திலி ருந்து, குற்றியல் உகரம் உச்சரிப்பில் மாறுபடுகின்றது. அது ஒரு தனி எழுத்தொலி போன்று இருக்கின்றது.*

***எடுத்துக்காட்டு:*** *காது.*

*'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி' என்றதால், அது ஆய்த எழுத்தையும், அதன் தனிப்பட்ட எழுத்து வடிவையும், ஒலி*

வடிவத்தையும் குறிக்கும், எனவும் கருதலாம். அம்மூன்று புள்ளி கள், எழுத்தின் மூன்று வகைகளான, உயிர், மெய் மற்றும் உயிர்மெய் வகைகளைக் குறிக்கின்றன என்றே தோன்றுகின்றது. மேலும், ''ஃ'' எனும் ஆய்தத்தைப் பயிற்றுவிக்கும் போது, ''அக்கு'' என்றே உச்சரிக்கின்றோம். அதில்,''அ'' எனும் உயிரும்,''க்'' எனும் மெய்யும், ''கு'' எனும் உயிர்மெய்யும் இருப்பது, மேற்கூறிய கூற்றை வலுப்படுத்துவதாய் உள்ளது. ஆய்தமும், ஒரு தனி எழுத்தொலி போன்று, இரண்டரை மாத்திரை அளவை (அக்கு) அல்லது ஒன்றரை மாத்திரை அளவை (அக்), அரை மாத்திரையாகச் சுருக்கி, வேறொரு ஒலியாக வெளிப்படுத்துகின்றது.

அல்லது

ஆய்தம் என்பது, அ + க். இரண்டும் சேர்ந்து 1 1/2 மாத்திரையி லிருந்து 1/2 மாத்திரையாகச் சுருங்கி, ''அ'' விற்கு ஒரு புள்ளியும், ''க்'' இற்கு ஒரு புள்ளியும், தனிமெய்யின் தன்மையுடன் இருப்பதால், மற்றொரு புள்ளியும் சேர்ந்து, மூன்று புள்ளி கொண்ட எழுத்தாகின்றது போலும்.

இச்சார்பு எழுத்துகளை, இகர, உகர, அகர குறுக்கம் எனலாம். உயிர், முதன்மையானது. மெய், இரண்டாம் நிலையுடையது. எனவே தான், அகரம் முதலாக இருந்தும், ''அ + க்'' என மெய்யோடு சேர்ந்ததால், இகரத்திற்கும் உகரத்திற்கும் அடுத்து, ''ஃ'' இறுதியாகக் கூறப்பட்டது போலும்.

**உயிர்க் குற்றெழுத்துகள்**

**3. அவற்றுள்**
**அ இ உ**
**எ ஒ வென்னும் அப்பால் ஐந்தும்**
**ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.**

இசை = இயக்கத்தோடு, சத்தத்தோடு நிலைத்தல். ஒன்று. ஒன்றுதல்.

**பொருள்:** முப்பது எழுத்துகளுள், அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து வகையான ஒலிகளை, ஒரு மாத்திரை அளவில் இசைக்கும், குற்றெழுத்து என்பர்.

**விளக்கம்:** ஒரு மாத்திரை அளவில், மனமும் உடலும் ஒன்றி ஒலிக்கின்ற, அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து தனிப்பட்ட எழுத்துகளை, குற்றெழுத்து என்பர், அறிஞர், பெரியோர்.

அரை மாத்திரை கொண்ட குற்றியல் இகரம், குற்றியல் உகரம், ஆய்தம் ஆகிய ஒலிகளை அடுத்து, ஒரு மாத்திரை கொண்ட அ, இ, உ, எ, ஒ ஆகிய எழுத்தொலிகள், இங்கு கூறப்படுகின்றன.

அ, இ, உ என்பனவற்றை முதன்மையான உயிர் எழுத்துகள் எனலாம்.

எ, ஒ ஆகிய எழுத்துகள் முறையே, இ + அ மற்றும் அ + உ என இரண்டு உயிர் எழுத்துகள், இரண்டறக் கலந்து, இரண்டு மாத்திரைகள் ஒரு மாத்திரையாகி, புதிய உயிர் எழுத்துகளாய் உருவாகின எனலாம்.

### உயிர் நெட்டெழுத்துகள்

**4. ஆ ஈ ஊ ஏ ஐ**
**ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்**
**ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப.**

**பொருள்:** ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழு வகையான ஒலிகளை, இரண்டு மாத்திரை அளவில் இசைக்கும், நெட்டெழுத்து என்பர்.

**விளக்கம்:** ‘‘ஆ’’ எனும் எழுத்தை மெதுவாக ஒலிக்கையில், வாயின் கீழ் தாடை படிப்படியாய்க் கீழ் இறங்கி, இரண்டு கட்டமாய் ஒலிப்பதை, கூர்ந்து கவனித்தால் உணரலாம். முதல் கட்டத்தில், ‘‘அ’’ வின் ஒலியும், அதைத் தொடர்ந்து மேலும் ஒரு ‘‘அ’’ ஒலி நிகழ்வதைக் காணலாம். ‘‘அ’’ என்ற ஒலியின்றி, ‘‘ஆ’’ வை உச்சரிக்க முடியாது.

இதைப் போலவே, ஈ, ஊ, ஏ, ஓ எனும் எழுத்துகளும், அவற்றின் குற்றெழுத்தை இசைக்காமல் ஒலிக்க முடியாது. ஐ, ஔ ஆகிய எழுத்துகள், இரண்டு உயிர் எழுத்துகள், முறையே அ + இ மற்றும் அ + உ/ஊ என இணைந்து இருந்து, அளவில் மாற்றமின்றி, இரண்டு மாத்திரைகள் கொண்ட, புதிய உயிர் எழுத்துகளாய் உருவானவை எனலாம்.

### ஓரெழுத்து மூன்று மாத்திரை பெறாமை

**5. மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே.**

**பொருள்:** மூன்று அளவு அல்லது மூன்று மாத்திரையாக ஒலித்தல், ஓர் எழுத்துக்கு இல்லை.

**விளக்கம்:** உயிர் எழுத்துகள், மெய் எழுத்துகள், உயிர்மெய் எழுத்துகளில், எந்தத் தனியான தமிழ் எழுத்தும், மூன்று மாத்திரை அளவுக்கு உச்சரிக்கப்படுவதில்லை.

அரை மாத்திரையையே அளவாகக் கொண்ட குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஆய்தமும், மூன்று மாத்திரை அளவைக் கொள்ள முடியாதன என்பது வெளிப்படை.

### மூன்று மாத்திரை

**6. நீட்டம் வேண்டின் அவ்வள புடைய**
**கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்.**

**பொருள்:** ஒலியின் நீட்டிப்பு வேண்டி, மூன்று மாத்திரை அளவு கொள்ளச் செய்வதை, கூட்டியெழூஉதல் என்று சொல்வர், கவிஞர்கள்.

**விளக்கம்:** ஒரு கருத்தின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்த ஒலியை நீட்டிக்கலாம். கூட்டியெழுதல் என்பதன் சிறப்பை அல்லது முக்கியத்துவத்தைக் குறிக்க, கூட்டியெழூஉதல் என்று உச்சரிக்கலாம். இதில், “ஊ” எனும் நெட்டெழுத்தின் இரண்டு மாத்திரைகளும், “உ” எனும் குற்றெழுத்தின் ஒரு மாத்திரையும் சேர்ந்து, மூன்று மாத்திரைகளாக, “ழூஉ” வில் ஒருசேர ஒலிக்கின்றது.

### மாத்திரை

**7. கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை**
**நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே.**

மாத்திரை = ம் + ஆத் + இர் + ஐ. மனம் வடிவமாகி இருந்து ஐக்கியமாதல். தனித்த ஒலியாதல். மனமின்றி ஒலி உண்டாகாது. ஒலித்தற்காலம்.

**பொருள்:** நுண்மையாகக் கவனித்து உணர்ந்தவர் கண்டப்படி, கண் இமைக்கும் கால நேரம், இரண்டு கைவிரல்கள் சேர்ந்து ஒலித்துப் பிரியும் கால இடைவெளி, ஆகியனவே மாத்திரை.

## உயிரெழுத்துகள்

**8. ஔகார இறுவாய்ப்**
**பன்னீரெழுத்தும் உயிரென மொழிப.**

***பொருள்:*** *ஔகாரத்தைக் கடைசியாகக் கொண்ட, பன்னிரண்டு எழுத்தையும், உயிர் எனச் சொல்லுவர்.*

***விளக்கம்:*** *அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என ஔகாரத்தை இறுதியாகக் கொண்ட பன்னிரண்டு எழுத்து வரிசையை, உயிர் எனச் சொல்லுவர், அறிஞர், பெரியோர்.*

## மெய்யெழுத்துகள்

**9. னகார இறுவாய்ப்**
**பதினெண் எழுத்தும் 'மெய்' என மொழிப.**

***பொருள்:*** *னகாரத்தைக் கடைசியாய்க் கொண்ட, பதினெட்டு எழுத்தையும், மெய் எனச் சொல்லுவர்.*

***விளக்கம்:*** *க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என, னகாரத்தை இறுதியாய்க் கொண்ட பதினெட்டு எழுத்து வரிசையை, மெய் எனச் சொல்லுவர், அறிஞர், பெரியோர்.*

## உயிர்மெய்யின் மாத்திரை

**10. மெய்யொ டியையினும், உயிரியல் திரியா.**

***பொருள்:*** *மெய்யோடு கலந்தாலும், உயிரின் தன்மை மாறுவதில்லை.*

***விளக்கம்:*** *க் + அ = க. ''க'' எனும் எழுத்தில், ''க்'' எனும் மெய்யுடன், ''அ'' எனும் உயிர் கலந்தாலும், ''க'' வின் ஒலிப்பில், ''அ'' வின் ஒலிக்கும் தன்மை, மாத்திரை அளவு மாறுவதில்லை. உயிர்மெய்யாக ஒலிக்கும்போது, உயிரின் மாத்திரை ஒலியே ஒலிக்கும்.*

## தனிமெய்யின் மாத்திரை

**11. மெய்யின் அளபே, 'அரை' யென மொழிப.**

**பொருள்:** மெய் எழுத்தின் மாத்திரை அளவு, அரை எனச் சொல்லுவர்.

**விளக்கம்:** க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் ஆகிய மெய் எழுத்துகள், ஒலிப்பில், அரை மாத்திரை அளவுடையன என்று அறிஞர், பெரியோர் கூறுவர்.

### சார்பெழுத்துகளின் மாத்திரை

**12. அவ்வியல் நிலையும், ஏனை மூன்றே.**

பொருள்: மற்ற மூன்றுக்கும், அந்த அரை மாத்திரை அளவு நிலையே.

**விளக்கம்:** குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என, மேலே கூறிய சார்பெழுத்துகள் மூன்றுக்கும், அரை மாத்திரையே அளவு.

### மகரக்குறுக்கத்தின் மாத்திரை

**13. அரையளபு குறுகல் மகரம் உடைத்தே**
**இசையிடன் அருகுந் தெரியுங் காலை.**

**பொருள்:** மகரம், அரை அளவு குறுகும் தன்மை உடையது. இசையின் நுணுக்கம் அறிந்தால், இசையில், மகரத்தின் மாத்திரை அளவு, மேலும் குறைந்து இல்லாமல் போகும் தன்மையை அறியலாம்.

**விளக்கம்:** மெய் எழுத்துகள் எல்லாம் அரை மாத்திரை அளவுடையன.''ம்'' உம் அரை மாத்திரை அளவு உடையது. அது, கால் மாத்திரை அளவாகக் குறுகும் தன்மை உடையது. இசையிலோ, ''ம்'' இன் மாத்திரை அளவு, கால் மாத்திரைக்கும் குறைவாகக் குறைந்து கொண்டே சென்று, இல்லாமல் போகும் தன்மையை உடையது.

**எடுத்துக்காட்டு:** போன்ம். உருவாகும்மே.

### மகரக் குறுக்கத்தின் வரிவடிவம்

**14. உட்பெறு புள்ளி உருவா கும்மே.**

***பொருள்:*** *உள்ளே புள்ளி பெற்ற மகரம், மகரக் குறுக்கத்தின் வடிவம் ஆகும்.*

***விளக்கம்:*** *"ம்" எனும் தனிமெய், மகரத்தின் மேலே ஒரு புள்ளியைக் கொண்டுள்ளது. மகரக் குறுக்கமோ, மகரத்தின் உள்ளே புள்ளியைக் கொண்டுள்ளது. இது ஒரு சிறப்புக் குறியீடு.*

*மகரக்குறுக்கத்தின் வடிவம்,*

*என்று இருந்திருக்கலாம்.*

*அடுத்த சூத்திரம், தனிமெய், மேலே புள்ளி பெறும் தன்மையைக் கூறுவதால், மகரக்குறுக்கத்தில் மேலே ஒரு புள்ளியும், உள்ளே ஒரு புள்ளியும் இருப்பதற்கு வாய்ப்பில்லை. மகரத்தின் உள்ளே மட்டும் புள்ளி இருக்கலாம். பழம் இலக்கியங்களிலோ அல்லது கல்வெட்டுக்களிலோ, மகரக்குறுக்கக் குறியீடு இருக்க வாய்ப்புண்டு.*

*பிரணவ மந்திரத்தின், "ம்" ஒலி அடங்குகையிலும், இசையிலும், மகரக்குறுக்கம் பயன்படலாம்.*

### *தனிமெய் புள்ளிபெற்று நிலையல்*

***15. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.***

***பொருள்:*** *தனி மெய்யின் இயல்பு, புள்ளியோடு நிலைத்தல்.*

***விளக்கம்:*** *க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் ஆகிய தனி மெய் எழுத்துகள், மேலே புள்ளியைப் பெறும் தன்மையைக் கொண்டுள்ளன. தனிமெய்கள், இயக்கமின்றி நிலையாய் நிற்கின்றன.*

### *எகர ஒகரங்களும் புள்ளி பெற்று நிலைத்தல்*

***16. எகரத்து ஒகரத் தியற்கையும் அற்றே.***

*பொருள்: எகரமும், ஒகரமும் தனிமெய்யைப் போன்றே, மேலே புள்ளியைப் பெற்று, நிலையாய் நிற்கும் தன்மையைக் கொண்டுள்ளன.*

**விளக்கம்:** எகரமும், ஒகரமும் தனிமெய்யைப் போன்றே, இயக்கமின்றி நிலையாய் நிற்கலாம். எகர, ஒகர எழுத்தொலி, மனதில் தோன்றி, குரலொலியாக வெளிப்படாமல், உடல் முழுதும் பரவி நிலைக்கலாம். இவை, மகரக்குறுக்கமுடன், மந்திரச் சொற்களை உருவாக்கப் பயன்படலாம். மனத்தை நிலைநிறுத்தப் பயன்படலாம்.

**அல்லது**

**16. இகர உகரத் தியற்கையும் அற்றே.**

என வேறு பாடமும் இருக்கலாம்.

**பொருள்:** குற்றியலிகரமும், குற்றியலுகரமும், மெய்யெழுத் துகளைப் போன்று, புள்ளி பெறும் தன்மையைக் கொண்டுள்ளன.

(நன்றி: பாவலரேறு பாலசுந்தரனார் அவர்களுக்கும், முனை. செந்தில்குமார் அவர்களுக்கும்)

**விளக்கம்:** ஆனால், 'குற்றி யல்களி னியற்கையும் அற்றே' என்று கூறி இருந்தால், ஐயம் முழுவதும் அகன்றிருக்கும். இகரமும் உகரமும் முற்றியல்களா அல்லது குற்றியல்களா எனும் வேறொரு ஐயம் எழாது.

**மெய்யும் உயிரும் புணர்தல் / உயிர்மெய்யின் வடிவங்கள்**

**17. புள்ளி யில்லா எல்லா மெய்யும்**
**உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்**
**ஏனை உயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்**
**ஆயீ ரியல உயிர்த்த லாறே.**

**பொருள்:** எல்லா மெய்யின் புள்ளி கொண்ட உருவும், அகர மோடு உயிர்த்துப் புள்ளியில்லா அதே உருவாதலும், மற்றைய உயிர் எழுத்துகளோடு உயிர்த்து, உருவம் திரிதலும், ஆக இரண்டு வழிகளில், மெய்யெழுத்துகள் உயிர் பெறுகின்றன.

**விளக்கம்:** க் + அ = க. "க்" எனும் புள்ளி கொண்ட மெய், அகரத்தோடு உயிர்த்து, சேர்ந்து, புள்ளியில்லா "க" ஆதலும், க் + ஆ = கா. "க்" எனும் புள்ளி கொண்ட மெய், "ஆ" வுடன் உயிர்த்து, சேர்ந்து, "கா" என உருவம் மாறுதலும், "க்" எனும் மெய், இ, ஈ,

உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ போன்ற பிற உயிர்களுடன், உயிர்த்து, சேர்ந்து, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ எனவும் மாறுகின்றது.

இவ்வாறு, புள்ளி கொண்ட மெய்கள், அகரமுடனும் பிற உயிர் எழுத்துகளுடனும் சேர்ந்து, உருவம் மாறியும், உருவம் மாறாமலும், இரண்டு வகைகளில் உயிர்மெய் ஆகின்றன.

### மெய்யின் பின்னது உயிரொலி

***18. மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே.***

***பொருள்:*** உயிர்மெய்யின் ஒலிப்பில், மெய்யின் ஒலியை ஒட்டி உயிரின் ஒலி வெளிப்படும். உயிரொலியின் வெளிப்பாட்டின் ஊடே, மெய் வெளிப்படும்.

***விளக்கம்:*** உடல் தானாக இயங்கும் திறன் அற்றது. உயிருடன் சேர்ந்தே உடல் இயங்குகின்றது. மெய் எழுத்தும் தனித்து இயங்கு வதில்லை. மெய் எழுத்து, உயிர் எழுத்துடன் சேர்ந்து உயிர்ப்பு பெற்று வெளிப்படுகின்றது.

உயிருள்ள உடலில், உயிரும் உடலும் இரண்டறக் கலந்துள்ளது போல், உயிர்மெய் ஒலியில், மெய்யும் உயிரும் இரண்டறக் கலந்துள்ளது. உடலின் இயக்கத்தாலேயே, உடலில் உயிர் இருப் பதை அறிய முடிகின்றது. உயிர்மெய்யின் ஒலிப்பினாலேயே, மெய் உயிர்ப்பு பெற்றதை அறிய முடிகின்றது.

''கா'' எனும் உயிர்மெய்யின் ஒலிப்பில், ''க்'' எனும் மெய்யின் ஒலியை ஒட்டி, இடைவெளியின்றி, ''ஆ'' எனும் உயிர் ஒலி தொடர்ந்து வெளிப்படுகின்றது.

''கா'' எனும் உயிர்மெய்யின் ஒலிப்பில், உயிர் ''ஆ'' வின் ஒலி–யின்றி, ''க்'' எனும் மெய்யின் ஒலி வெளிப்படாது.

### வல்லெழுத்துகள்

***19. வல்லெழுத் தென்ப கசட தபற.***

***பொருள்:*** க, ச, ட, த, ப, ற எனும் மெய்யெழுத்துகளை வலிமையான எழுத்துகள் என்பர்.

***விளக்கம்:*** க், ச், ட், த், ப், ற் என்பனவற்றை மிகுந்த

*அழுத்தத்துடன், வலிமையுடன் உச்சரிக்க வேண்டியுள்ளதால், அவை வலிமையான எழுத்துகள் என்பர் அறிஞர், பெரியோர்.*

### மெல்லெழுத்துகள்

***20. மெல்லெழுத் தென்ப ஙஞண நமன.***

***பொருள்:*** *ங, ஞ, ண, ந, ம, ன எனும் மெய்யெழுத்துகளை மென்மையான எழுத்துகள் என்பர்.*

***விளக்கம்:*** *ங், ஞ், ண், ந், ம், ன் என்பனவற்றைக் குறைந்த அழுத்தமுடன், மென்மையுடன் உச்சரிக்க முடிவதால், அவற்றை மென்மையான எழுத்துகள் என்பர் அறிஞர், பெரியோர்.*

### இடையெழுத்துகள்

***21. இடையெழுத் தென்ப யரல வழள.***

***பொருள்:*** *ய, ர, ல, வ, ழ, ள எனும் மெய்யெழுத்துகளை, வலிமைக்கும் மென்மைக்கும் இடையிலான எழுத்துகள் என்பர்.*

***விளக்கம்:*** *ய், ர், ல், வ், ழ், ள் என்பனவற்றை, வலிமைக்கும் மென்மைக்கும் இடையிலான அழுத்தத்தில் உச்சரிப்பதால், அவற்றை இடை எழுத்துகள் என்பர் அறிஞர், பெரியோர்.*

### தனிமெய்ம் மயக்கத்தின் பெயரும் முறையும்

***22. அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்***
***மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை.***

***பொருள்:*** *அந்த மூன்று ஆறு பதினெட்டு மெய்களும், சொற்களின் இடையில், பிற மெய்களுடன் சேரும் என்பதை, அவற்றை அடுத்துவரும் மெய்யெழுத்துகளை, ஆராய்ந்து பார்க்கின்ற வேளையில் அறியலாம்.*

***விளக்கம்:*** *தனிமெய்கள் (நூற்பா 18 – ல் கூறியவாறு) உயிரோடு மட்டும் சேராமல், சொற்களின் இடையில், பிற மெய்களுடனும் சேரும்.*

***எடுத்துக்காட்டு:***

*கற்க = கற் + க் + அ. ‘ற்’ எனும் தனிமெய்யை அடுத்து, ‘க்‘*

எனும் தனிமெய் வருகின்றது.

**மெய்ம்மயக்கம் ஆமாறு**

**23. ட ற ல ள வென்னும் புள்ளி முன்னர்க்**
**கசப வென்னு மூவெழுத் துரிய.**

**பொருள்:** 'ட், ற், ல், ள்' எனும் மெய் எழுத்துகளை அடுத்து 'க், ச், ப்' எனும் மெய் எழுத்துகள் வந்து மயங்கும்.

**எடுத்துக்காட்டு:**

வெட்கம் = வெட் + க் + அம்.
பயிற்சி = பயிற் + ச் + இ.
நல்க = நல் + க் + அ.
கொள்ப = கொள் + ப் + அ.

**24. அவற்றுள்**
**லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்.**

**பொருள்:** 'ல், ள்' எனும் மெய் எழுத்தை அடுத்து 'ய், வ்' எனும் மெய் எழுத்துகளும் மயங்கும்.

எடுத்துக்காட்டு:

கல்யாணம் = கல் + ய் + ஆணம்.
கள்வன் = கள் + வ் + அன்.

**25. ஙஞண நமன வெனும்புள்ளி முன்னர்த்**
**தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே.**

**பொருள்:** 'ங், ஞ், ண், ந், ம், ன்' எனும் மெய்யெழுத்துகளை அடுத்து, அம்மெய் எழுத்துகளே வரும் தன்மையுடையன.

**எடுத்துக்காட்டு:**

இங்ஙனம் = இங் + ங் + அனம்.
அஞ்ஞனம் = அஞ் + ஞ் + அனம்.
கண்ணன் = கண் + ண் + அன்.

*அம்மன் = அம் + ம் + அன்.*
*நன்னன் = நன் + ன் + அன்.*

**26. அவற்றுள்**
**ணனஃகான் முன்னர்க்**
**கசஞப மயவவ் வேழு முரிய.**

**பொருள்:** சொல்லின் இடையில், 'ண், ன்' ஆகியனவற்றை அடுத்து, 'க், ச், ஞ், ப், ம், ய், வ்' ஆகிய ஏழும் மயங்கும்.

**எடுத்துக்காட்டு:**

*எண்கு = எண் + க் + உ.*
*என்பு = என் + ப் + உ.*
*கண்மாய் = கண் + ம் + ஆய்.*
*தன்மை = தன் + ம் + ஐ.*

**27. ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்**
**யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே.**

**பொருள்:** 'ஞ, ந, ம, வ' எனும் மெய்யெழுத்துகளை அடுத்து, 'ய்', பொருண்மை கொண்டு வராது.

**விளக்கம்:** 'ஞ்ய், ந்ய், ம்ய், வ்ய்' என, சொல்லின் இடையில், இம்மெய் எழுத்துகள் சேர்ந்து வராது.

**28. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.**

**பொருள்:** சொல்லின் இடையில், 'ம்' ஐ அடுத்து, 'வ்' உம் வரும்.

**எடுத்துக்காட்டு:**

*தம்வயம் = தம் + வ் + அயம்.*

**29. யரழ வென்னும் புள்ளி முன்னர்**
**முதலா கெழுத்தும் ஙகரமொடு தோன்றும்.**

**பொருள்:** 'ய், ர், ழ்' என்னும் மெய்யெழுத்துகளை அடுத்து, முதல் ஆகின்ற எழுத்தான 'அ', 'ங்' ஒடு வரும்.

**எடுத்துக்காட்டு:**

*இயங்கு = இய் + அங் + கு.*
*இரங்கு = இர் + அங் + கு*

*முழங்கு = முழ் + அங் + கு.*

**உடனிலை மெய்ம்மயக்கம்**

***30. மெய்ந்நிலைச் சுட்டின் எல்லா வெழுத்தும் தம்முன் தாம்வரூஉம் ரழஅலங் கடையே.***

***பொருள்:*** 'மெய்ந்நிலை' போல், பொருண்மையின் தன்மையைச் சுட்டுவதாய் இருந்தால், 'ர், ழ்' எழுத்துகளைத் தவிர்த்து, பிற எல்லா எழுத்தும், தம்முன் தாம் வரும்.

***எடுத்துக்காட்டு:***

கரிக்கால், இங்ஙனம், பச்சிலை, மஞ்ஞை, பட்டை, வண்ணம், தத்தை, செந்நாய், அப்பை, அம்மை, செய்யாள், கொல்லி, செவ்வாய், வெள்ளி, கொற்றவை, கன்னி.

**சுட்டிடைச் சொற்கள்**

***31. அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு.***

***பொருள்:*** 'அ, இ, உ', ஆகிய மூன்றும் அந்த, இந்த, உந்த என அருகில், இடையில், தொலைவில் உள்ள பொருண்மையைக் குறிக்கும்.

***எடுத்துக்காட்டு:***

அவன், இவன், உவன். அது, இது, உது. அங்கு, இங்கு, உங்கு.

**வினா இடைச் சொற்கள்**

***32. ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா.***

***பொருள்:*** 'ஆ, ஏ, ஓ' ஆகிய மூன்று எழுத்துகளும் கேள்விக்கு உரியன.

***எடுத்துக்காட்டு:***

*அது + ஆ = அதுவா? அதா? அவன் + ஆ = அவனா?*

*அது + ஏ = அதுவே? அதே? அவன் + ஏ = அவனே?*
*அது + ஓ = அதுவோ? அதோ? அவன் + ஓ = அவனோ?*

**எழுத்துகள் தம் மாத்திரையின் நீண்டிசைக்கும் இடம்**

***33. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்***
***உளவென மொழிப இசையொடு சிவணிய***
***நரம்பின் மறைய என்மனார் புலவர்.***

***பொருள்:*** *உயிர், உயிர்மெய் எழுத்துகள், தம் ஒரு அல்லது இரண்டு மாத்திரை அளவு கடந்து ஒலித்தலும், தனிமெய் எழுத்துகள், தம் அரை மாத்திரை அளவு கடந்து ஒலித்தலும், இசைநூலுடன் பொருந்திய யாழ்நூலில் உள்ளது எனச் சொல்லுவர், புலவர்.*

***விளக்கம்:*** *அ.., ஆ.., இ.., ஈ.., உ.., ஊ.., எ.., ஏ.., ஐ.., ஒ.., ஓ.., ஔ.. போன்ற உயிர் எழுத்துகளும், ச, ரி, க, ம, ப, த, நி, சா..., ரீ..., கா..., மா..., பா..., தா...,நீ... போன்ற உயிர்மெய் எழுத்துகளும், ங்ங்ங்..., ஞ்ஞ்ஞ்..., ண்ண்ண்..., ம்ம்ம்..., ய்ய்ய்..., ல்ல்ல்... போன்ற தனிமெய் எழுத்துகளும் தம் மாத்திரை அளவு கடந்து ஒலித்தல், இசையிலும் யாழிலும் உள்ளது என்பர், இயல்பை அறிந்தவர்.*

# 2. மொழி மரபு

**ஒருமொழிக் குற்றியலிகரம்**

> ***34. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்***
> ***யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு***
> ***ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.***

*சினை = இணை*

*மிசை = முன்னால். இசைத்தல்.*

*அசை = அ + சை. அ, நேர்மறையானால், உயிர்ப்பான இயக்கம். அ, எதிர்மறையானால், உயிர்ப்பற்ற இயக்கம். பகுதிப் பொருண்மை உடையது. தனித்து முழுமையான பொருண்மை அற்றது.*

***பொருள்:*** அரை அளவு மாத்திரை கொண்ட இகரம், அதனுடன் இணையும் *'யா'* வின் முன் இசையாது நிற்க வேண்டும். நிலை மொழியான உரைச் சொல், *"இயா"* எனும் அசைச் சொல்லுடன் சேரும் இடத்தில், 'ம்', மெல்ல இடையில் ஊர்ந்து வரும்.

***விளக்கம்:*** "கேள்" எனும் உரைச்சொல், *"இயா"* எனும் அசைச்சொல்லுடன் சேரும் இடத்தில், "ம்" எனும் ஒலி, அவ்விரு சொற்களுக்கும் இடையில் வரும்.

இ + அ = ய என ஆகின்றது. எனவே, 'இயா' என ஒலிக்கும் போது, முழுமையான இகரத்தை ஒலித்தால், 'ஈயா' என குழப்பம் வரும். எனவே, இகரம் குன்றுகின்றது.

கேள் + ம் + இயா = கேண்மியா.

**குற்றியலிகரம் புணர்மொழியில் வருதல்**

**35. புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே**
**உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.**

*இச்சூத்திரமும் குற்றியலிகரத்தைப் பற்றியது.*

*பொருள்: ஒரு சொல்லும், இகரத்தை உடைய மற்றோர் சொல்லும் இணையும் போது, நடுவில் உள்ள எழுத்துகள் மாத்திரை அளவில் குறையும் தன்மை உடையது. உற்றுக் கவனித்தால், அது சொல்லின் இரண்டாம் பகுதியில் தோன்றும்.*

*விளக்கம்: புணர் + இயல் எனும் இரண்டு சொற்கள் இணைந்து, புணரியல் என்றாகின்றது.*

*''புணரியல்'' என்பதை உச்சரிக்கும்போது, உற்றுக் கவனித்தால், இச்சொல்லின் இரண்டாம் பகுதியான ''இயல்'' இல், இகரத்தில் தான், 1/2 மாத்திரை குறைகின்றது என்பதை உணரலாம்.*

*இங்கும், 'இ' யை அடுத்து, 'ய' வருகின்றது.*

*'யகரம் வருவழி யிகரங் குறுகும்*
*உகரக் கிளவி துவரத் தோன்றாது'. (நூற்பா 411)*

**ஒருமொழிக் குற்றியலுகரம்**

**36. நெட்டெழுத்து இம்பருந் தொடர்மொழி ஈற்றும்**
**குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.**

*இம்பர் = பின்னர்.*

*ஈற்று = முடிவில்*

*வல்லாறு = ஆறு வல்லின எழுத்துகள்*

*ஊர்ந்து = அடுத்து*

*பொருள்: நெட்டெழுத்தின் பின்னரும், தொடர்மொழியின் முடிவிலும், ஆறு வல்லின எழுத்துகளைத் தொடர்ந்து, உகரம் குறுகிய மாத்திரையுடன் ஒலிக்கும்.*

*விளக்கம்: ஆகு, ஆசு, ஆடு, ஆது, ஆறு, ஈடு, ஈறு, ஊடு, ஊது, ஊறு, ஏகு, ஏசு, ஏடு, ஏது, ஏறு, ஓடு, ஓது, காசு, காடு, காது, சாகு, சாடு, சாது, சாறு, தாது, தாறு, பாகு, பாடு, பாது போன்று நெட்டெழுத்துகளின் பின்பாகவும்,*

அகடு, தகடு, வயிறு, எயிறு, முயிறு போன்ற உயிர்த் தொடர்மொழியின் முடிவிலும்,

அல்கு, தெள்கு போன்ற இடைத் தொடர்மொழியின் முடிவிலும்,

அஃகு, அஃது, இஃது, உஃது, எஃகு, எஃது, கஃசு போன்ற ஆய்தத் தொடர்மொழியின் முடிவிலும்,

கட்டு, கொக்கு, தொக்கு, சுக்கு, திக்கு, பக்கு, பிக்கு, மொக்கு, வக்கு, காய்ப்பு போன்ற வல்லினத் தொடர்மொழியின் முடிவிலும்,

அங்கு, அஞ்சு, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, கொங்கு, மொய்ம்பு போன்ற மெல்லினத் தொடர்மொழியின் முடிவிலும்,

ஆறு வல்லின எழுத்துகளான, 'க், ச், ட், த், ப், ற்', உடன் சேர்ந்து, உகரம் குறுகிய மாத்திரையுடன், அதாவது அரை மாத்திரையுடன், ஒலிக்கும்.

குற்றெழுத்தை அடுத்து வரும் வல்லின உகரங்கள், ஒரு மாத்திரை யுடன் ஒலிக்கும். எடுத்துக்காட்டு: அகு, இசு, உடு, எது, தபு, கறு.

நெட்டெழுத்தை அடுத்தும், தொடர்மொழிகளின் இறுதியிலும் வரும், வல்லின உகரங்கள், அரை மாத்திரையையே பெறுகின்றது. அவை ஒரு மாத்திரையைப் பெற்றால், இடையில், ஒற்றெழுத்தைப் பெற்றது போன்று ஒலித்து, பொருள் மாறுபடும் அல்லது ஒலிப்பது இனிமையற்று, இயல்போட்டமின்றி, கடினமாகி விடும்.

**குற்றியலுகரம் புணர்மொழியில் வருதல்**

***37. இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே***
***கடப்பா டறிந்த புணரிய லான.***

*கடப்பாடு = முறைமை.*

***பொருள்:*** *உகரம் குறுகிய மாத்திரையுடன் ஒலிப்பது, நெட்டெ ழுத்தின் பின்னரும், தொடர்மொழியின் முடிவிலும் மட்டுமல்ல. குற்றியலுகரப் புணரியலில் முறைமைப் படுத்தியவாறு, இரண்டு சொற்கள் இணையும் போது, அவற்றின் இடையிலும், உகரம் குறுகிய மாத்திரையுடன், அதாவது அரை மாத்திரையுடன், ஒலிக்கும் இடங்கள் உண்டு.*

***எடுத்துக்காட்டு:*** *கட்டுத்தறி, செக்குக்கல்.*

*க (1) ட் (1/2) டு (1) = 2 1/2.*

*த (1) றி (1) = 2.*

*க (1) ட் (1/2) டு (1/2) த் (1/2) த (1) றி (1) = 4 1/2.*

*இங்கே, சொற்கள் தனித்து நின்ற போதும், புணர்ச்சியிலும், மொத்த மாத்திரை (4 1/2) ஆக இருக்கின்றது.*

*ஆனால், சொற்களின் புணர்ச்சியில், ''டு'' வில் 1/2 மாத்திரை குறைகின்ற அதே சமயம், தோன்றல் விகாரத்தால், ''த்'' ஆல், 1/2 மாத்திரை கூடுகின்றது. எனவே, மொத்த மாத்திரை (4 1/2) ஆகவே இருக்கின்றது.*

### ஒருமொழி ஆய்தம்

**38. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி**
**உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே.**

**பொருள்:** *குற்றெழுத்தை அடுத்து ஆய்த எழுத்தும், அதை அடுத்து வல்லின உயிர்மெய் எழுத்தும் வரும்.*

**விளக்கம்:** *அ, இ, உ, எ, ஒ, க, கி, கு, கெ, கொ, ச, சி, சு, செ, சொ, இட, இடி, இடு, இடெ, இடொ, த, தி, து, தெ, தொ, ப, பி, பு, பெ, பொ, இற, இறி, இறு, இறெ, இறொ போன்ற குற்றெழுத்தை அடுத்து ஆய்த எழுத்தும், அதை அடுத்து, க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ, ச, சா, சி, சீ, சு, சூ, செ, சே, சை, சொ, சோ, சௌ, ட, டா, டி, டீ, டு, டூ, டெ, டே, டை, டொ, டோ, டௌ, த, தா, தி, தீ, து, தூ, தெ, தே, தை தொ, தோ, தௌ, ப, பா, பி, பீ, பு, பூ, பெ, பே, பை, பொ, போ, பௌ, ற, றா, றி, றீ, று, றூ, றெ, றே, றை, றொ, றோ, றௌ ஆகிய வல்லின உயிர்மெய் எழுத்தும் வரும்.*

*அஃக, அஃகா, அஃகி, அஃகீ, அஃகு, அஃகூ, அஃகெ, அஃகே, அஃகை, அஃகொ, அஃகோ, அஃகௌ, கஃக, கஃகா கஃகி, கஃகீ, கஃகு, கஃகூ, கஃகெ, கஃகே, கஃகை, கஃகொ, கஃகோ, கஃகௌ, அஃது, இஃது, உஃது, எஃது, ஒஃது, அஃச, அஃசா, அஃசி, அஃசீ, அஃசு, அஃசூ, அஃசெ, அஃசே, அஃசை, அஃசொ, அஃசோ, அஃசௌ, அஃட, அஃடா, அஃடி, அஃடீ, அஃடு, அஃடூ, அஃடெ, அஃடே, அஃடை, அஃடொ, அஃடோ, அஃடௌ, அஃத, அஃதா, அஃதி, அஃதீ, அஃதூ, அஃதெ, அஃதே, அஃதை, அஃதொ, அஃதோ, அஃதௌ, அஃப, அஃபா, அஃபி, அஃபீ, அஃபு, அஃபூ, அஃபெ, அஃபே, அஃபை, அஃபொ, அஃபோ, அஃபௌ, அஃற,*

அஃறா, அஃறி, அஃறீ, அஃறு, அஃறூ, அஃறெ, அஃறே, அஃறை, அஃறொ, அஃறோ, இஃக, இஃகி,...................................... என வரும்.

**புணர்மொழியில் ஆய்தம்**

**39. ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்.**

ஈறியல் = ஈறு + இயல். இறுதி, முடிவு தன்மை. சொல்லின் முடிவுத் தன்மை.

மருங்கு = பக்கம்.

இசைமை = ஒலித்தல்.

**பொருள்:** சொல்லின் இடையில் மட்டுமல்ல, சொல்லின் இறுதி இடத்தும் ஆய்தம் ஒலிக்கும்.

**எடுத்துக்காட்டு:** கல் + தீது. கஃறீது.

**ஒருமொழி ஆய்தம் உருவினும் இசையினும் அருகித் தோன்றல்**

**40. உருவினும் இசையினும் அருகித் தோன்றும்**
**மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தி னியலா**
**ஆய்தம் அஃகாக் காலை யான.**

உரு = வரி வடிவ எழுத்து

இசை = ஒலி வடிவம்

அருகி = குறைந்து, எப்பொழுதாவது.

**பொருள்:** ஆய்தம், தன் அரை மாத்திரை அளவில் இருந்து, குறையாததால், பேச்சிலும், இசையிலும் எப்பொழுதாவது தோன்றும், ஆய்தத்தைக் கொண்ட சொல்லின் சுருக்கம் எல்லாம், எழுத்து மொழியில் வெளிப்படுத்த முடியாது.

**நெட்டெழுத்தின்பின் உயிர்க்குறில் அளபெடையாதல்**

**41. குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்**
**நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே.**

**பொருள்:** ஒலி குன்றும் சொல்லின் இடத்தில், நெட்டெழுத்தை

*அடுத்து, அதற்கு ஒத்த குற்றெழுத்து நின்று ஒலிப்பை நிறைவாக்கும்.*

**விளக்கம்:** *ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஓஒ, காக ( கா கா கா க) , கீகி (கீ கீ கீ கி) , கூகு (கூ கூ கூ கு) , கேகெ, கோகொ, சாச, சீசி, சூசு, சேசெ, சோசொ, ....போன்று, சொல்லில் ஒலி குன்றும் இடத்தில், நெட்டெழுத்தை அடுத்து, அதற்கு ஒத்த குற்றெழுத்து வந்து ஒலிப்பை முடித்து வைக்கும்.*

## ஐகார ஔகாரங்கட்கு இகர உகரங்கள் அளபெடையாதல்

**42. ஐஔ என்னும் ஆயீ ரெழுத்திற்கு**
**இகர உகரம் இசைநிறை வாகும்.**

**பொருள்:** *ஐ மற்றும் ஔ ஆகிய இரண்டு நெட்டெழுத்திற்கு, இகரமும், உகரமும் ஒலிப்பை நிறைவு செய்யும்.*

**விளக்கம்:** *அ + இ = ஐ என்றும், அ + உ/ஊ = ஔ என்றும் ஆனதால், அச்சமன்பாடுகளின் இறுதி ஒலியான ''இ'' யும், ''உ''வும், முறையே ஐ, ஔ எனும் நெட்டெழுத்துகளுக்கு அடுத்து ஒலித்து நிறைவு செய்யும்.*

**எடுத்துக்காட்டு:** *ஐஇ, ஔஉ.*

## ஓரெழுத் தொருமொழி

**43. நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி.**

**பொருள்:** *ஏழு நெடில் எழுத்துகள்தான், ஒற்றை எழுத்தாக இருந்து, முழுமையான பொருண்மை தரும். குற்றெழுத்துகள் முழுமையான பொருள் தராது என்பது மறுதலையாக, ஏகாரத்தால், தொக்கி நிற்கின்றது.*

**விளக்கம்:** *ஏழு நெடில் எழுத்துகள்: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.*

*''சூத்திரம் 10. மெய்யொடு இயையினும் உயிரியல் திரியா'', மெய்யோடு இணைந்தாலும், உயிர் தன் இயல்பிலிருந்து மாறாது என்பதாலும், மற்றும் ''சூத்திரம் 18. மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே'', உயிர் உருவாகும் நிலையிலேயே மெய் வெளிப்படுகின்றது என்பதாலும், ''சூத்திரம் 46. மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்'', மெய்யின் இயக்கம் உயிரின் இயக்கமுடன் ஒன்றும் என்பதாலும், உயிர்மெய் நெட்டெழுத்துகளும் ஓர் எழுத்து*

ஒருமொழியாகும்.

*ஒருமொழியாகும் உயிர்மெய் நெட்டெழுத்துகள்:*

*கா, கீ, கூ, கே, கை, கோ, கௌ*
*சா, சீ, சூ, சே, சை, சோ, சௌ*
*ஞா, ஞீ, ஞூ, ஞே, ஞை, ஞோ, ஞௌ*
*தா, தீ, தூ, தே, தை, தோ, தௌ*
*நா, நீ, நூ, நே, நை, நோ, நௌ*
*பா, பீ, பூ, பே, பை, போ, பௌ*
*மா, மீ, மூ, மே, மை, மோ, மௌ*
*யா, யீ, யூ, யே, யை, யோ, யௌ*
*வா, வீ, வூ, வே, வை, வோ, வௌ*

ங், ட், ண், ர், ல், ழ், ள், ற், ன் ஆகியவற்றுடன் உயிர் நெட்டெழுத்து சேர்ந்து, மொழிக்கு முதலில் வராது. தொடர்மொழியின் இடையிலோ இறுதியிலோ வரும். எனவே, அவை ஒருமொழி ஆகாது.

**குற்றெழுத்தும் ஓரெழுத்தொருமொழி யாதல்**

***44.*** **குற்றெழுத்து ஐந்தும் மொழி நிறைபு இலவே.**

இது மேல் நூற்பாவில், மறுதலையாகச் சொன்னதன், நேரடி உரை.

***பொருள்:*** அ, இ, உ, எ, ஒ எனும் குறில் எழுத்துகள் ஐந்தும், ஓரெழுத்து மொழியாயினும், முழுமையான பொருண்மை தராது.

***விளக்கம்:*** குற்றெழுத்துகள் பகுதிப் பொருண்மையைத் தரும் எனலாம். எனவே, இவற்றை, குறைச்சொற்கள் எனலாமா? அப்படி என்றால், குற்றெழுத்துகளின் பகுதிப் பொருள் என்ன?

*உயிர்க்குறில் சேர்ந்த மெய்யெழுத்துகள்:*

*க, கி, கு, கெ, கொ*
*ச, சி, சு, செ, சொ*
*ஞ, ஞி, ஞ், ஞெ, ஞொ*
*த, தி, து, தெ, தொ*
*ந, நி, நு, நெ, நொ*
*ப, பி, பு, பெ, பொ*
*ம, மி, மு, மெ, மொ*
*ய, யி, யு, யெ, யொ*

வ, வி, வு, வெ, வொ

இவையும், பகுதிப் பொருளைத் தருகின்றனவா? அது என்ன? சொல்லின் முதலில் வராத குறில் உயிர்மெய் எழுத்துகள் தொடர்மொழியில், இடையிலோ இறுதியிலோ வரும்.

எனவே, தமிழின் எல்லா உயிர் எழுத்துகளும், உயிர்மெய் எழுத்துகளும், ஒன்று முழு பொருண்மையயோ அல்லது பகுதிப் பொருண்மையோ தருகின்றன என்ற முடிவுக்கு வரலாம்.

க், ங், ...., ன் ஆகிய தனிமெய் எழுத்துகளுக்கு மட்டும் முழு பொருண்மையயோ அல்லது பகுதிப் பொருண்மையோ இருப்பதாக, தொல்காப்பியம் கூறவில்லை.

ஆனால், ''கா'', ''சா'' எனும் ஓரெழுத்து ஒருமொழிகளை, சொற்களை, ''கா = க் + ஆ'', ''சா = ச் + ஆ'' எனப் பிரிக்கலாம் அல்லவா? இரண்டு சொற்களும் வெவ்வேறு பொருளைக் குறிக் கின்றன. இரண்டு பகுப்பிலும், ''ஆ'' என்பது பொதுவாக உள்ளது. ''ஆ'' என்பதற்கு, (ஆதல் எனும்) ஒரு குறிப்பிட்ட பொருண்மை உண்டு என்றால், தருக்க முறையில், ''க்'' என்பதற்கும், ''ச்'' என்பதற்கும், வெவ்வேறு பொருண்மை இருந்தாக வேண்டும் அல்லவா?

எனவே, தனிமெய்களுக்கும் பொருண்மை இருக்க வேண்டும் என்பது பெறப்படுகின்றது அல்லவா?

எல்லா எழுத்தும் பொருள் குறிப்பனவே!

## மொழிகள் மூவகைப்படுதல்

**45. ஓர் எழுத்து ஒருமொழி, ஈர் எழுத்து ஒருமொழி,**
**இரண்டு இறந்து இசைக்கும் தொடர்மொழி உளப்பட,**
**மூன்றே, மொழி நிலை – தோன்றிய நெறியே.**

**பொருள்:** ஓர் எழுத்தாய் இருந்து பொருண்மை தருவதும், இரண்டு எழுத்துகளாய் இருந்து பொருண்மை தருவதும், இரண் டுக்கு மேற்பட்ட எழுத்துகளாய் இருந்து பொருண்மை தருவதும் ஆகிய மூன்று அமைப்புகளே, மொழியின் நிலைகள் எனும் நெறி உருவாகி உள்ளது.

**விளக்கம்:** ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, கா, கீ..., சா, சீ..., வா, வீ..., வை, வெள போன்று பொருண்மை தரும் ஓர் எழுத்துகளும்,

அக், அங், அச், அஞ், அட், அண், அத், அந், அப், அம், அய், அர், அல், அவ், அழ், அற், அன், ஆக், ஆங், ஆச், ஆஞ், ஆட், ஆண், ஆத், ஆந், ஆப், ஆம், ஆய், ஆர், ஆல், ஆவ், ஆழ், ஆள், ஆற், ஆன், இக், இங், இச், இஞ், இட், இண், இத், இந், இப், இம், இய், இர், இல், இவ், இழ், இள், இற், இன், ஈக், ஈங், ஈச், ஈஞ், ஈட், ஈண், ஈத், ஈந், ஈப், ஈம், ஈய், ஈர், ஈல், ஈவ், ஈழ், ஈள், ஈற், ஈன், உக், உங், உச், உஞ், உட், உண், உத், உந், உப், உம், உய், உர், உல், உவ், உழ், உள், உற், உன், ஊக், ஊங், ஊச், ஊஞ், ஊட், ஊண், ஊத், ஊந், ஊப், ஊம், ஊய், ஊர், ஊல், ஊவ், ஊழ், ஊள், ஊற், ஊன், எக், எங், எச், எஞ், எட், எண், எத், எந், எப், எம், எய், எர், எல், எவ், எழ், எள், எற், என், ஏக், ஏங், ஏச், ஏஞ், ஏட், ஏண், ஏத், ஏந், ஏப், ஏம், ஏய், ஏர், ஏல், ஏவ், ஏழ், ஏள், ஏற், ஏன், ஐக், ஐங், ஐச், ஐஞ், ஐட், ஐண், ஐத், ஐந், ஐப், ஐம், ஐய், ஐர், ஐல், ஐவ், ஐழ், ஐள், ஐற், ஐன், ஒக், ஒங், ஒச், ஒஞ், ஒட், ஒண், ஒத், ஒந், ஒப், ஒம், ஒய், ஒர், ஒல், ஒவ், ஒழ், ஒள், ஒற், ஒன், ஓக், ஓங், ஓச், ஓஞ், ஓட், ஓண், ஓத், ஓந், ஓப், ஓம், ஓய், ஓர், ஓல், ஓவ், ஓழ், ஓற், ஓன், ஔக், ஔங், ஔச், ஔஞ், ஔட், ஔண், ஔத், ஔந், ஔப், ஔம், ஔய், ஔர், ஔல், ஔவ், ஔழ், ஔள், ஔற், ஔன் ஆகிய முழுமையான அல்லது பகுதிப் பொருண்மை தரும் இரு எழுத்துகளும்,

அக் + அம் = அகம். அக் + க் + அம் = அக்கம். க் + ஆல் = கால். கால் + அம் = காலம். அ + கால் + அம் = அகாலம். அக் + காலம் = அக்காலம். அக் + இல் + அம் = அகிலம், என முழுமையான அல்லது பகுதிப் பொருண்மை தரும் இரு எழுத்துகளும், முழுமையான அல்லது பகுதிப் பொருண்மை தரும் ஓர் எழுத்துகளும், மெய் எழுத்துகளும் சேர்ந்து, தொடர்மொழிகளாகி, பொருண்மை தருவதும் ஆகிய மூன்றே சொல்லின் அமைப்புகள் உருவாகிய முறைகள்.

### தனிமெய்கள் அகரத்தொடு பொருந்தி இயங்குதல்

***46. மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.***

***பொருள்:*** உயிரோடு முழுமையாய்ப் பொருந்தினால்தான், மெய்யின் இயக்கம் நடைபெறும்.

***விளக்கம்:*** மெய் எழுத்து, உயிர் எழுத்தோடு முழுமையாய்

நெருங்கிப் பொருந்தினால்தான், இயங்க முடியும்.

க், ங், ச், ... , ன் எனும் தனிமெய், தனித்து இயங்கி பொருள் தராது. க் + அ =க, க் + ஆ = கா, க் + இ = கி, க் + ஈ = கீ, .... போன்று, உயிர் எழுத்துகளோடு சேர்ந்தே, மெய் இயங்கி, பகுதிப் பொருண்மையையோ, முழுமைப் பொருண்மையையோ தரும்.

*புறனடை*

**47. தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்**
**மெய்ந்நிலை மயக்க மான மில்லை.**

**பொருள்:** எல்லாத் தனிமெய் எழுத்துகளும், தம்முடைய நிலையான தன்மையிலிருந்து, உயிரோடு பொருந்தி எழுந்து வெளிப்படுகையில், மயங்கி, மாறி வருவது குற்றமில்லை.

**விளக்கம்:** 'க்' முதல் 'ன்' வரையிலான எல்லாத் தனிமெய் எழுத்துகளும், உயிர் எழுத்துகளுடன் சேர்ந்து, தம்முடைய நிலையான தன்மையிலிருந்து, இயங்குகின்ற தன்மையைப் பெறும்போது, அவற்றின் ஒலிவடிவமும், வரிவடிவமும் மாறுவதில் தவறில்லை.

*ஈரொற்று உடனிலை*

**48. யரழ என்னும் மூன்றுமுன் னொற்றக்**
**கசதப ஙஞநம ஈரொற்றாகும்.**

**பொருள்:** 'ய்', 'ர்', 'ழ்' ஆகிய மெய்யெழுத்துகள், நிலைமொழியில் ஈற்றாக இருந்து, க, ச, த, ப, ங, ஞ, ந, ம ஆகிய உயிர்மெய்யெழுத்துகள் வருமொழியின் முதலில் வந்தால், அப்புணர்ச்சியின் இடையில், இரண்டு தனிமெய் எழுத்துகள் அடுத்தடுத்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

வேய் + குழல் = வேய்க்குழல்
நாய் + சத்தம் = நாய்ச்சத்தம்
காய் + தோல் = காய்த்தோல்
சாய் + பலகை = சாய்ப்பலகை
அய் + கரன் = அய்ங்கரன்

*மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம்*
*பொய் + நடை = பொய்ந்நடை*
*மெய் + மதி = மெய்ம்மதி*
*வேர் + கொத்து = வேர்க்கொத்து*
*நார் + சத்து = நார்ச்சத்து*
*வேர் + துளி = வேர்த்துளி*
*வேர் + பலா = வேர்ப்பலா*
*ஆழ் + கிணறு = ஆழ்க்கிணறு*
*ஆழ் + சிந்தை = ஆழ்ச்சிந்தை*
*ஆழ் + தரை = ஆழ்த்தரை*
*ஆழ் + பாதை = ஆழ்ப்பாதை*
*ஆழ் + ஞானம் =ஆழ்ஞ்ஞானம்*
*ஆழ் + நலம் = ஆழ்ந்நலம்*

**ரகார ழகாரங்கள் குற்றொற்று ஆகாமை**

***49. அவற்றுள்***
***ரகார ழகாரங் குற்றொற் றாகா.***

***பொருள்:*** *"ர்" உம் "ழ்" உம் குற்றெழுத்தை அடுத்து தனிமெய்யாய் நிற்காது.*

***விளக்கம்:*** *குற்றெழுத்தை அடுத்து தனிமெய்யாய் நிற்காது. அர், அழ் போல. குற்றெழுத்தை அடுத்து, உயிர்மெய்யாய் வரும். அரு, அழு என்பது போல. நெட்டெழுத்தை அடுத்தும் தனிமெய்யாய் நிற்கும். ஆர், ஆழ் என்பது போல.*

**தொடர்மொழி – நெடிற்கீழ் நின்ற ஒற்று இயல்பாதல்**

***50. குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்***
***தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத் தியல.***

***பொருள்:*** *எழுத்துகளின் குறுகியத் தன்மையையும், நீண்டத் தன்மையையும், உயருந்தன்மையையும், அவற்றின் மாத்திரை அளவை, கணக்கில் கொண்டு வகைப்படுத்தப் படுவதால், தொடர்மொழியெல்லாம், இரண்டு மாத்திரை அல்லது இரண்டு மாத்திரைக்கு மேல் உள்ளதால், அவை நெட்டெழுத்தின் இயல்பை உடையதாகும்.*

***விளக்கம்:*** அ, க போன்றவை ஒரு மாத்திரை அளவு கொண்ட குற்றெழுத்துகள். ஆ, கா போன்றவை இரு மாத்திரை அளவு கொண்ட நெட்டெழுத்துகள். அக, ஆக போன்றவை இரண்டு மற்றும் மூன்று மாத்திரை அளவு கொண்ட தொடர்மொழிகள்.

எனவே தொடர்மொழியை அடுத்து, ''ர்'' மற்றும் ''ழ்'' ஒற்றுகள் வரலாம். அகர், ஆகர், புலவர் போல.

### போலும் என்பது செய்யுளில் போன்ம் ஆதல்

***51. செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்***
***னகார மகாரம் ஈரொற்றாகும்.***

போலி = போல் + இ = போல் இருத்தல்.

***பொருள்:*** செய்யுளின் இறுதியில், ''போல்'' எனும் சொல்லை வைத்தால், ன், ம் ஆகியன அடுத்தடுத்து இரண்டு ஒற்றாக வரும். ''போன்ம்'' என்பது போல்.

***விளக்கம்:*** போல் என முடிவது, உள இயல்புப்படி, தொக்கி நிற்பதாய், முற்றுப் பெறாததாய் இருப்பதால், போல் –> போல்ம் –> போன்ம் என மாறி நிறைவாகின்றது.

''எம்மொடு தம்மைப் பொரூஉங்காற் பொன்னொடு

கூவிளம் பூத்தது போன்ம்''

''வில்லை எடுத்தான் அம்பைத் தொடுத்தான்
நாணை இழுத்தான் விட்டது மின்னல் போன்ம்.''

### மகரமெய் குறுகுதல்

***52. னகாரை முன்னர் மகரங் குறுகும்.***

***பொருள்:*** மேற்கண்ட ''போன்ம்'' என்பதில், ''ன்'' ஐ அடுத்து வரும் ''ம்'' இன் 1/2 மத்திரை குறுகி, 1/4 மாத்திரை ஆகும்.

### எழுத்துகள் மொழியிலும் மாத்திரையிலும் திரியாமை

***53. மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்***
***எழுத்தியல் திரியா என்மனார் புலவர்.***

**பொருள்:** சொல் குறுகி ஒலித்தாலும், வேறு எழுத்தாக ஒலித்தாலும், எழுத்தின் இயல்பு மாறுவதில்லை என்கின்ற மனமுடையவர்கள், எண்ணமுடையவர்கள் புலவர்கள்.

**விளக்கம்:** மேலே கண்ட, ''போன்ம்'' என்பதில், ''ம்'' என்பது தன் 1/2 மாத்திரை அளவிலிருந்து 1/4 மாத்திரையாக குறுகி ஒலித்தாலும், ''ல்'' என்பது, ''ன்'' எனும் வேறு எழுத்தாக ஒலித்தாலும், ''ம்'' இன் வரி வடிவமோ, ''ன்'' இன் மாத்திரை அளவோ மாறுவதில்லை எனும் கருத்துடையவர்கள் புலவர்கள், அறிஞர்கள்.

### போலியெழுத்துகள்

**54. அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

**பொருள்:** அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகும்.

**விளக்கம்:** அ + இ = ஐ. ஐ, 2 மாத்திரை கொண்ட நெட்டெழுத்து.

**55. அகர உகரம் ஒளகாரம் ஆகும்.**

**பொருள்:** அகரமும் உகரமும் சேர்ந்து ஒளகாரம் ஆகும்.

**விளக்கம்:** அ + உ = ஒள. ஒள, 2 மாத்திரை கொண்ட நெட்டெழுத்து.

அ + உ = ஒ ஆகும் எனும் கருத்து உடையதாலும், 'ஊ' வில் இருக்கும் 'ள', 'ஒள' விலும் இருப்பதாலும், அ + ஊ = ஒள ஆகலாம் எனக் கருதுகின்றேன்.

**56. அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்**
**ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.**

**பொருள்:** அகரத்தின் பின்னர் ''ய்'' யும், ''ஐ'' எனும், 'அ' வும் 'இ' யும் இணைந்த (நூற்பா 54) நெட்டெழுத்து, வரிவடிவம் பெறும்.

**விளக்கம்:** ''அ + இ'' மட்டும் ''ஐ'' ஆவதில்லை. ''அ + ய்'' உம் ''ஐ'' ஆகின்றது.

''ஐ'' யும், ''ஒள'' வும், தொல்காப்பியருக்குச் சற்று முந்தைய காலக் கட்டத்தில்தான் வழக்கிற்கு வந்திருக்க வேண்டும். எனவேதான், அவற்றின் பலவித உருவாக்கங்களை விளக்குகின்றார். ''ஐ'' யின் வடிவத்தையும் தெளிவுப் படுத்துகின்றார். ''ஐ'' புதுமை, ஆனால்,

மரபுக்கொத்த மாற்றம், வளர்ச்சி, சிதைவல்ல.

சமூகத்தைப் போலவே மொழியும் உயிர்ப்புடையது. சமூக அங்கங்களின் இடைவினைகளும், பிற சமூகங்களின் பரிவர்த் தனையும், ஈடுபட்டுள்ள மொழிகளிலும் பிரதிபலிக்கும். மாற்ற மும் வளர்ச்சியும், ஏன், சிதைவும் கூட உயிர்ப்புடைய எந்த ஒரு இருப்புக்கும் இயல்பாய் நிகழ்வதுதான்.

மொழியின் அடிப்படையான மரபுக்கொத்த மாற்றத்தை ஏற்றுக்கொள்வதும், வளர்ச்சிகளை உள்வாங்கி, ஒழுங்குபடுத்தி சமூகத்திற்குத் திருத்தி அளிப்பதும், சிதைவு எனும் நோயை முளை யிலேயே கிள்ளி எறிவதும், மொழியைக் காக்கும் உணர்வுப் பூர்வமான அறிஞர்களின் கடமையாகின்றது.

**ஐகாரம் ஒரு மாத்திரையளவு இசைத்தல்**

**57. ஓரள பாகும் இடனுமா ருண்டே**
**தேருங் காலை மொழிவயி னான.**

***பொருள்:*** ஆராய்ந்து பார்த்தால், சொல்லின் சில இடங்களில், 2 மாத்திரை அளவு கொண்ட ஐ, 1 மாத்திரையாகும்.

***விளக்கம்:*** அயிரை = ஐஇரை –> ஐரை (மீன்). ஐயரே –> ஐரே

**யகரத்திற்கு இகரம் போலியாதல்**

**58. இகர யகரம் இறுதி விரவும்.**

***பொருள்:*** ‘‘இ’’ யும் ‘‘ய்’’ யும், சொல்லின் முடிவில் ஒன்று போல் ஒலிக்கும்.

***விளக்கம்:*** இ + அ = ய. இகரமும் அகரமும் சேர்ந்தே யகர மாகியது. தனிமெய்யாக்கிய பிறகு, ய் + அ = ய என மீண்டும் ஆனது. ‘‘இ’’ யும் ‘‘ய்’’ யும் சமமானவை. எவ்வாறு? கீழ் காண்க:

இ + அ = ய. ய – அ = இ.
ய் + அ = ய. ய – அ = ய்.

எனவே, இ = ய்.

‘‘இ’’ யும் ‘‘ய்’’ யும், சொல்லின் இறுதி ஒலிப்பில், சமமானவை.

**எடுத்துக்காட்டு:**

காய், காஇ. நாய், நாஇ.

### உயிர் பன்னிரண்டும் மொழிமுதல் ஆதல்

**59. பன்னீர் உயிரும் மொழி முதலாகும்.**

**பொருள்:** பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், சொல்லின் முதலில் வரும்.

**விளக்கம்:** அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், சொல்லின் முதல் எழுத்தாக வரும்.

**எடுத்துக்காட்டு:** அணில், ஆடு, இலை, ஈக்கள், உரல், ஊசி, எறும்பு, ஏணி, ஐந்து, ஒட்டகம், ஓணான், ஔவை.

### உயிரொடு கூடியல்லது மெய் முதலாகாமை

**60. உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.**

**பொருள்:** உயிர்மெய் இல்லாதவை, சொல்லின் முதலில் வராது.

**விளக்கம்:** உயிரை அடுத்து, சொல்ல வேண்டியது, தனிமெய்யைப் பற்றி. தனிமெய் சொல்லின் முதலில் வராது என்பதையும், உயிர்மெய் சொல்லின் முதலில் வரும் என்பதையும், ஒருச்சேர இங்கே கூறப்பட்டுள்ளது.

''க்அல்'' என தனிமெய், ''க்'', சொல்லின் முதலில் வராது. ''கல்'' என, உயிர்மெய் எழுத்தான ''க'', சொல்லின் முதலில் வரும். எந்தெந்த உயிர்மெய்கள் சொல்லின் முதலில் வரும்? அடுத்த நூற்பாக்களைக் காண்க.

### மொழி முதலாகும் உயிர்மெய்கள்

**61. கதந பமஎனும் ஆவைந் தெழுத்தும்**
**எல்லா உயிரொடுஞ் செல்லுமார் முதலே.**

**பொருள்:** க், த், ந், ப், ம் எனும் அந்த ஐந்து எழுத்துகளும், எல்லா உயிர் எழுத்துகளுடனும் சேர்ந்து, உயிர்மெய் எழுத்தாகி, சொல்லின் முதலில் வரும்.

**விளக்கம்:** க், த், ந், ப், ம் எனும் ஐந்து தனிமெய் எழுத்துகளும், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பன்னிரண்டு உயிர் எழுத்துகளுடனும் சேர்ந்து, க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ, த, தா, தி, தீ, து, தூ, தெ, தே, தை, தொ, தோ, தௌ, ந, நா, நி, நீ, நு, நூ, நெ, நே, நை, நொ, நோ, நௌ, ப, பா, பி, பீ, பு, பூ, பெ, பே, பை, பொ, போ, பௌ, ம, மா, மி, மீ, மு, மூ, மெ, மே, மை, மொ, மோ, மௌ எனும் உயிர்மெய் எழுத்தாகி, சொல்லின் முதலில் வரும்.

எடுத்துக்காட்டு: கடல், காடு, கிளி, கீற்று, குயில், கூவு, கெட்டி, கேளிக்கை, கைகள், கொண்டை, கோயில், கௌதமன்; தங்கை, தாத்தா, திருடன், தீமை, துணி, தூசு, தெற்கு, தேன், தையல், தொட்டி, தோணி, தௌவை; நலம், நாடு, நிலம், நீர், நுங்கு, நூல், நெய்தல், நேயம், நைய, நொய், நோய், நௌவி; பல், பால், பிடி, பீடி, புல், பூண்டு, பெட்டை, பேடி, பையன், பொன், போர், பௌவம்; மண், மான், மின்னல், மீன், முகம், மூடு, மெல்லினம், மேலினம், மையல், மொழி, மோனம், மௌனம்.

**62. சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அஐ ஔஎனும் மூன்றலங் கடையே.**

**பொருள்:** (சகரச் சொற்களும் அவற்றைப் போன்றவையே)''ச்'' எனும் தனிமெய், மேற்கண்டவற்றைப் போலவே, ''அ, ஐ, ஔ'' ஆகியவற்றைத் தவிர, பிற எல்லா உயிர் எழுத்துகளுடனும் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லுக்கு முதலில் வரும்.

**விளக்கம்:** ''ச்'' எனும் தனிமெய், ''க், த், ந், ப், ம்'' யைப் போலவே, ''அ, ஐ, ஔ'' ஆகியவற்றைத் தவிர, பிற எல்லா உயிர் எழுத்துகளுடனும் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லுக்கு முதலில் வரும். ''ச்'' எனும் தனிமெய், அ, ஐ, ஔ ஆகியவற்றுடன் சேர்ந்து, ச, சை, சௌ எனச் சொல்லின் முதலில் வராது. அவை ஏன் தவிர்க்கப்பட்டன? மொழியியல் காரணமா? உளவியல் அல்லது ஆன்மவியல் காரணமா? காலம் கடந்து விட்டது.

இந்நூற்பா, இன்றைக்கு பொருந்தாது. ஏராளமான சொற்களின் முதலில், ''ச, சை, சௌ'' வருகின்றது. சகலம், சங்கம், சச்சரவு, சஞ்சலம், சட்டம், சண்டை, சத்தம், சந்தம், சப்பை, சமம், சயம், சரம், சலம், சவம், சனம்; சைகை, சையம், சைவம், சைனம்; சௌகரியம், சௌபாக்கியம். இந்நூற்பாவைப் பொறுத்து, புதிய இலக்கணம் எழுதப்பட வேண்டும்.

தொல்காப்பியம் முடிவு அல்ல. அது, தொல்காப்பியர் காலக் கட்டத்தில் நிலவிய வழக்கு மற்றும் இலக்கியங்களைப் பொறுத் தும், சமூகங்களைப் பொறுத்துமே எழுதப்பட்டது. பழையன கழிதலும், புதியன புகுதலும், உயிர்ப்புள்ள சமூகத்தின் இருத்தல் மற்றும் வளர்ச்சி நியதிகள். பொருந்தாத பழையன சில உள்ளன என்பதாலேயே, ஒட்டு மொத்த தொல்காப்பியத்தையும் தூக்கி எறிந்துவிடக்கூடாது, புறக்கணித்துவிட முடியாது. தொல்காப்பியம், தமிழ்மொழி இலக்கணத்தின், பழந்தமிழர் வாழ்வின் ஆவணப் பெட்டகம்.

ஒரு சொல், சமூக இயக்கத்தினூடேதான் ஏற்றுக்கொள்ளப் படுகின்றது அல்லது விலக்கப்படுகின்றது. மொழிக்கு, புதிய சொற்கள் செல்வம், அவை ஏற்கனவே உள்ள பெருஞ்செல்வத்தை அரிக்காத வரை. நடைமுறையிலும், இலக்கியத்திலும் சரியான சொற்களை, எளிமையான சொற்களை, பொருள் பொதிந்த சொற்களை, புதிய சொற்களைப் பயன்படுத்துவதன் மூலம், மரபுக்கு ஒவ்வாத சொற்களை, மெல்ல மெல்ல இயல்பாக விலகச் செய்யலாம். வெளிப்படையாக விலக்கும்போது, எதிர்வினை நிகழ்ந்து விடுகின்றது.

***63. உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்***
***வ என் எழுத்தோடு வருத லில்லை.***

***பொருள்:*** “உ, ஊ, ஒ, ஓ” எனும் நான்கு உயிர் எழுத்துகள், “வ்” எனும் மெய்யெழுத்துடன் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வருவதில்லை.

***விளக்கம்:*** “உ, ஊ, ஒ, ஓ” எனும் நான்கு உயிர் எழுத்துகள், “வ்” எனும் மெய்யெழுத்துடன் சேர்ந்து, “வு, வூ, வொ, வோ” என உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வருவதில்லை.

ஏன்? “உ, ஊ, ஒ, ஓ” எனும் எளிமையான எழுத்தும் ஒலியும் இருக்க, அதே ஒலிகளைத் தரும் கடினமான எழுத்துகளான “வு, வூ, வொ, வோ” தேவையா? எளிமை, மொழிக்கு நல்ல குணம். எனவே, மேற்கண்ட விலக்கு.

பிற உயிர் எழுத்துகள், “வ்” உடன் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வரும்.

***எடுத்துக்காட்டு:*** வளம், வாழை, விளக்கு, வீடு, வெற்றி, வேர், வைகறை, வௌவால்.

**64. ஆஎ**
**ஔனும் மூவுயிர் ஞகாரத் துரிய.**

***பொருள்:*** *“ஆ, எ, ஒ” எனும் மூன்று உயிர் எழுத்துகள், “ஞ்” ஓடு சேர்வதற்கு உரியன.*

***விளக்கம்:*** *“ஆ, எ, ஒ” எனும் மூன்று உயிர் எழுத்துகள், “ஞ்” எனும் தனிமெய்யோடு சேர்ந்து, “ஞா, ஞெ, ஞொ” எனும் உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வரும்.*

***எடுத்துக்காட்டு:*** *ஞானம், ஞெகிழி, ஞொள்கு.*

*“அ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ” ஆகிய பிற உயிர் எழுத்துகள், “ஞ்” உடன் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வராது.*

*“ஞயம்பட உரை” என ஆத்திச்சூடியில் உள்ளதே? இந்நூற்பாவிற்கும் மாற்றம் தேவையே.*

**65. ஆவோ டல்லது யகர முதலாது.**

***பொருள்:*** *“ஆ” வோடு அல்லாமல், “ய்” வேறெந்த உயிர் எழுத்துடனும் சேர்ந்து, சொல்லின் முதலில் வராது.*

***விளக்கம்:*** *“ய்” எனும் தனிமெய், “ஆ” எனும் உயிர் எழுத்தோடு மட்டும் சேர்ந்து, “யா” எனும் உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வரும்.*

***எடுத்துக்காட்டு:*** *யாகம், யாசகம், யாமம்.*

*“ய்”, “அ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ” ஆகிய பிற உயிர் எழுத்துகளுடன் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வராது.*

*யவனம், யுகம், யூகம், யோகம் என்பன வழக்காகி விட்டன.*

### மொழிமுதல் ஆகாதனவும் தம்பெயர் கூறுதற்கண் மொழி முதலாதல்

**66. முதலா ஏன தம்பெயர் முதலும்.**

***பொருள்:*** *முதலாகாத ஏனைய தனிமெய் எழுத்துகள், தம் பெயரைச் சொல்ல, சொல்லின் முதலில் வரும்.*

***விளக்கம்:*** *"ங், ட், ண், ர், ல், ழ், ள், ற், ன்" ஆகிய தனிமெய் எழுத்துகள் எந்த உயிரோடும் சேர்ந்து, உயிர்மெய்யாகி, சொல்லின் முதலில் வராது. ஆனால், தன் பெயரைச் சொல்ல, சொல்லின் முதலாகும்.*

***எடுத்துக்காட்டு:*** *ஙப்போல் வளை. டகரம், ணகரம், ரகரம், னகரம்.*

### மொழிமுதற் குற்றியலுகரம்

***67. குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்***
***ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.***

***பொருள்:*** *1/2 மாத்திரை அளவு கொண்ட உகரம், நகரமுடன் சேர்ந்து உயிர்மெய்யாகி, உறவு முறைப்பெயர் பக்கத்தில், நகர ஒற்றுடன் இணைந்து, சொல்லின் முதலில் வரும்.*

***விளக்கம்:*** *நுந்தை (நுன் + தை), நுந்தாய் (நுன் + தாய்), நுந்தீ = (நுன் + தீ) எனும் சொற்களில், உறவின் (நுன்) முறையைக் குறிக்க, நகர குற்றியலுகரம் சொல்லின் முதலில் வரும்.*

### முற்றியலுகரமொடு பொருள்வேறு படாமை

***68. முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது***
***அப்பெயர் மருங்கின் நிலையிய லான.***

***பொருள்:*** *அந்த உறவு முறைப்பெயர் பக்கத்தில் நிலையான இயல்புடைய சொல் வந்தால், முழுமாத்திரையுடைய உகரம் வந்து, பொருள் வேறுபடாது.*

***விளக்கம்:*** *நுன்தந்தை. "நுன்" எனும் உறவுமுறைப் பெயரின் பக்கத்தில், "தந்தை" எனும் நிலையான இயல்புடைய சொல் வந்தால், முழுமாத்திரையுடைய உகரம் இருந்தும், "நுந்தை" என்பதிலிருந்து, பொருள் வேறுபடாது.*

### மொழி ஈறாகும் உயிர்கள்

***69. உயிர்ஔ எஞ்சிய இறுதி யாகும்.***

***பொருள்:*** *"ஔ"வைத் தவிர, மற்ற உயிர் எல்லாம், சொல்லின் இறுதியில் வரும்.*

***விளக்கம்:*** *அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ ஆகிய 11 உயிர் எழுத்துகளும் சொல்லின் இறுதியில் வரும். ஔ மட்டும் சொல்லின் இறுதியில் வராது. அடுத்து வரும் நூற்பா இவ்விதிக்கு விலக்கு.*

*இந்த 11 உயிர் எழுத்துகள், 18 மெய் எழுத்துகளுடன் சேர்ந்து வரும் உயிர்மெய் எழுத்துகளும் (71ம் நூற்பாவில் இருந்து 77ம் நூற்பாக்கள் வரையுள்ள விதிவிலக்குகள் தவிர) சொல்லின் இறுதியில் வரும்.*

***எடுத்துக்காட்டு:*** *ஆஅ, ஆ, ஈஇ, ஈ, ஊஉ, ஊ, ஏஎ, ஏ, ஐ, ஓஒ, ஓ என சொல்லின் இறுதியில் வரும்.*

### ஔகாரம் ஈறாகும் இடம்

***70. கவவோ டியையின் ஔவு மாகும்.***

***பொருள்:*** *"க், வ்" உடன் சேர்ந்து "ஔ" வும் சொல்லின் இறுதியில் வரும்.*

***எடுத்துக்காட்டு:*** கௌ, வௌ.

### எகரம் மெய்யோடு ஈறாகாமை

***71. எஎன வருமுயிர் மெய்யீறாகாது.***

***பொருள்:*** *"எ" எனும் உயிர், மெய் எழுத்துகளுடன் சேர்ந்து, உயிர்மெய் எழுத்தாக, சொல்லின் இறுதியில் வராது.*

***விளக்கம்:*** *"எ" எனும் உயிருடன் சேர்ந்த மெய் எழுத்துகளான, கெ, ஙெ, செ, ஞெ, டெ, ணெ, தெ, நெ, பெ, மெ, யெ, ரெ, லெ, வெ, ழெ, ளெ, றெ, னெ ஆகிய உயிர்மெய் எழுத்துகள், சொல்லின் இறுதியில் வராது.*

### ஒகரம் நகரமெய் யொன்றுடன் ஈறாதல்

***72. ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே.***

***பொருள்:*** *"ந்" ஐக் கணக்கில் கொள்ளாமல் போனால், "ஒ" வும் அதைப் ("எ"வைப்) போன்றதே.*

***விளக்கம்:*** *"ஒ" எனும் உயிருடன் சேர்ந்த மெய் எழுத்துகளான,*

கொ, ஙொ, சொ, ஞொ, டொ, ணொ, தொ, பொ, மொ, யொ, ரொ, லொ, வொ, ழொ, ளொ, றொ, னொ ஆகிய உயிர்மெய் எழுத்துகள், சொல்லின் இறுதியில் வராது.

"நொ" மட்டும் சொல்லின் இறுதியில் வரும்.

### ஏகார ஓகாரங்கள் ஞகரத்தோடு ஈறாகாமை

**73. ஏஓ எனுமுயிர் ஞகாரத் தில்லை.**

***பொருள்:*** "ஏ" மற்றும் "ஓ" எனும் உயிர்கள் "ஞ்" எனும் மெய்யோடு சேர்ந்து, "ஞே" என்றும் "ஞோ" என்றும் உயிர்மெய்யாகி, சொல்லின் இறுதியில் வராது.

### உகர ஊகாரங்கள் நகர வகரங்களோடு ஈறாகாமை

**74. உஊ காரம் நவவொடு நவிலா.**

***பொருள்:*** "உ" மற்றும் "ஊ" எனும் உயிர்கள் "ந்" மற்றும் "வ்" எனும் மெய்களோடு சேர்ந்து, "நு, நூ" என்றும், "வு, வூ" என்றும் உயிர்மெய்யாகி, சொல்லின் இறுதியில் வராது.

***பொருத்தம்:*** "வு" எனும் உயிர்மெய்யில் முடியும் பல சொற்கள் இன்றைய வழக்கில் உள்ளன. அழிவு, கழிவு, ஈவு, ஏவு, காவு, சாவு, தாவு, நாவு, பாவு, மாவு, தேர்வு, சோர்வு, நேர்வு, சேர்வு, ஆய்வு போன்றவை. எனவே, இந்நூற்பா, இன்றைக்கு பகுதியாகப் பொருந்தலாம்.

### சகர உகரம் இரு மொழிக்கே ஈறாதல்

**75. உச்ச காரம் இருமொழிக் குறித்தே.**

***பொருள்:*** "சு" எனும் உயிர்மெய், இரண்டு சொற்களுக்கு மட்டும், இறுதியாய் உரியது. அச்சொற்கள், உசு, முசு.

***பொருத்தம்:*** "சு" எனும் உயிர்மெய்யில் முடியும் பல சொற்கள் இன்றைய வழக்கில் உள்ளன. அசு, ஆசு, ஊசு, ஏசு, ஓசு, காசு, தாசு, பாசு, மாசு, வாசு, வீசு, எஞ்சு போன்றவை. எனவே, இந்நூற்பா இன்றைக்கு பொருந்தாது.

ஏன், சொற்கள், "சு" வில் முடியக்கூடாது என விதிக்கப்பட்டது?!

**பகர உகரம் ஒரு மொழிக்கே ஈறாதல்**

**76. உப்ப காரம் ஒன்றெ‌ன மொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே.**

***பொருள்:*** *"பு" எனும் உயிர்மெய்யில் முடியும் சொல் ஒன்று, இரண்டு இட நிலைக்கும் பொருள் தரும், எனக் கூறுவர்.*

***விளக்கம்:*** *தபு எனும் சொல், தன்னிலையிலும் முன்னிலையிலும் பொருள் தரும். "த்" இல் அழுத்தம் மிக, தன் சாவு அல்லது தன்தேகம் விண்வெளியில் இல்லாமல் ஆக்குதல் என்றும், "ப்" இல் அழுத்தம் மிக, சாகடி அல்லது தேகத்தை விண்வெளியில் இல்லாமல் ஆக்கு என்றும் பொருள் தரும்.*

**மொழிக்கு ஈறாகா உயிர்மெய்யும்
தம்பெயர் கூறுதற்கண் மொழிக்கு ஈறாதல்**

**77. எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே.**

***பொருள்:*** *மேற்கண்ட (70 முதல் 76 வரையிலான நூற்பாக்களின்) விதிவிலக்குகள் தவிர, பிற உயிர்மெய் எழுத்துகள் எல்லாம், சொல்லின் இறுதியில் வராது.*

***விளக்கம்:***

*கெ, கொ;
ஙெ, ஙொ, ஙௌ;
செ, சொ, சௌ;
ஞெ, ஞே, ஞொ, ஞோ,ஞௌ;
டெ, டொ, டௌ;
ணெ, ணொ, ணௌ;
தெ, தொ, தௌ;
நு, நூ, நெ;
பெ, பொ, பௌ;
மெ, மொ, மௌ;
யெ, யொ, யௌ;
ரெ, ரொ, ரௌ:
லெ, லொ, லௌ;
வு, வூ, வெ, வொ;
ழெ, ழொ, ழௌ;*

ளெ, ளொ, ளௌ;
றெ, றொ, றௌ;
னெ, னொ, னௌ

ஆகிய உயிர்மெய் எழுத்துகள் சொல்லின் இறுதியில் வராது.

க, கா, கி, கீ, கு, கூ, கே, கை, கோ, கௌ;
ங, ஙா, ஙி, ஙீ, ஙு, ஙூ, ஙே, ஙை, ஙௌ;
ச, சா, சி, சீ, சு, சூ, சே, சை, சோ;
ஞ, ஞா, ஞி, ஞீ, ஞு, ஞூ, ஞை;
ட, டா, டி, டீ, டு, டூ, டே, டை, டோ;
ண, ணா, ணி, ணீ, ணு, ணூ, ணே, ணை, ணோ;
த, தா, தி, தீ, து, தூ, தே, தை, தோ;
ந, நா, நி, நீ, நே, நை, நொ, நோ, நௌ;
ப, பா, பி, பீ, பு, பூ, பே, பை, போ;
ம, மா, மி, மீ, மு, மூ, மே, மை, மோ;
ய, யா, யி, யீ, யு, யூ, யே, யை, யோ;
ர, ரா, ரி, ரீ, ரு, ரூ, ரே, ரை, ரோ;
ல, லா, லி, லீ, லு, லூ, லே, லை, லோ;
வ, வா, வி, வீ, வே, வை, வோ, வௌ;
ழ, ழா, ழி, ழீ, ழு, ழூ, ழே, ழை, ழோ;
ள, ளா, ளி, ளீ, ளு, ளூ, ளே, ளை, ளோ;
ற, றா, றி, றீ, று, றூ, றே, றை, றோ;
ன, னா, னி, னீ, னு, னூ, னே, னை, னோ

ஆகிய உயிமெய் எழுத்துகள் சொல்லின் இறுதியில் வரும்.

## மொழிக்கு ஈறாகும் தனிமெய்கள்

**78. ஞணநம னயரல வழள வென்னும்**
**அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.**

**பொருள்:** தனிமெய் எழுத்துகளில், ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் ஆகிய பதினொன்றுதான், சொல்லின் இறுதியில் வரும். க், ங், ச், ட், த், ப், ற் ஆகிய ஏழும் சொல்லின் இறுதியில் வராது.

**எடுத்துக்காட்டு:** உரிஞ், மண், பொருந், இரும், தென், பாய், பார், பால், எவ், ஆழ், எள்.

**79. உச்சகாரமொடு நகாரம் சிவணும்.**

**பொருள்:** "சு" உடன் "ந்" இணைந்து சொல்லின் இறுதியில் வரும்.

***விளக்கம்:*** *"சுந்" எனச் சொல்லின் இறுதியில் வரும். பசுந் தரையில், "பசுந்" என வரும்.*

***80. உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே***
***அப்பொருள் இரட்டா திவனை யான.***

***பொருள்:*** *"பு" உடன் "ஞ்" இணைந்து சொல்லின் இறுதியில் வரும். நூற்பா 76 வில், 'தபு' வைப் போல், தன்னிலை முன்னிலை என இரண்டு நிலைக்கும் பொருள் தராது.*

***விளக்கம்:*** *"புஞ்" எனச் சொல்லின் இறுதியில் வரும். "புஞ்சை" யில் "புஞ்" என வரும்.*

***வகரமெய் ஈறாம் மொழிகள்***

***81. வகரக் கிளவி நான்மொழி ஈற்றது.***

***பொருள்:*** *நான்கு சொற்களில், இறுதியாக, "வ்" வரும்.*

***விளக்கம்:*** *அவ், இவ், உவ், எவ் என வரும்.*

***மகர ஈற்றொடு மயங்காத னகர ஈற்றுத்தொடர் மொழிகள்***

***82. மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த***
***னகரத் தொடர்மொழி ஒன்பஃதென்ப***
***புகரறக் கிளந்த அஃறிணை மேன.***

*புகரற = புகர் + அற. உயிர் பிரிந்த, நிலம் பிரிந்த.*

***பொருள்:*** *"ன்" ஐ, இறுதியாய்க் கொண்ட, இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துகளைக் கொண்ட சொற்கள், "ம்" ஐ இறுதியாய்க் கொண்டு, இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துகளைக் கொண்ட சொற்களாய் மயங்குவது, ஒன்பது சொற்களில் இல்லை. அவை யாவும், நிலத்தை / உயிரைப் பிரிந்தவற்றின் அஃறிணைப் பெயர்கள்.*

*அவை, எகின், செகின், விழன், பயின், அழன், புழன், குயின், கடான், வயான்.*

*நிலன் –> நிலம் என்றும், புலன் –> புலம் என்றும் ஆகும்.*

# 3. பிறப்பியல்

**எழுத்துகளது பொதுப்பிறப்பு**

***83.*** ***உந்தி முதலா முந்துவளி தோன்றித்***
***தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்***
***பல்லும் இதழும் நாவும் மூக்கும்***
***அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்***
***உறுப்புற் றமைய நெறிப்பட நாடி***
***எல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்***
***பிறப்பின் ஆக்கம் வேறுவேறியல***
***திறப்படத் தெரியுங் காட்சி யான.***

*உந்தி <– உன்தி <– உ + ல் + த் + இ. புறத்தில் அதிர்ந்து தேகம் இயங்குதல். குழவி, தாயின் வயிற்றிலிருந்து வெளிவந்தவுடன், அதன் மூக்கின் வழியே செல்லும் காற்று, நுரையீரலை நிரப்பி, உதரவிதானத்தை அதிரச் செய்து, வயிற்றை முன்தள்ளி இயங்கச் செய்கிறது. வயிற்றின் பின் இயக்கத்தால் நுரையீரல் இயங்கத் தொடங்குகின்றது. உயிர் நிலைப்பெறுகின்றது.*

*முந்து = ம் + உந்து. ஆன்மா புறந்தள்ளும். முந்து வளி = உயிர்க் காற்று. முதல் காற்று.*

*நிலைஇப் = நிலைத்து இருந்து.*

*உளப்பட = ஒத்துழைக்க.*
*எண்முறை = அளவு வழி*

*உறுப்புற்றமைய = உறுப்பு + உற்று + அமைய. உறுப்பை அடைந்து பொருந்த.*

*நெறிப்பட = ஒழுங்கு முறையாய்*

*திறப்பட = திறம் + பட. உறுதியாய். தெளிவாய்.*

**பொருள்:** வயிற்றின் மூலமாய்த் தோன்றும் உயிர்க்காற்று, தலையிலும், தொண்டையிலும், நெஞ்சிலும் நிலைத்து இருந்து, பல்லும், இதழும், நாக்கும், மூக்கும், அண்ணமும் ஒன்றாய் ஒத்துழைத்து, அளவு வழியில் நிலைத்து, குறிப்பிட்ட வாய் உறுப்பின் பகுதியை அடைந்து பொருந்த, ஒழுங்கு முறையாய்ச் சொல்லும்போது, எல்லா எழுத்தும் தோன்றி உருவாவதில், வெவ்வேறு இயல்புடையனவாய் இருப்பதைத் தெளிவாய் உறுதியாய் மனக்காட்சியில் காணலாம்.

**விளக்கம்:** ஒவ்வொரு எழுத்தை ஒலிக்கும்போதும், வயிற்றின் மூலமாய்த்தோன்றும்உயிர்க்காற்று, தலையிலும், தொண்டையிலும், நெஞ்சிலும் நிலைத்து இருந்து, தலையையும், தொண்டையையும், நெஞ்சையும் தற்காலிகமாக, குறிப்பிட்ட அளவு இயக்கமில்லாமல் செய்துவிடுகின்றது. அதே சமயம், இம்மூன்றுடன், பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகிய ஐந்தும், ஆக மொத்தம் எட்டு உறுப்புகளும், ஒருசேர இயங்குகின்றன. சரியான, நிலையான காலம் மற்றும் அழுத்த அளவு மாறுபாடுகளுடன், குறிப்பிட்ட வாய் உறுப்பின் பகுதியை அக்காற்று அடைந்து பொருந்த, ஒழுங்கு முறையாய்ச் சொல்லும்போது, ஒவ்வொரு எழுத்தும் தோன்றி வெளிப்படுவதில், மேற்கூறிய எட்டு உறுப்புகளின் வெவ்வேறு விதமான நிலைகள் மற்றும் இயக்க முறைகளால், வெவ்வேறு இயல்புடையதாய் இருக்கின்றது என்பதைத் தெளிவாய் உறுதியாய் மனக்காட்சியில் கண்டு உணரலாம்.

பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் உள்பட உடலின் எல்லா உறுப்புகளும், தலையில் உள்ள மூளையுடன் பிணைக்கப்பட்டிருப்பதால், தலையிலும் உயிர்க்காற்று சென்று இயக்குகின்றது.

முக எலும்புகளுக்குள் இருக்கும் காற்று அறைகளும் (paranasal sinuses) ஒலிப்பிறப்பில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. (நன்றி: மேரி கியூரி பால், கனடா)

**உயிரெழுத்து பொதுவாகப் பிறக்கும் வகை**

***84.*** ***அவ்வழிப்***
***பன்னீ ருயிரும் தந்நிலை திரியா***
***மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்.***

**பொருள்:** மேற்கூறிய விதமாய், பன்னிரண்டு உயிர்

எழுத்துகளும், தம் நிலை மாறாமல், தொண்டையில் தோன்றிய காற்றால் ஒலிக்கும்.

### உயிரெழுத்துகட்குச் சிறப்புப் பிறப்பு உணர்த்துதல்

***85.*** ***அவற்றுள்***
***அஆ ஆயிரண் டங்காந் தியலும்.***

அங்காந்து = அங்கு + ஆந்து. வெளி உருவாக்கி.

**பொருள்:** அவற்றினுள், ''அ'', ''ஆ'' ஆகிய இரண்டு எழுத்துகளும், வாயைத் திறந்து, காற்று வெளியேறி, வெற்று வெளி தோன்ற உருவாகும்.

**விளக்கம்:** ''அ'' எனும் ஒலி, மேலெழும் உயிர்க்காற்றை, தொண்டையில் தடுக்கும்போது, காற்று வட்டமாகச் சுழன்று (சுழிக்கொம்பு), தடை நீங்கும்போது மேல் அண்ணத்தைத் தழுவி யோடும் காற்று (மேல் வளைவுக்கோடு), மேல் அண்ணத்தின் வளைவால், தவிர்க்க இயலாமல், உள் கீழ் வளைந்து செல்ல (கீழ் வளைவுக்கோடு), தொண்டைக் குழி மீண்டும் மூடுவதால், காற்று வெளியேறி (படுக்கைக்கோடு) நிற்கின்றது (செங்குத்துக்கோடு). ''அ'' ஒலிக்கையில், காற்றின் வழிப்பாதையே, அதன் வரிவடிவை உருவாக்குகின்றது.

''அ'' வின் சுழிக் கொம்பு, ''அ'' ஒலியின் துவக்கத்தையும், செங்குத்துக்கோடு, ''அ'' ஒலியின் முடிவையும் குறிக்கும்.

''ஆ'' வில், ''அ'' வை அடுத்து ஒரு சுழிக்கொம்பு சேர்கின்றது. ''ஆ'' ஒலியில், ''அ'' வின் முழு ஒலியை அடுத்து, ''அ'' வின் துவக்க ஒலி வருகின்றது. ''ஆ'' எழுத்தின் சுழிக்கொம்பு, பின்னாளில், வடிவத்தை ஒழுங்கமைத்து, எழுதுவதற்கு எளிமையாகத் திருத்தப்பட்டிருக்கலாம்.

### இகரம் முதலியன பிறக்குமாறு

***86.*** ***இஈ எஏ ஐயென இசைக்கும்***
***அப்பால் ஐந்தும் அவற்றோரன்ன***
***அவைதாம்***
***அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.***

*அண்பல் = அண்ணம், பல்.*

*முதல்நா = அடிநாக்கு.*

*விளிம்பு = நுனி நாக்கு.*

**பொருள்:** *"இ", "ஈ", "எ", "ஏ", "ஐ" என ஒலிக்கும் ஐந்து வகையான எழுத்துகளும், "அ", "ஆ" வைப் போன்று, வாயைத் திறந்து, காற்று வெளியேறி, வெற்று வெளி தோன்ற உருவாகும். மேலும் அவை, மேல் அண்ணத்தில் அடி நாக்கும், கீழ்த்தாடைப் பற்களின் அடியில், நுனி நாக்கும், ஒட்டி அழுந்த உருவாகும்.*

**விளக்கம்:** *"இ" ஒலி, வாயைத் திறந்து, "அ" வை வெளிப்படச் சொல்லாமல் சொல்லி, இதழ்கள் பின்னோக்கிச் சென்று, எழுந்து வந்த காற்றை வெளியேற்றுவதால் உருவாவது. "இ" எழுத்தில், சுழிக்கொம்பு, அதன் துவக்கத்தையும், கடைசியில் மேல் எழும்பிக் கீழிறங்கும் வால் கோடு, அதன் இறுதியையும் குறிக்கும்.*

*இ + இ = ஈ. இங்கு இருந்து, இங்கும் இருப்பது. ஒரு இடத்–திலிருந்து வேறொரு இடம் செல்வது. ஒன்றிலிருந்து வேறொன் றுக்குச் செல்வது. ஒன்று வேறொன்றுக்குத் தருவது. இரண்டு புள்ளிகள் இரண்டு இருப்பைக் குறிக்கின்றன. இடையில் உள்ள செங்குத்துக்கோடு, அவை தனித்தனி எனக் குறிக்கின்றது.*

*இ + அ = எ. "இ" யின் முதலான கொம்பும், "அ" வின் முடிவான செங்குத்துக்கோட்டையும் கொண்டதுதான், "எ".*

*"ஏ" வில், "எ" வை அடுத்து, மற்றோர் "அ" வின் இறுதியைக் குறிக்கும் செங்குத்துக்கோடு வருகின்றது. ஏற்கனவே உள்ள செங்குத்துக்கோட்டையும் புதிய செங்குத்துக்கோட்டையும் வேறு படுத்திக் காண, இரண்டாவது செங்குத்துக்கோடு முன் சாய்க்கப் படுகின்றது.*

*அ + இ = ஐ. "ஐ" யில், "அ" வின் துவக்கச் சுழிக்கொம்பும், "இ" யின் இறுதி வால் கொம்பும், "அ, இ" இரண்டுக்கும் பொதுவான படுக்கைக்கோடும், "அ, இ" இரண்டுக்கும் உள்ள கீழ் வளைவுக் கோடுகளும் உள்ளன.*

### *உகரம் முதலியன பிறக்குமாறு*

***87. உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்***
***அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்.***

***பொருள்:*** ''உ'', ''ஊ'', ''ஒ'', ''ஓ'', ''ஔ'' என வாயைத் திறந்து, காற்று வெளியேறி, வெற்று வெளி தோன்ற ஒலிக்கும். மேலும், இந்த ஐந்து வகை எழுத்துகளும், இதழ்கள் குவிந்து உருவாகும் இயல்புடையன.

***விளக்கம்:*** ''உ'' ஒலி, வாயைத் திறந்து, ''அ'' வை வெளிப்படச் சொல்லாமல் சொல்லி, இதழ்கள் முன்னோக்கிக் குவிந்து, எழுந்து வந்த காற்றை வெளியேற்றுவதால் உருவாவது.

சுழிக்கொம்பும், படுக்கைக் கோடும், ''உ'' வின் வரிவடிவத்தை உருவாக்குகின்றது.

''ள'' என்பது மிகையைக் குறிக்கும். ''ஊ'' வில் உள்ள ''ள'', ''உ'' ஒலியின் நீட்சியைக் குறிக்கும்.

அ + உ = ஒ. ''அ'' வின் சுழிக்கொம்பும், மேல் வளைவுக்கோடும், ''உ'' வும் சேர்ந்ததுதான், ''ஒ'' வின் வரிவடிவம்.

அ + உ + அ = ஓ. ''அ'' வின் சுழிக்கொம்பும், மேல் வளைவுக் கோடும், ''உ'' வும், மீண்டும் ஒரு சுழிக்கொம்பும் சேர்வது ஓ.

அ + ஊ = ஔ.

இவ்வாறு, தமிழ் எழுத்துகளின் வரிவடிவத்திலும், அளவை இயலைக் காண முடிகின்றது.

***88. தத்தந் திரிபே சிறிய வென்ப.***

***பொருள்:*** இந்த எழுத்துகளை ஒலிப்பதில் ஏற்படும் மாறுபாடுகள் சிறியன என்பர், அறிஞர்.

***விளக்கம்:*** இந்நூற்பாக்களில் கூறும் பொதுவிதி அவ்வகை எழுத்துகளுக்குப் பொதுவாய்ப் பொருந்தினாலும், வெவ்வேறு சமயங்களில் உச்சரிக்கும்போது, ஒவ்வொரு எழுத்துக்கும் சிறிய உறுப்பு, இயக்க, அழுத்த மாறுபாடுகள் ஏற்படுவதை, கூர்ந்து கவனித்தால் உணரலாம்.

***க, ங – மெய்கள்***

***89. ககார ஙகாரம் முதல்நா அண்ணம்.***

***பொருள்:*** ''க்'' மற்றும் ''ங்'', அடி நாக்கு, அடி அண்ணத்தைத் தொட்டு அழுத்தி, பின் விலகி, காற்றை முன் விடுவதால்

ஏற்படுகின்றன.

***விளக்கம்:*** "ங்" ஐ ஒலிக்கையில், அடி நாக்கு, அடி அண்ணத்தைத் தொட்டு அழுத்துவது, "க்" ஐக் காட்டிலும், மேல் அண்ணத்தின் சற்று முன்பக்கமாக நிகழ்கின்றது. மேலும், "ங்" இற்கு, "க்" ஐக் காட்டிலும், அடி நாக்கின் அழுத்தம், மேல் அண்ணத்தில் குறைவாய் உள்ளது.

### ச, ஞ – மெய்கள்

***90. சகார ஞகாரம் இடைநா அண்ணம்.***

***பொருள்:*** "ச்" மற்றும் "ஞ்", நடு நாக்கு, நடு அண்ணத்தைத் தொட்டு அழுத்தி, பின் விலகி, காற்றை முன் விடுவதால் ஏற்படுகின்றன.

***விளக்கம்:*** "ஞ்" ஐ ஒலிக்கையில், நடு நாக்கு, நடு அண்ணத்தைத் தொட்டு அழுத்துவது, "ச்" ஐக் காட்டிலும், மேல் அண்ணத்தின் சற்று முன்பக்கமாக நிகழ்கின்றது. மேலும், "ஞ்" இற்கு, "ச்" ஐக் காட்டிலும், நடு நாக்கின் அழுத்தம், மேல் அண்ணத்தில் குறைவாய் உள்ளது.

### ட, ண – மெய்கள்

***91. டகார ணகாரம் நுனிநா அண்ணம்.***

***பொருள்:*** "ட்" மற்றும் "ண்", நுனி நாக்கு முன் அண்ணத்தைத் தொட்டு அழுத்தி, பின் விலகி, காற்றை முன் விடுவதால் ஏற்படுகின்றன.

***விளக்கம்:*** "ண்" ஐ ஒலிக்கையில், நுனி நாக்கு, முன் அண்ணத்தை தொட்டு அழுத்துவது, "ட்" ஐக் காட்டிலும், மேல் அண்ணத்தின் சற்று முன்பக்கமாக நிகழ்கின்றது. மேலும், "ண்" இற்கு, "ட்" ஐக் காட்டிலும், நுனி நாக்கின் அழுத்தம், மேல் அண்ணத்தில் குறைவாய் உள்ளது.

***92. அவ்வா றெழுத்தும் மூவகைப் பிறப்பின.***

***பொருள்:*** அந்த ஆறு எழுத்துகளும், மூன்று வகையான பிறப்பு இயல்புகளைக் கொண்டவை.

***விளக்கம்:*** *இந்த எழுத்துகளை ஒலிப்பதில் ஏற்படும் சிறிய உறுப்பு, இயக்க, அழுத்த மாறுபாடுகளால், இவை, ஆறு வகையான பிறப்பு இயல்புகளைக் கொண்டவை அல்ல, மூன்று வகையான பிறப்பு இயல்புகள்தான்.*

***த, ந – மெய்கள்***

***93. அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்***
***நாநுனி பரந்து மெய்யுற வொற்றத்***
***தாமினிது பிறக்குந் தகார நகாரம்.***

*நண்ணியம் = நள் + இயம். நடுத்தன்மை.*
*மெய்யுற = மெய் + உற. மெய் உணர.*

***பொருள்:*** *மேல் அண்ணத்தின் இடது வலது பாகங்களின் நடுவில், பல்லின் அடிப்பக்கத்தில், நுனிநாக்கு விரிந்து, மெய் உணரும் வகையில் பொருந்த, இனிமை யாகப் பிறக்கும், ''த்'' மற்றும் ''ந்''.*

***விளக்கம்:*** *நெற்றிப் பொட்டும், நாமமும், உடலின் மையத்தைக் குறிக்கின்றன. மேல் அண்ணத்தின் நடுப்பகுதியில், நாக்கின் நடுப் பகுதி, பற்களின் நடுப்பகுதியில் பொருந்தும்போது, மெய் உணரப்படும். ''த்'' எனும் தேகமே இனிமையாகும், அமிழ்தாகும் (த் + அமிழ் = தமிழ்). அந்த இனிமையில் பிறக்கும் எழுத்தும் இனிமையாகும்.*

***ற, ன – மெய்கள்***

***94. அணரி நுனிநா அண்ணம் ஒற்ற***
***றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்.***

*அணரி = அண் + அரி. நெருக்கம் பிரிந்து.*

***பொருள்:*** *அண்ணத்தின் நெருக்கம் பிரிந்து, நுனிநாக்கு அண்ணத் தைத் தொட, ''ற்'' மற்றும் ''ன்'' ஆகிய இரண்டும் பிறக்கும்.*

***ர, ழ – மெய்கள்***

***95. நுனிநா அணரி அண்ணம் வருட***

***ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்.***

**பொருள்:** *நுனிநாக்கு, அண்ணத்தின் நெருக்கம் பிரிந்து, அண்ணத்தை வருட, ''ர்'' மற்றும் ''ழ்'' ஆகிய இரண்டும் பிறக்கும்.*

**ல, ள – மெய்கள்**

***96. நாவிளிம்பு வீங்கி யண்பல் முதலுற***
***ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்***
***லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்.***

**பொருள்:** *நாக்கின் விளிம்பு பருத்து, மேல்பல்லின் அடியில் பொருந்தி, அவ்விடத்தில் அண்ணத்தைத் தொட, ''ல்'' உம், அண்ணத்தை வருட, ''ள்'' உம், ஆகிய இரண்டும் தோன்றும்.*

**ப, ம – மெய்கள்**

***97. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்.***

**பொருள்:** *இதழ்கள் ஒன்றிப் பிறக்கும், ''ப்'' உம், ''ம்'' உம்.*

**விளக்கம்:** *மேல் இதழ், கீழ் இதழுடன் ஒன்றும்போது, 'ப்' பிறக்கின்றது. கீழ் இதழ், மேல் இதழுடன் ஒன்றும்போது, 'ம்' பிறக்கின்றது.*

**வகார மெய்**

***98. பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்.***

**பொருள்:** *மேல் பல்லும் கீழ் இதழும் ஒன்ற, ''வ்'' பிறக்கும்.*

**யகார மெய்**

***99. அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை***
***கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்.***

*கண் = துளை. துவாரம்.*

**பொருள்:** *தொண்டையில் எழுந்த காற்றொலி, அண்ணமும்*

அடிநாக்கும் சேர தடுக்கப்பட்டு, அழுத்தத்தால், தடையில் துவாரம் ஏற்படுத்தி வெளிப்படுகையில், “ய்” பிறக்கும்.

### மெல்லெழுத்துகள் பிறப்புக்கு இரு சிறப்பு விதி

***100.*** **மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கஞ்**
**சொல்லிய பள்ளி நிலையின வாயினும்**
**மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்.**

பள்ளி = இடம். யாப்பு = இணைந்து.

***பொருள்:*** மெல்லின எழுத்துகள் ஆறும், சொல்லிய இடங்களில், நிலையாக, தோன்றி உருவானாலும், அவற்றுடன், மூக்கின் காற்றொலி இணைந்து வெளிப்படும்.

***விளக்கம்:*** ங், ஞ், ண், ந், ம், ன் ஆகிய ஆறு மெல்லின எழுத்துகள், மேற்காணும் நூற்பாக்களில் குறிப்பிட்ட இடத்தில், வழியில் பிறந்தாலும், மூக்கின் காற்றொலியுடன் சேர்ந்து வெளிப்படும்.

### சார்பெழுத்துகள் பிறக்குமாறு

***101.*** **சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்**
**தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்**
**தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி**
**ஒத்த காட்சியின் தம்மியல் பியலும்.**

***பொருள்:*** சார்ந்து வருதலன்றி, தமக்கெனத் தனி இயல்பு இல்லாதன என முடிவு செய்து கூறப்பட்ட மற்ற மூன்று எழுத்துகளும், தாம் சார்ந்த எழுத்துகளின் பிறப்புடன் பொருந்தி, அவற்றைப் போன்ற உருவாக்கத்தில் தம்மியல்பை வெளிப்படுத்தும்.

***விளக்கம்:*** குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்று எழுத்துகளும், இ, உ, க் பிறக்கும் இடங்களில் தோன்றி வெளிப்படும்.

### எழுத்துகளின் பிறப்புக்கு புறனடை

***102. எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து***
***சொல்லிய பள்ளி யெழுதரு வளியின்***
***பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து***
***அகத்தெழு வளியிசை யரில்தப நாடி***
***அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே.***

***பொருள்:*** *எல்லா எழுத்தும் அகவெளியில் இருந்து கிளம்பி, மேலே சொல்லிய இடத்தில் காற்றாய் எழுந்து, உருவாகித் தோன்றி வெளிப்படும். அந்த எழுத்துகளின் மாற்றங்களுக்குக் காரணமான, அகத்தில் எழுகின்ற காற்றின் ஒலியை, பிரித்து ஆராய்ந்து, அவற்றின் அளவைக் கணக்கிடல், அந்தணர் மறையில் உள்ளது.*

***விளக்கம்:*** *எல்லா எழுத்துகளும் அகவெளியில்தான் முதலில் கருத்துருவம் பெறுகின்றன. ''ஓம்'' எனும் ஓங்கார மந்திரத்தை, மனதிற்குள்ளேயே, வாயைத் திறவாமல் சொல்லிக் கொண்டே இருக்க முடியும். ''ஓம்'' எனும் இசை, ''ம்'' ஆக அடங்கும். உடலின் புலன்அசைவுகளும் அடங்கும். ''ம்'' எனும் இசையும் மௌனத்தில் அசையாமையில் நிலைக்கும். மனத்தின் செயலும் அடங்கும். ஒற்றைவெளி மட்டும் கேட்பாரற்று இசைத்துக் கொண்டிருக்கும்.*

*அகத்தில் நிலவும் இது போன்ற நிகழ்வுகளை அறிவது, கூர்ந்த அகநோக்கினாலேயே சாத்தியம்.*

*எழுத்தொலிகளின் வேறுபட்ட பிறப்பு, தோற்றம், வெளிப்பாடு ஆகிய மாற்றங்களுக்குக் காரணம், தலை, தொண்டை, நெஞ்சம், பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகியவற்றின் இடங்கள் மட்டுமல்ல, அகத்தில் எழுகின்ற உயிர்க்காற்றின் ஆற்றலும், வலிமையும், அளவும்தான்.*

*அகத்தில் எழுகின்ற உயிர்க்காற்றின் ஓட்டத்தையும், அளவையும் அதனால் ஏற்படும் எழுத்துகளின் மாற்று வெளிப்பாட்டையும், ஆராய்ந்து எழுதப்பட்டவை, அறவோர் நூல்களில் உள்ளன. அந்நூல்கள் எங்கே?*

***புறனடை***

***103. அஃதிவண் நுவலா தெழுந்துபுறத் திசைக்கும்***
***மெய்தெரி வளியிசை அளபுநுவன் றிசினே.***

***பொருள்:*** *அதை (அகத்தில் எழுகின்ற உயிர்க்காற்றின் ஓட்டத் தையும், அளவையும் அதனால் ஏற்படும் எழுத்துகளின் மாற்று*

*வெளிப்பாட்டையும்) இங்கே சொல்லாமல், உள்ளே எழுந்து வெளியே ஒலிக்கின்ற, உடலால் உணரக்கூடிய காற்று ஒலியின் அளவை, இங்கே கூறியுள்ளேன்.*

***விளக்கம்:*** *அகத்தில் எழுகின்ற காற்றின் இயல்பையும் இயக்கத்தையும் அளவையும் பொதுவாய்க் கூறிவிட முடியாது. அதை அறிய சிறப்பான கல்வியும் தனிப்பட்ட பயிற்சியும் தேவை போலும்.*

*உயிர் மற்றும் மெய் எழுத்துகளின் பொதுவான பொருண்மையை, இந்நூலின் துவக்கத்தில் சுருக்கமாக காணலாம். அவற்றின் விரிவை, 'சொல்லாக்கியம்' எனும் நூலில் காண்க.*

# 4. புணரியல்

புணரியல் = புணர் + இயல். புணர் = ப் + உண் + அர். கொண்டதன் புறத்தே / உள்ளே மிக நெருக்கமாகி இருத்தல் / பிரிதல். இயல் = இ + அல். நிலையான உயிர்ப்பான அதிர்வு. இயல்பு. குணம். பண்பு.

புணரியல் = சொற்கள் மிக நெருக்கமாகி இருக்கும் இயல்பு.

**எல்லாச் சொற்களின் முதலும் ஈறும்**

***104.*** **மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்**
**இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃது**
**அறுநான் கீறொடு நெறிநின் றியலும்**
**எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்**
**மெய்யே யுயிரென்று ஆயீ ரியல.**

தலை = சிரம். எண்ணிக்கை. தலை = தல் + ஐ. தல் = த் + அல். தேகமாய் / வடிவமாய் அதிர்வது, ஒலிப்பது. இடம். தனிவடிவம் அற்று இருப்பது. சார்பு எழுத்துகள். ஐ = வேற்றுமை உருபு.

இட்ட = சேர்த்த.
நெறி = ஒழுங்கு. ஒழுக்கம். முறை.
நின்று = படி.
இயலும் = நடக்கும்.
மொழி = சொல்.
இயல = இயல்பு.

**பொருள்:** முப்பத்து மூன்று எழுத்தில், இருபத்திரண்டு முதலாகி, இருபத்து நான்கு இறுதியாகி, ஒழுங்கு முறைப்படி நடக்கும். எல்லாச் சொல்லுக்கும், மெய் அல்லது உயிர், ஆகிய இரண்டுந்தான் இறுதியும் முதலும் ஆகும் இயல்புடையன.

**விளக்கம்:** அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பன்னிரண்டு உயிர் எழுத்துகளும், க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் ஆகிய பதினெட்டு மெய் எழுத்துகளும் சேர்ந்து முப்பதாக, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்று சார்பு எழுத்துகளும் சேர்ந்து மொத்தம் முப்பத்து மூன்று எழுத்துகள்.

முப்பத்து மூன்று எழுத்துகளில், இருபத்து இரண்டு எழுத்துகள், அதாவது, அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய 12 உயிர் எழுத்துகளும், க், ச், ஞ், த், ந், ப், ம், ய், வ் ஆகிய 9 மெய் எழுத்துகளும், மொழிமுதல் குற்றியலுகரம் என 1 சார்பு எழுத்தும், ஆக மொத்தம் 22 எழுத்துகள், சொல்லுக்கு முதலாய் வருகின்றன.

முப்பத்து மூன்று எழுத்துகளில், இருபத்து நான்கு எழுத்துகள், அதாவது, அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய 12 உயிர் எழுத்துகளும், ஞ், ண், ந், ம், ய், ர், ல், வ், ழ், ள், ன் ஆகிய 11 மெய் எழுத்துகளும், மொழி இறுதி குற்றியலுகரம் என 1 சார்பு எழுத்தும், ஆக மொத்தம் 24 எழுத்துகள், சொல்லுக்கு இறுதியாய் வருகின்றன.

எல்லாச் சொல்லுக்கும், மெய் அல்லது உயிர், ஆகிய இரண்டுந்தான் இறுதியும் முதலும் ஆகும் இயல்புடையன.

சொல்லின் முதலில் உயிர்மெய் வந்தாலும், உச்சரிப்பில் முதலில் ஒலிப்பது மெய்யே. அதைப்போலவே, சொல்லின் இறுதியில் உயிர்மெய் வந்தாலும், உச்சரிப்பில் இறுதியாய் ஒலிப்பது உயிரே.

புணரியலில் வரும் வேற்றுமை உருபுகளும், சாரியைகளும், புணரும் நிலைகளும், விதிகளும் இந்நூற்பாவில் கையாளப் பட்டுள்ளது, வியக்க வைக்கும், இன்பந் தரும் புலமை, அழகு. ஐ, இன், ஒடு, கு ஆகிய வேற்றுமை உருபுகளையும், இன், இக்கு, ஏ, உம், அ ஆகிய சாரியைகளையும், "ஐ" உம் "இ" யும் புணர்வதையும், ணஃகான் றஃகான் ஆவதையும், "இக்கின்" இகர முதல் கெடுதலையும் காணவும்.

**எடுத்துக்காட்டு:**

சொல்லின் முதலில் வரும் உயிர் எழுத்துகள் (12):

அணில், ஆடு, இலை, ஈ, உரல், ஊசி, எறும்பு, ஏணி, ஐந்து, ஒட்டகம், ஓணான், ஔவை.

*சொல்லின் முதலில் வரும் மெய் எழுத்துகள் (9):*

*கானம், சானம், ஞானம், தானம், நானம், பானம், மானம், யானம், வானம்.*

*சொல்லின் முதலில் வரும் குற்றியலுகரம் (1):*

*நுந்தை.*

*சொல்லின் இறுதியில் வரும் உயிர் எழுத்துகள் (12):*

*அன்ன, அன்னா, அண்ணி, தேனீ, அண்ணு, பூ, எ, அண்ணே, அன்னை, ஒ, எங்கோ, கௌ.*

*சொல்லின் இறுதியில் வரும் மெய் எழுத்துகள் (11):*

*உரிஞ், கண், பொருந், இரும், மெய், அவர், கல், அவ், கீழ், ஆள், பொன்.*

*சொல்லின் இறுதியில் வரும் குற்றியலுகரம் (1):*

*காஉ ("உ" மேல் புள்ளி).*

## மொழியிறுதி மெய்கள் புள்ளி பெறுதல்

**105. அவற்றுள்**
**மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.**

**பொருள்:** மேற்கூறிய எழுத்துகளில், சொல்லின் இறுதியில் வருகின்ற மெய் எழுத்துகள் எல்லாம், அதாவது 11 உம், தனிமெய்களாய் நிலைக்கும்.

**எடுத்துக்காட்டு:** உரிஞ், கண், பொருந், இரும், மெய், அவர், கல், அவ், கீழ், ஆள், பொன்.

## குற்றியலுகரம் ஒற்றெழுத்து ஒத்தல்

**106. குற்றிய லுகரமும் அற்றென மொழிப.**

**பொருள்:** குற்றியலுகரமும் அதைப் போன்றது என அறிஞர் கூறுவர்.

**விளக்கம்:** சொல்லின் இறுதியில் வருகின்ற குற்றியலுகரமும், சொல்லின் இறுதியில் வருகின்ற மெய் எழுத்துகள் போன்று,

புள்ளியோடு நிலைக்கும், என அறிஞர் கூறுவர்.

**எடுத்துக்காட்டு:** காஉ ("உ" மேல் புள்ளி).

### உயிர்மெய்யீறு உயிரீறாகக் கோடல்

***107. உயிர்மெய்யீறும் உயிரீற் றியற்றே.***

**பொருள்:** இறுதியாக வரும் உயிர்மெய் எழுத்தும், இறுதியாக வரும் உயிர் எழுத்தின் இயல்பை உடையதே.

**விளக்கம்:** சொல்லின் இறுதியில் வரும் உயிர்மெய் எழுத்தும், சொல்லின் இறுதியில் வரும் உயிர் எழுத்தின் இயல்பை உடையதே.

ஏனெனில், சொல்லின் இறுதியில் உயிர்மெய் வந்தாலும், உச்சரிப்பில் இறுதியாய் ஒலிப்பது உயிரே.

உயிரே எனும் சொல்லில், இறுதியில் "ரே" என உயிர்மெய் வந்தாலும், ர் + ஏ, இறுதியாய் ஒலிப்பது, 'ஏ' எனும் உயிரே.

### நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்

***108. உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்***
***உயிரிறு சொல்முன் மெய்வரு வழியும்***
***மெய்யிறு சொல்முன் உயிர்வரு வழியும்***
***மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியுமென்***
***இவ்வென அறியக் கிளக்குங் காலை***
***நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்***
***ஆயீ ரியல புணர்நிலைச் சுட்டே.***

முன் = அடுத்து.

**பொருள்:** உயிரை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், உயிர் வருகின்ற விதத்தையும், உயிரை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், மெய் வருகின்ற விதத்தையும், மெய்யை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், உயிர் வருகின்ற விதத்தையும், மெய்யை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், மெய் வருகின்ற விதத்தையும், இவை என ஆராய்ந்து பார்க்கும்போது, நிறுத்தச்சொல் மற்றும் அதைப் பற்றி வரும் சொல் என, இரண்டு காரணிகள் உடையதாக, புணர்ச்சியைக் குறிப்பிடலாம்.

**விளக்கம்:** உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின்

முன், உயிர் எழுத்து வருகின்ற விதத்தையும், உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், மெய் எழுத்து வருகின்ற விதத்தையும், மெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், உயிர் எழுத்து வருகின்ற விதத்தையும், மெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன், மெய் எழுத்து வருகின்ற விதத்தையும் ஆராய்ந்து, இவை எனப் பொதுமைப்படுத்தும்போது, புணர்ச்சியை, நிறுத்தச்சொல் (நிலைமொழி) மற்றும் அதைப் பற்றி வரும் சொல் (வருமொழி) என, இரண்டு காரணிகள் உடையதாகச் சொல்லலாம்.

**மூன்று திரிபும் ஓரியல்பும்**

***109.*** *அவற்றுள்*
***நிறுத்தச் சொல்லின் ஈறா கெழுத்தொடு***
***குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்***
***பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்***
***பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்***
***தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்***
***தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்***
***மூன்றே திரிபிடன் ஒன்றே இயல்பென***
***ஆங்கந் நான்கே மொழிபுணர் இயல்பே.***

**பொருள்:** *நிலைமொழியின் இறுதியான எழுத்தோடு, அதைப் பற்றி வரும், வருமொழியின் முதல் எழுத்து இணைகையில், பெயர்ச் சொல்லுடன் பெயர்ச் சொல்லைச் சேர்க்கும்போதும், பெயர்ச் சொல்லுடன் வினைச் சொல்லைச் சேர்க்கும்போதும், வினைச் சொல்லுடன் பெயர்ச் சொல்லைச் சேர்க்கும்போதும், வினைச் சொல்லுடன் வினைச் சொல்லைச் சேர்க்கும்போதும், மூன்று இடங்களில் திரிந்து வந்தும், ஒரு இடத்தில் இயல்பாக இருந்தும், அங்கு மொத்தம் நான்குதான், சொல் புணரும் வகைகள்.*

**மூன்று திரிபாதல்**

***110.*** *அவைதாம்*
***மெய்பிறி தாதல் மிகுதல் குன்றலென்று***
***இவ்வென மொழிப திரியு மாறே.***

**பொருள்:** *அவை யாவை என்றால், மெய் வேறொன்றாய் ஆதல்,*

*மிகையாதல், மறைதல், ஆகியவை என்பர் அறிஞர், திரியும் வழியை.*

***விளக்கம்:*** *அவை யாவை என்றால்: ஒரு மெய் எழுத்து வேறொரு மெய் எழுத்தாய் மாறுதல், ஒரு மெய் எழுத்து புதியதாய் கூடுதல், ஒரு பழைய மெய் எழுத்து இல்லாமல் கழிதல் ஆகியவை, சொல் புணர்ச்சியில் திரியும் விதங்கள், என்பர் அறிஞர்.*

### அடைமொழிகளோடு புணர்தல்

***111. நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்***
***அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய.***

*அடை = அட் + ஐ. ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாவது.*

***பொருள்:*** *நிலைமொழியும் வருமொழியும், அடைமொழியோடு வந்தாலும், புணரும் இயல்புடையன.*

***விளக்கம்:*** *நல்ல கண்ணன் + இசைத்தான் இனிது. இதில், ''நல்ல'' என்பது அடைமொழி, ''கண்ணன்'' என்பது நிலைமொழி, ''இசைத்தான்'' என்பது வருமொழி, ''இனிது'' என்பது அடைமொழி. நல்ல கண்ணனிசைத்தான் இனிது எனப் புணர்க்கலாம்.*

### மரூஉமொழிப் புனர்ச்சி

***112. மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்***
***உரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே.***

***பொருள்:*** *வழக்கில் சிதைந்த சொல் தொடர்களிலும், இடம் மாறி வழங்கி இயல்பாகிவிட்ட சொல் தொடர்களிலும், புணரும் இயல்புடையன உள்ளன.*

***விளக்கம்:*** *''கண் மேல்'' எனும் சொல் தொடர், ''மீகண்'' என மருவினாலும், ''இல் முன்'' எனும் சொல் தொடர், முன்னில் –> முன்றில் என மயங்கினாலும், புணரும் இயல்புடையன.*

### இருவகைப் புணர்ச்சி

***113. வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்***
***வேற்றுமை யல்வழிப் புணர்மொழி நிலையும்***

**எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்**
**ஒழுக்கல் வலிய புணருங் காலை.**

*வேற்றுமை = வேறு + உமை. வேறுபட்ட தன்மை.*

***பொருள்:*** *சொல் புணர்ச்சி, வேற்றுமைப் பொருளில் நிகழ்ந்தாலும், வேற்றுமையற்ற தன்னியல் பொருளில் நிகழ்ந்தாலும், வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட வருமொழி வரும்பொழுது, எழுத்து, சாரியை ஆகிய இரு பண்புகளில், ஒன்றோ இரண்டுமோ திரியும்.*

***விளக்கம்:***

*விள + கோடு = விளங்கோடு. 'ங்' கூடுகின்றது. (வேற்றுமைப் பொருள்)*

*விள + குறிது = விளக்குறிது. 'க்' கூடுகின்றது. (அல்வழி – தன்னியல் பொருள்)*

*பனை + குறை = பனை + இன் + குறை = பனையின் குறை. (வேற்றுமைப் பொருள்). 'இன்' எனும் சாரியைக் கூடுகின்றது. உடன்படுமெய்யாகின்றது.*

*நிலம் + அத்து + குறை = நிலத்துக்குறை. நிலைமொழியின் எழுத்தான 'ம்' கழிகின்றது. 'க்' கூடுகின்றது. (வேற்றுமைப் பொருள்)*

*மன்றம் + அக்கு + காற்று = மன்றக்காற்று. நிலைமொழியின் எழுத்தான 'ம்' கழிகின்றது. 'அக்கு' எனும் சாரியையின் 'கு' கழிகின்றது. (வேற்றுமைப் பொருள்)*

**வேற்றுமை உருபுகள்**

***114.*** **ஐஒடு குஇன் அதுகண் ணென்னும்**
**அவ்வாறென்ப வேற்றுமை யுருபே.**

***பொருள்:*** *வேற்றுமை உருபுகளை, "ஐ, ஒடு, கு, இன், அது, கண்" எனும், அந்த ஆறு என்பர் அறிஞர்.*

***விளக்கம்:*** *அவன் + ஐ = அவனை. அவன் + ஒடு = அவனொடு. அது + கு = அதுக்கு. அவன் + இன் = அவனின். அவன் + அது = அவனது. அவன் + கண் = அவன்கண்.*

### *வலிமுதல் உருபு புணர்நிலை*

***115. வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு***
***ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்.***

***பொருள்:*** *வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட வேற்றுமை உருபுகள் புணரும்போது, பொருந்தும் இடங்களில், தனிமெய் இடையில் கூட வேண்டும்.*

***விளக்கம்:*** *வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட வேற்றுமை உருபுகள், "கு" மற்றும் "கண்" ஆகிய இரண்டாகும். இவை, புணரும் பொழுது, பொருந்தும் இடங்களில், தனிமெய் இடையில் கூட வேண்டும்.*

*தேர் + கு = தேர்க்கு.*
*நீர் + கண் = நீர்க்கண்.*
*அவன் + கண் = அவன்கண். இங்கு பொருந்தாது.*

### *ஆறனுருபின் அகரம் கெடுதல்*

***116. ஆறன் உருபின் அகரக் கிளவி***
***ஈறா(கு) அகரமுனைக் கெடுதல் வேண்டும்.***

***பொருள்:*** *ஆறாவது உருபான, அகரமுடன் துவங்கும் சொல், அகரத்தை இறுதியாகக் கொண்ட நிலைமொழியுடன் புணரும்போது, தன் அகரத்தை இழக்கும்.*

***விளக்கம்:*** *அகரமுடன் துவங்கும் சொல், "அது", ஆறாவது உருபு. அது, அகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லுடன் புணரும்போது, தன் அகரத்தை இழக்கும்.*

*எடுத்துக்காட்டு: நல்ல + அது = நல்லது.*

### *வேற்றுமை உருபுகள் நிற்குமிடம்*

***117. வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.***

***பொருள்:*** *பெயரை நிலைமொழியாய்ப் புணரும் நிலையில்தான் வேற்றுமை உருபு தோன்றும்.*

***விளக்கம்:*** *பெயரை அடுத்து வேற்றுமை உருபு தோன்றும். பெயருக்கு முன் வேற்றுமை உருபு தோன்றாது.*

*அவன் + ஐ = அவனை என வரும். ஐ + அவன், ஒடு + அவன், கு + அவன், இன் + அவன் என வராது. "அது" வும் "கண்" ணும் வேற்றுமை உருபுகளாகவும், சொற்களாகவும், வேறு வேறு பொருள் கொண்டும் உள்ளன. எனவே, அவை வருவன போல், மயக்கம் தோன்றும்.*

***பெயர்களின் பெயர், முறை, தொகை***

***118. உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று***
***ஆயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே.***

***பொருள்:*** *பெயரை நிலையாகக் குறித்தல், உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர் என, இரண்டாகும் என்பர் அறிஞர்.*

***பெயர்களின் பின்னர் சாரியை வருதல்***

***119. அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே.***

***பொருள்:*** *பெயரை அடுத்து சாரியை வரும்.*

***சாரியைகள் இவையெனல்***

***120. அவைதாம்***
***இன்னே வற்றே அத்தே அம்மே***
***ஒன்னே ஆனே அக்கே இக்கே***
***அன்னென் கிளவி உளப்படப் பிறவும்***
***அன்ன என்ப சாரியை மொழியே.***

*சாரியை = சார் + இயை. சார்ந்து இணைபவை.*

***பொருள்:*** *அவை யாவை என்றால்: இன், வற்று, அத், அம், ஒன், ஆன், அக்கு, இக்கு, அன் எனும் சொல் உட்பட, அதைப் போன்ற பிறவும் சாரியைச் சொல் என்பர்.*

***எடுத்துக்காட்டு:*** *முருகன் + இன் = முருகனின். அ + வற்று + ஆல் = அவற்றால். பண் + அத் + தட்டுப்பாடு = பணத்தட்டுப்பாடு. பண் + அம் = பணம். அவன் + ஒன் + செய்தான் = அவனொன்*

செய்தான். அவன் + ஆன் + ஆனது = அவனான் ஆனது. என் + அக்கு = எனக்கு. அவன் + உக்கு = அவனுக்கு.

### இன் சாரியையினது முதல் திரிதல்

**121. அவற்றுள்**
**இன்னின் இகரம் ஆவின் இறுதி**
**முன்னர்க் கெடுதல் உரித்து மாகும்.**

**பொருள்:** மேற்சொன்ன சாரியைகளுள், நிலைமொழியின் இறுதியில் ''ஆ'' வந்தால், சாரியை ''இன்'' னின் இகரம், மாறுதல் அடையும்.

**எடுத்துக்காட்டு:** ஆ + இன் + பால் = ஆவின் பால். நூற்பா + இன் + தன்மை. நூற்பாவின் தன்மை. ஆயின் பால் எனும் புணர்ச்சியும், நூற்பாயின் தன்மை எனும் புணர்ச்சியும், பொருளை மாற்றி விடும்.

### இன் சாரியையினது இறுதி திரிதல்

**122. அளவாகு மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை**
**னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே.**

**பொருள்:** அளவைக் குறிக்கின்ற சொல் நிலைமொழியாய் இருக்க, அச்சொல்லின் இறுதியில் உயிர் எழுத்து இருக்க, ''இன்'' எனும் சாரியை சேர்ந்தால், ''இன்'' னின் ''ன்'', ''ற்'' என மாறி நிற்கும்.

**எடுத்துக்காட்டு:** ஆழாக்கு + இன் + பாதி. ஆழாக்கிற் பாதி. ஆழாக்கின் அளவில் பாதி எனப் பொருள்படும். ஆழாக்கின் பாதி என்றால், அளக்கும் கருவியின் பாதி எனப் பொருள் வந்துவிடும்.

### வற்றுச் சாரியையினது முதல் திரிதல்

**123. வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்**
**அஃகான் நிற்றல் ஆகிய பண்பே.**

**பொருள்:** சுட்டெழுத்தை முதலாகவும், ''ஐ'' எனும் எழுத்தை இறுதியாகவும் கொண்ட சொல்லை அடுத்து, வற்று எனும் சாரியை வந்தால், ''வற்று'' வின் ''வ'', ''அ'' வாக நின்று ''ய''

பண்புடையதாகும்.

**எடுத்துக்காட்டு:** அவை + வற்று + ஐ = அவையற்றை.

அ + இ = ஐ. இ + அ = ய. எனவே, அவை + அற்று என புணரும்போது, 'அவை'யின் கடைசியில் ஒலிக்கும் 'இ', 'அற்று' வின் முதலில் உள்ள 'அ' உடன் சேர்ந்து, 'ய' என ஆகும்.

### னகர ஈற்றுச் சாரியை திரியும் இடம்

**124. னஃகான் றஃகான் நான்கன் உருபிற்கு.**

**பொருள்:** "ன்" ஐ இறுதியாக கொண்ட சாரியையை அடுத்து, நான்காம் வேற்றுமை வந்தால், "ன்", "ற்" என மாறும்.

**விளக்கம்:** இன், ஒன், ஆன், அன் ஆகிய நான்கு சாரியைகளின் இறுதி "ன்". அவற்றை அடுத்து, "கு" எனும் நான்காவது வேற்றுமை உருபு வந்தால், "ன்", "ற்" என மாறும்.

**எடுத்துக்காட்டு:** அவன் + இன் + கு = அவனிற்கு. கோ + ஒன் + கு = கோஒற்கு. சிவன் + ஆன் + கண்டான் = சிவனாற் கண்டான். அது + அன் + கு = அதற்கு.

### ஆன் சாரியை ஈறு திரிதல்

**125. ஆனின் னகரமும் அதனோ ரற்றே**
**நாள்முன் வரூஉம் வல்முதற் றொழிற்கே.**

**பொருள்:** நிலைமொழியான நாள் பெயரை அடுத்து வரும் சாரியை, "ஆன்" இன் "ன்" உம் அதைப் போன்றதே, வருமொழி வல்லெழுத்தை முதலாகக் கொண்ட வினைச்சொல்லாக இருந்தால்.

**விளக்கம்:** நிலைமொழி நாள் பெயராய் இருந்து, வருமொழி வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட வினைச்சொல்லாயும் இருந்து, இவற்றிற்கு இடையில், "ஆன்" எனும் சாரியை வந்தால், மேலே நான்காவது வேற்றுமை உருபிற்கு நிகழ்ந்ததுபோல், "ஆன்" இன் "ன்", "ற்" என மாறும்.

**எடுத்துக்காட்டு:** திங்கள் + ஆன் + கொண்டான் = திங்களாற் கொண்டான். திங்கள் கிழமையால் கொண்டான் எனப் பொருள்படும். விடுத்து, திங்களான் கொண்டான் என்றால், திங்களானவன் கொண்டான் எனப் பொருள் மாறிவிடும். பொருள்

மயக்கமும் குழப்பமும் தவிர்க்க வேண்டியே, இத்தகைய விதிகள் உண்டாயின போலும்.

### அத்துச் சாரியையினது அகரம் கெடுதல்

***126. அத்தின் அகரம் அகரமுனை யில்லை.***

***பொருள்:*** *“அத்” இன் அகரம், அகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன் நிற்காது.*

***எடுத்துக்காட்டு:*** *விள + அத்து + காய். விளத்துக் காய்.*

### இக்குச் சாரியையினது இகரம் கெடுதல்

***127. இக்கின் இகரம் இகரமுனை யற்றே.***

***பொருள்:*** *“இக்கு” வின் இகரம், இகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன் நிற்காது.*

***எடுத்துக்காட்டு:*** *தாடி + இக்கு + வண்ணம் = தாடிக்கு வண்ணம்.*

### ஐகார ஈற்றின் முன்னரும் இகரம் கெடுதல்

***128. ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்.***

***பொருள்:*** *“ஐ” யின் முன்னும் அந்த இயல்பு நிற்கும்.*

***விளக்கம்:*** *“இக்கு” வின் இகரம், ஐகாரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் முன்னும் நிற்காது.*

***எடுத்துக்காட்டு:*** *முத்திரை + இக்கு + வந்தான். முத்திரைக்கு வந்தான்.*

*அ + இ = ஐ என்று ஆகின்றது. ‘ஐ’ இன் இறுதி ஒலிப்பில், ‘இ’ வருவதால், அதை அடுத்து மீண்டும் ‘இன்’ னின் ‘இ’ வந்ததால், அது கழிகின்றது.*

### அக்குச் சாரியையினது ஈறு திரிதல்

***129. எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி***
***அக்கின் இறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே***

**குற்றியலுகரம் முற்றத் தோன்றாது.**

***பொருள்:*** "ம்" என முடியும் எந்தப் பெயரை அடுத்தும், "அக்கு" வந்து, வல்லின எழுத்து வருமொழியின் முதல் எழுத்தானால், "அக்கு" வின் கடைசி மெய்,"க்", நிலைமொழியின் "ம்" ஒடு கழியும், "க்" ஐ அடுத்த குற்றியல் உகரமும் முற்றிலும் தோன்றாமல் அழியும்.

***எடுத்துக்காட்டு:*** மன்றம் + அக்கு + காற்று = மன்றக்காற்று.

குன்றம் + அக்கு + கூகை. குன்றக்கூகை.

### அம் சாரியையினது ஈறு திரிதல்

***130.*** **அம்மின் இறுதி கசதக் காலைத்**
**தன்மெய் திரிந்து ஙஞந ஆகும்.**

***பொருள்:*** "அம்" எனும் சாரியைக்கு அடுத்து, வருமொழியில், க், ச், த் முதலாக வந்தால், அவை, ங், ஞ், ந் என மாறும்.

***எடுத்துக்காட்டு:*** புளி + அம் + கொட்டை = புளியங்கொட்டை. புளி + அம் + சோறு = புளியஞ்சோறு. புளி + அம் + தோல் = புளியந்தோல்.

### அம் சாரியை இன்மை

***131.*** **மென்மையும் இடைமையும் வரூஉம் காலை**
**இன்மை வேண்டும் என்மனார் புலவர்.**

என்மனார் = என் + மன் + ஆர். எனும் மனம் / கருத்து உடையவர்.

***பொருள்:*** மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாக கொண்ட வருமொழிக்கு முன்பு, "அம்" எனும் சாரியை இருக்கக்கூடாது, என்னும் கருத்துடையவர்கள் புலவர்கள்.

***எடுத்துக்காட்டு:*** புளி + மணம் = புளிமணம். புளியம்மணம் / புளியமணம் என வராது. புளி + வத்தல். புளிவத்தல் என வரும். புளியம்வத்தல் / புளியவத்தல் என வராது. பொருண்மையில் மயக்கம், குழப்பம் வரும் போலும்.

### இன் சாரியை இன்மை

***132.*** **இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு**
**இன்னென் சாரியை இன்மை வேண்டும்.**

***பொருள்:*** "இன்" எனும் வேற்றுமை உருபை அடுத்து, "இன்" எனும் சாரியை இருக்கக் கூடாது.

***எடுத்துக்காட்டு:*** புளி + இன் + புளிப்பு = புளியின் புளிப்பு என வரும். புளியினின் புளிப்பு என வராது. புளியைவிட புளிப்பு என்பது எளிமையான கருத்து அல்ல, சிக்கலானது. அது, அன்று, வேண்டப்படவில்லை போலும்.

**"ஒடு" உருபு சாரியை பெறுதலும் பெறாமையும்**

***133.*** **பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப**
**வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்**
**தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்**
**ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்**
**சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்கா(து)**
**இடைநின் றியலுஞ் சாரியை இயற்கை**
**உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்.**

***பொருள்:*** பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் பிரிந்து ஒலிக்கையில், வேற்றுமை உருபு சேர்கின்ற இடத்தில், "இன்", ஒட்டும் முறைப்படி சேர்ந்து வருதலும், பெயர்ச்சொல்லும் வினைச் சொல்லும் சேர்ந்து ஒலிக்கையில், "இன்" னின் தோற்றம் வேண் டாத சொல் சேர்க்கையில், வேற்றுமை உருபு சேர்கின்ற இடத்தில், சொற்களுக்கு இடையில் நின்று இயங்கும் இயல்புடைய "இன்" வராமல் இருத்தலும், ஆகிய இரண்டும், "ஒடு" வைப் பொறுத் தவரை ஒன்றுதான். பொருண்மை ஒன்றுதான்.

***எடுத்துக்காட்டு:*** பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் பிரிந்து ஒலித்தல் – தென்றலினொடு வந்தது வாசம்.

பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் சேர்ந்து ஒலித்தல் – தென்றலொடுவந்தது வாசம்.

**அத்து வற்று வருமிடத்து நிகழும் விகாரம்**

***134.*** **அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்**
**ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே**
**அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே.**

**பொருள்:** ''அத்து'', ''வற்று'' ஆகிய இரு சாரியை சொற்கள், நிலைமொழியான பெயர்ச்சொல்லோடு சேரும்போது, அந்நிலை மொழியின் இறுதித் தனிமெய் கழியும், என்பது தெளிவானதைப் போல், அச்சாரியைகளுக்கு அடுத்து வரும் வல்லின எழுத்து, கூடும் என்பதும், தெளிய வேண்டும்.

**எடுத்துக்காட்டு:** நிலம் + அத்து + குறை. நிலத்துக்குறை. நிலைமொழியான ''நிலம்'' இன், ''ம்'' கழிகின்றது. வருமொழியான ''குறை'' யின் முதல் வல்லின எழுத்தான ''க்'' விற்கு முன்னால், ''க்'' கூடுகின்றது.

### எழுத்துச் சாரியைகள்

**135. காரமுங் கரமுங் கானொடு சிவணி**
**நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை.**

சிவணி = சேர்ந்து. நேர் = நிலை. காரம் = க் + ஆர் + அம். மெய் / மெய்யைப் பிரியும் தன்மை. கரம் = க் + அர் + அம் = மெய் / மெய்யைப் பிரியும் தன்மை. கான் = க் + ஆன் = பொருண்மை ஆனது.

**பொருள்:** காரம், கரம், கான் ஆகிய மூன்றும் சேர்ந்து, எழுத்து சாரியைகளாய், நிலையாய்த் தோன்றும்.

### நெட்டெழுத்துகள் கரமும் கானும் பெறா

**136. அவற்றுள்**
**கரமுங் கானும் நெட்டெழுத் திலவே.**

**பொருள்:** மேற்கூறியவற்றுள், ''கரம்'' மற்றும் ''கான்'' எனும் சாரியைகள், நெட்டெழுத்துக்கு இல்லை.

**விளக்கம்:** ''கரம்'' மற்றும் ''கான்'' எனும் சாரியைகள், நெட்டெழுத்துடன் சேராது / சேர்க்கக்கூடாது. மயக்கம், குழப்பம் வரும் போலும்.

### குற்றெழுத்திற்குச் சாரியை

**137. வரன்முறை மூன்றுங் குற்றெழுத் துடைய.**

**பொருள்:** சார்ந்து வரும் சாரியைகள் மூன்றும், குற்றெழுத்துக்கு

உரியன.

**விளக்கம்:** "கரம்", "காரம்", "கான்" ஆகிய மூன்று சாரியைகளும், குற்றெழுத்துடன் சேர்ந்து வரும்.

**எடுத்துக்காட்டு:** அகரம், அகாரம், அஃகான்

### ஐ, ஔ – கான் சாரியையும் பெறுதல்

**138. ஐகார ஔகாரங் கானொடுந் தோன்றும்.**

**பொருள்:** ஐகாரமும் ஔகாரமும் "கான்" எனும் சாரியையுடனும் வரும்.

**எடுத்துக்காட்டு:** ஐகான், ஔகான்.

### உடல்மேல் உயிர்வந் தொன்றுதல்

**139. புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது**
**மெய்யொடுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்தே.**

**பொருள்:** தனிமெய்யை இறுதியான எழுத்தாகக் கொண்ட, நிலைமொழியின் முன், உயிர் எழுத்து தனித்து நின்று இயங்காது. உயிர் எழுத்து, அம்மெய் எழுத்துடன் சேர்ந்து, தன்தனி நிலையை அழிக்கும்.

**எடுத்துக்காட்டு:** ஆல் + அ. ஆல.

### உயிர் பிரிந்த மெய்யின் இயல்பு

**140. மெய்யுயிர் நீங்கின் தன்னுரு வாகும்.**

**பொருள்:** மெய்யை உயிர் பிரிந்தால், மெய் தன் வடிவம் ஆகும்.

**விளக்கம்:** உயிர்மெய்யை, உயிர் பிரிந்தால், தனிமெய்யாகும்.

**எடுத்துக்காட்டு:** ஆல – அ = ஆல்.

### உடம்படுமெய் தோன்றுதல்

**141. எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே**
**உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்.**

*வரையார் = விதி எழுதார்.*

**பொருள்:** *எல்லாச் சொல்லுக்கும் உயிர்வருகின்ற விதத்தில், உடம்படுமெய்யின் உருவம் கொள்ள வேண்டும். அதற்கெனப் பொது விதி எழுதவில்லை.*

**விளக்கம்:** *இ + அ = ய. உ + அ = வ. "ய" உம் "வ" உம், அடிப்படையில், உயிர் எழுத்துகளாய் இருப்பினும், அவற்றின் ஒலிப்பில், அகரம் சேர்ந்த மெய்போல் ஒலிக்கின்றன. எனவே, அவை மெய்உடன் பட்டன. உடன்படுமெய் = உடம்படுமெய். சொற்களின் இறுதியும் முதலும் எந்த எழுத்துகள் என்பதைப் பொறுத்து, இரண்டில் ஒரு உடம்படுமெய் அமையும்.*

**ஓசைவேறுபாட்டால் புணர்ச்சி வேறுபடுதல்**

***142.** **எழுத்தோ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி***
***இசையின் திரிதல் நிலைஇய பண்பே.***

**பொருள்:** *எழுத்துகள் ஒரே மாதிரி இருப்பினும், பொருளை வெளிப்படுத்தும் சொல் சேர்க்கைகள், ஒலிப்பதின் மாறுபாடுகளால், வெவ்வேறாய் நின்று, வெவ்வேறு பொருள்தரும் பண்புடையன.*

***எடுத்துக்காட்டு:***

*குன்றேறாமா = குன்று + ஏறாமா? குன்று ஏறமாட்டோமா?*

*குன்றேறாமா = குன்று + ஏறா + மா. குன்று ஏறாத மாடு.*

***புறனடை***

***143.** **அவைதாம்***
***முன்னப் பொருள புணர்ச்சி வாயின்***
***இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே.***

**பொருள்:** *அச்சொல் சேர்க்கைகளின் பொருள்கள், அவை வெளிப்படுத்தப்படும் இடம், நபர், ஒலிமாறுபாடு, சூழல் போன்றவற்றைப் பொறுத்தன. இதுதான், சொல்சேர்க்கையின் பொருள் என, வரிஎழுத்துகளை மட்டும் வைத்துக் கொண்டு, சொல்லிவிட முடியாது.*

# 5. தொகை மரபு

*தொகை = த் + ஒக் + ஐ. வடிவம் ஒத்த மெய்யினது ஒன்றுச்சேர்ப்பு.*

**கசதபக்களின் முன்னர் மென்கணம் தோன்றலும் தோன்றாமையும்**

***144.* கசதப முதலிய மொழிமேல் தோன்றும்**
**மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்**
**ஙஞநம வென்னும் ஒற்றா கும்மே**
**அன்ன மரபின் மொழிவயி னான.**

***பொருள்:*** *"க்", "ச்", "த்", "ப்" ஆகிய வல்லின மெய் எழுத்தை முதலாகக் கொண்ட வருமொழிக்கு, முன்பு வரும் மெல்லின எழுத்தின் தோற்றம், அதற்குரிய வழக்கைக் கொண்டச் சொற்களின் இடங்களில், கூறிய வரிசைப்படி, "ங்", "ஞ்", "ந்", "ம்" என்னும் தனிமெய் எழுத்தாகும்.*

***எடுத்துக்காட்டு:*** *விள + கொட்டை = விளங்கொட்டை. விள + சாறு = விளஞ்சாறு. விள + தோல் = விளந்தோல். விள + பூ = விளம்பூ.*

***விளக்கம்:*** *வழக்கு அற்ற சொற்களின் இடங்களில், அவை அவ்வாறு தோன்றாது.*

***எடுத்துக்காட்டு:*** *விள (மரம்) + குறுமை = விளக்குறுமை என வரும். விளங்குறுமை என வராது.*

***வருமொழியின் மென்கணமும், இடைக்கணமும் உயிரும் இயல்பாதல்***

***145.* ஞநம யவெனும் முதலாகு மொழியும்**
**உயிர்முத லாகிய மொழியும் உளப்பட**

***அன்றி யனைத்தும் எல்லா வழியும்***
***நின்ற சொன்முன் இயல்பா கும்மே.***

***பொருள்:*** *''ஞ்'', ''ந்'', ''ம்'' ஆகிய மெல்லின எழுத்துகளும், ''ய்'' எனும் இடையின எழுத்தும், உயிர் எழுத்துகள் பன்னிரண்டும், வருமொழியின் முதலாக இருந்தால், அது, நிலைமொழியுடன் இணங்கி, எந்த விதிவிலக்கும் இன்றி, வேற்றுமை உருபுகள் சேர்ந்த போதும், சாரியைகள் இணைந்த போதும், திரிபின்றி, இயல்பாகப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:*** *கடல் + ஞானம் கடல்ஞானம். கடல் + நாணம் = கடல்நாணம். கடல் + மாயம் = கடல்மாயம். கடல் + யானம் = கடல்யானம். கடல் + அட்டை = கடலட்டை. கடல் + ஆமை = கடலாமை. கடல் + இறா = கடலிறா...., கடல் + ஔவை = கடலௌவை. கடல் + இன் + ஞானம் = கடலின்ஞானம்,.., கடல் + ஏ + ஞானம் = கடலேஞானம்,.., கடல் + உம் + ஔவை = கடலுமௌவை.*

### ***மெல்லெழுத்து திரிந்தும் விதியிலாமை***

***146. அவற்றுள்***
***மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்***
***சொல்லிய தொடர்மொழி இறுதி யான.***

***பொருள்:*** *மேற்கூறிய எழுத்துகளுள், வருமொழியின் முதலில் வரும் மெல்லின எழுத்துகள், நிலைமொழியின் இறுதி எழுத்தால், திரிந்தாலும், அறிஞர்கள், அதற்கானவிதிகளைஉருவாக்குவதில்லை.*

***விளக்கம்:*** *விதிகள் ஏற்படுத்தாமைக்குக் காரணம், சிறுபான்மை நிகழ்வுகளாக இருக்கலாம்.*

### ***யாவும் ஞாவும் வினையில் ஒருதன்மையவாதல்***

***147. ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்***
***வினையோ ரனைய என்மனார் புலவர்.***

***பொருள்:*** *''ண்'', ''ன்'' ஆகிய தனிமெய் எழுத்துகளை, இறுதியாகக் கொண்ட நிலைமொழியை, அடுத்து வரும் ''ய்'' அல்லது ''ஞ்'' ஐ முதலாகக் கொண்ட வருமொழி, வினைச்சொல்லாய் இருந்தால், அவை இரண்டும் ஒரே பொருண்மையைத் தரும், எனும் கருத்து டையவர்கள், புலவர்கள்.*

***விளக்கம்:*** *பண் யாத்தான் = பண் ஞாத்தான். ஒலிப்பில், ''ய்'' மற்றும் ''ஞ்'' மிக நெருக்கம் உடையதாய் உள்ளன. சொல் நிகழ்வுகளும் சிறுபான்மையாக உள்ளன என்பதால், அனுமதிக்கப் பட்டது போலும்.*

***ணகர னகர ஈறுகள் அல்வழியில் திரியாமை***

***148. மொழிமுத லாகும் எல்லா எழுத்தும்***
***வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்***
***வேற்றுமை யல்வழித் திரிபிடன் இலவே.***

***பொருள்:*** *சொல்லுக்கு முதலாக வரக்கூடிய எல்லா எழுத்து களும், வருமொழியில் முதலாக இருக்க, நிலைமொழியின் இறுதி எழுத்தாக ''ண்'' அல்லது ''ன்'' நின்று, அல்வழியில் அல்லது தன்னி யல் பொருளில் புணர்ந்தால், திரிபுகள் நடக்காது.*

***விளக்கம்:*** *அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய 12 உயிர் எழுத்துகளும், க், ச், ஞ், த், ந், ப், ம், ய், வ் ஆகிய 9 மெய் எழுத்துகளும், மொழிமுதல் குற்றியலுகரம் என 1 சார்பு எழுத்தும், ஆக மொத்தம் 22 எழுத்துகள், வருமொழியில் முதலாக இருக்க, நிலைமொழியின் இறுதி எழுத்தாக ''ண்'' அல்லது ''ன்'' நின்று, அல்வழியில் அல்லது தன்னியல் பொருளில் புணர்ந்தால், திரிபுகளான மெய் வேறொன்றாதலோ, கூடுதலோ, கழிதலோ நிகழாது. இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:*** *பொன் + அறிது = பொன்அறிது.*

*மண் + கடிது = மண்கடிது. பொன் + சிறிது = பொன்சிறிது.*

***வேற்றுமையிலும் அல்வழியிலும் திரியா ஈறுகள்***

***149. வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி***
***மேற்கூ றியற்கை யாவயி னான.***

***பொருள்:*** *வல்லின எழுத்துகள், வருமொழியில் முதலில் இல்லாமல் இருக்க, நிலைமொழியின் இறுதி எழுத்தாக ''ண்'' அல்லது ''ன்'' நின்று, வேற்றுமைப் பொருளில் புணர்ந்தாலும்,*

மேலே கூறியப்படி, திரிபுகளான மெய் வேறொன்றாதலோ, கூடுதலோ, கழிதலோ நிகழாது. இயல்பாய்ப் புணரும்.

**விளக்கம்:** நிலைமொழியின் இறுதியில், 'ண்', 'ன்' இருக்க, வருமொழியின் முதல் எழுத்தாக, சொல்லின் முதலில் வரும் மெல்லின, இடையின, உயிர் எழுத்துகள் வந்து, வேற்றுமைப் பொருளில் புணர்ந்தாலும், திரிபுகளின்றி இயல்பாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:** *பண் + ஞானம் = பண்ஞானம். பொன் + மாயம் = பொன்மாயம்.*

### லகர னகர ஈற்றின் முன்னர்த் தகர நகரங்கள் திரிதல்

**150. லனவென வரூஉம் புள்ளி முன்னர்த்
தந எனவரிற் றனவாகும்மே.**

**பொருள்:** நிலைமொழியின் இறுதியில் இருக்கும், ''ல்'', ''ன்'' எனும் தனிமெய்கள், வருமொழியின் முதலில், ''த்'', ''ந்'' வந்தால், ''ற்'', ''ன்'' என மாறும்.

**எடுத்துக்காட்டு:** *கல் + தரை = கற்றரை. மன் + நரை = மன்னரை. அல் + திணை = அற்றிணை. அல் + திணை = அஃறிணை. நல் + திணை = நற்றிணை.*

(தகரம் வரும் வழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே – எழு.370.

வருமொழியின் முதலில், ''த்'' வரும்பொழுது, நிலைமொழியின் இறுதியில், ''ல்'', ''ஃ'' என திரிவதும் குற்றமில்லை, என்னும் கருத்துடையவர்கள் புலவர்கள்)

### ணளமுன் தநமெய் டண ஆதல்

**151. ணள வென் புள்ளிமுன் டண எனத் தோன்றும்.**

**பொருள்:** நிலைமொழியின் இறுதியில் இருக்கும், ''ண்'', ''ள்'' எனும் தனிமெய்கள், வருமொழியின் முதலில், ''த்'', ''ந்'' வந்தால், ''ட்'', ''ண்'' என மாறும்.

**எடுத்துக்காட்டு:** *கண் + திரை = கட்டிரை. கள் + நலம் = கண்ணலம்.*

*முன்னிலை வினைச்சொல் முடியுமாறு*

***152.*** ***உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்***
***புள்ளியிறுதி முன்னிலைக் கிளவியும்***
***இயல்பாகுநவு உறழ்பாகுநவும் என்று***
***ஆயீர் இயல வல்லெழுத்து வரினே.***

***பொருள்:*** *உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட முன்னிலைச் சொல்லும், தனிமெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட முன்னிலைச் சொல்லும், வருமொழியின் முதலாக வல்லின எழுத்து வந்தால், இயல்பாயும், திரிந்தும், என இரண்டு வகைகளாகப் புணரும் இயல்புடையன.*

***எடுத்துக்காட்டு:*** *சா + கள்வன் = சாகள்வன் / சாங்கள்வன். செய் + காவலன். செய்காவலன் / செய்க்காவலன்.*

*சில ஈறுகட்கு ஏலாமை*

***153.*** ***ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்***
***ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியும்***
***குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட***
***முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே.***

*உளப்பட = புணர*

*முற்ற = முழுவதுமாய்*

***பொருள்:*** *“ஔ” வை இறுதியாகக் கொண்ட சொல்லும், “ஞ்”, “ந்”, “ம்“, “வ்” ஆகிய தனிமெய்யை இறுதியாகக் கொண்ட சொல்லும், குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும், புணர்வதற்கு, முன்னிலைச் சொல்லை அடுத்து முழுவதுமாக வராது.*

***விளக்கம்:*** *செய் + கௌ = செய்கௌ என வராது. செய் + தெவ் = செய்தெவ் என வராது. செய் + ஆடு = செய்ஆடு என வராது.*

*உயர்திணைப் பெயர் புணருமாறு*

***154.*** ***உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்***
***புள்ளி யிறுதி உயர்திணைப் பெயரும்***

*எல்லா வழியும் இயல்பென மொழிப.*

***பொருள்:*** *உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட உயர்திணைப் பெயரும், தனிமெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட உயர்திணைப் பெயரும், உயிர், வல்லின, மெல்லின மற்றும் இடையின எழுத்துகள் முதலாய் வரும் சொற்களுடன், திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*நங்கை / அவன் காட்சி, சாட்சி, ஞானம், தண்டை, நாடு, பாட்டு, மாடு, யானம், வாகனம்; அகம், ஆக்கம், இடம், ஈகை, உடை, ஊக்கம், எடை, ஏக்கம், ஐயம், ஒட்டகம், ஓணான், ஔவை; கூடு. (பெயரும் பெயரும் புணர்தல்)*

*நம்பி / அவன் கண்டான், சென்றான், ஞான்றான், தாண்டினான், நாடினான், பாடினான், மயங்கினான், யாசித்தான், வாசித்தான், அறுத்தான், ஆற்றினான், இட்டான், ஈந்தான், உடுத்தான், ஊட்டி னான், எழுந்தான், ஏங்கினான், ஐக்கியமானான், ஒளிந்தான், ஓடினான், ஔவினான். (பெயரும் வினையும் புணர்தல்)*

*கண்டான், சென்றான், ஞான்றான், தாண்டினான், நாடினான், பாடினான், மயங்கினான், யாசித்தான், வாசித்தான், அறுத்தான், ஆற்றினான், இட்டான், ஈந்தான், உடுத்தான், ஊட்டினான், எழுந்தான், ஏங்கினான், ஐக்கியமானான், ஒளிந்தான், ஓடினான், ஔவினான் அவன் / நம்பி. (வினையும் பெயரும் புணர்தல்)*

*கண்டான் சென்றான், ஞான்றான் தாண்டினான், நாடினான் பாடினான், மயங்கினான் யாசித்தான், வாசித்தான் அறுத்தான், ஆற்றினான் இட்டான், ஈந்தான் உடுத்தான், ஊட்டினான் எழுந்தான், ஏங்கினான் ஐக்கியமானான், ஒளிந்தான் ஓடினான், ஔவினான் அஃகினான் (வினையும் வினையும் புணர்தல்)*

### இகர ஈற்று உயர்திணைப் பெயர் திரிபு பெறுதல்

***155. அவற்றுள்***
***இகர ஈற்றுப்பெயர் திரிபிடனுடைத்தே.***

***பொருள்:*** *மேற்கூறியவற்றுள், இகர ஈற்று உயர்திணைப் பெயர், திரிந்து புணரும் இடத்தையும் உடையது.*

***எடுத்துக்காட்டு:***

*நம்பி + இடம் = நம்பியிடம். நம்பி + அகம் = நம்பியகம், நம்பி + ஆக்கம் = நம்பியாக்கம்,... நம்பி + அறுத்தான் = நம்பியறுத்தான். (உயிர், மெய்யாய் திரிதல்).*

*சீர்த்தி (உயர்திணை உரிச்சொல்–சொல்–பெயர்–157) + பண் = சீர்த்திப்பண். (மெய் ஒற்று கூடும் திரிபு).*

**விரவுப் பெயர் இயல்பாதல்**

***156. அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா ருளவே.***

***பொருள்:*** *அஃறிணை, உயர்திணைப் பெயருடன் வந்தால், இயல்பாய்ப் புணர்வதும் உண்டு.*

***விளக்கம்:*** *கறுப்பு மாடு, கறுப்பன் என உயர்திணை ஆண்பால் பெயர் பெற்றால், கறுப்பு + தலை = கறுப்புத்தலை என, திரிந்து புணர்வதற்குப் பதில், கறுப்பன் தலை எனத் திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.*

***157. புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்***
***வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையான்***
***தம்மி னாகிய தொழிற்சொல் முன்வரின்***
***மெய்ம்மை யாகலும் உறழத் தோன்றலும்***
***அம்முறை இரண்டும் உரியவை உளவே***
***வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.***

*வல்லெழுத்து மிகுதி = வல்லின எழுத்து கூடுதல்.*
*சொல்லிய முறையான் = ஒலிக்கின்ற முறையால்*
*தம்மினாகிய = தம் இனமான*
*மெய்ம்மை = இயல்புப் புணர்ச்சி.*
*போற்ற வேண்டும் = நினைவு கூற வேண்டும்.*

***பொருள்:*** *தனிமெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும், உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும், தம் இனமான வினைச்சொல்லை அடுத்து வந்து, ஒலிக்கின்ற முறைகளால், வல்லின எழுத்து கூடாமல் இயல்பாகவும், கூடி திரிபாகவும், ஆக இரண்டுவித புணர்ச்சியும், உரிச்சொற்களால் நிகழும் என்பதை, வேற்றுமையைக் கற்கும்போது, நினைவு கூற வேண்டும்.*

*எடுத்துக்காட்டு:* கத்திய கிளி , கத்தியக் கிளி. தேய்ந்த சந்திரன், தேய்ந்தச் சந்திரன். முளைத்த தாமரை, முளைத்தத் தாமரை. சீறிய பாம்பு, சீறியப் பாம்பு.

*விளக்கம்:* புள்ளியிறுதி = சந்திரன். உயிரிறு கிளவி = கிளி. இனமான வினைச்சொற்கள் = கத்திய, தேய்ந்த, முளைத்த, சீறிய.

### இரண்டாம் வேற்றுமைத் திரிபுகள்

*158.* **மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்**
**வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்**
**இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்**
**உயிர்மிக வருவழி யுயிர்கெட வருதலும்**
**சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலும்**
**சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையலும்**
**சாரியை யியற்கை உறழத் தோன்றலும்**
**உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்**
**அஃறிணை விரவுப்பெயர்க் கவ்விய னிலையலும்**
**மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலும்**
**அன்ன பிறவுந் தன்னியல் மருங்கின்**
**மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கும்**
**ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப.**

**பொருள்:** ஐகார வேற்றுமைத் திரிபு,

1. மெல்லின எழுத்து கூடிவரும்போது, வல்லின எழுத்தோடு கூடுவதும்;

2. வல்லின எழுத்து கூடிவரும்போது, மெல்லின எழுத்தோடு கூடுவதும்;

3. இயற்கையாய்ப் புணரும் இடத்தில், கூடுதல் ஆகலும்;

4. உயிர் எழுத்து கூடுதலாய் வரும்போது, உயிர் கழிய வருவதும்;

5. சாரியை இருந்தால், சாரியை கழிவதும்;

6. சாரியை இருந்தால், சாரியையுடன் தன்வடிவமுடன் நிற்றலும்;

7. சாரியையின் இயல்புப் புணர்ச்சி, திரிந்திட வருவதும்;

8. உயர்திணைப் பெயரை அடுத்து மறையாமல் வருவதும்;

9. அஃறிணைப் பெயர் உயர்திணைப் பெயராக வரும்போது,

*உயர்திணைக்கு ஏற்றவாறு நிற்றலும்;*

*10. ஒரு மெய் எழுத்து, வேறு ஒரு மெய் எழுத்தாய்த் திரியும் இடத்தில், இயல்பாய் புணர்தலும்;*

*11. அத்தகைய பிறவற்றையும், அடுத்து வந்து, வடிவம் கொள்ள எழுந்து, பொருண்மையின் எல்லையை உருவாக்கி ஒலிக்கும், எனச் சொல்லுவர். அறிஞர்.*

***எடுத்துக்காட்டு:***

*1. ஆலங்குறைத்தான் –> ஆலைக் குறைத்தான்.*

*2. செப்புக்கொணர்ந்தான் –> செம்பைக் கொணர்ந்தான்.*

*3. தாய் + கொலை = தாய்கொலை –> தாயைக்கொலை.*

*4. கழூஉக்கொன்றான் –> கழுவைக் கொன்றான்.*

*5. வண்டு + இன் + ஐ + கொணர்ந்தான் –> வண்டைக் கொணர்ந்தான்.*

*6. வண்டு + இன் + ஐ + கொணர்ந்தான் –> வண்டினைக் கொணர்ந்தான்.*

*7. அவன் + ஏ = அவனே –> அவன் + ஐ + ஏ = அவனையே.*

*8. அவள் + ஐ + பெற்றான். –> அவளைப் பெற்றான்.*

*9. கறுப்பன் (மாடு) + ஐ + கொணர்ந்தான் –> கறுப்பனைக் கொணர்ந்தான்.*

*10. தன் + கொண்டான் = தற்கொண்டான் –> தனைக்கொண்டான்.*

## *இகர ஐகார ஈற்று அல்வழி முடிபு*

***159. வேற்றுமை யல்வழி இ ஐ யென்னும்***
***ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைஇய***
***அவைதாம்***
***இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்***
***உறழா குநவும் என்மனார் புலவர்.***

***பொருள்:*** *வேற்றுமை உருபு இல்லாமல், ''இ'' மற்றும் ''ஐ'' யை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், மூன்று வகையில் புணரும் இயல்புடையது. அவை, இயல்பு, வல்லின ஒற்று எழுத்து மிகுதல்,*

பிறிதாதல், என்று கூறுவர், அறிஞர்கள்.

**விளக்கம்:** "இ" மற்றும் "ஐ" யை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், "ஐ, ஒடு, கு, இன், அது, கண்" ஆகிய வேற்றுமை உருபுகளுடன் வராதப்போது, மூன்று வகையில் பிற சொற்களுடன் புணரும் இயல்புடையது. அவை, இயல்பு, வல்லின ஒற்று எழுத்து மிகுதல், ஒரு எழுத்து வேறொன்றாய்த் திரிதல், என்று கூறுவர், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:** ஆடி + பட்டம் = ஆடி பட்டம் (இயல்பு), ஆடிப்பட்டம் (வல்லின ஒற்று எழுத்து மிகுதல்). ஆடி + ஆட்டம் = ஆடியாட்டம் (பிறிதாதல்).

சித்திரை + பௌர்ணமி = சித்திரை பௌர்ணமி (இயல்பு), சித்திரைப் பௌர்ணமி (வல்லின ஒற்று எழுத்து மிகுதல்), சித்திரா பௌர்ணமி (பிறிதாதல்).

## இகர ஐகார ஈற்று ஏழாம் வேற்றுமை முடிபு

**160. சுட்டுமுத லாகிய இகர இறுதியும்**
**எகரமுதல் வினாவின் இகர இறுதியும்**
**சுட்டுச்சினை நீடிய ஐயென் இறுதியும்**
**யாவென் வினாவின் ஐயென் இறுதியும்**
**வல்லெழுத்து மிகுநவும் உறழாகுநவும்**
**சொல்லிய மருங்கின் உளவென மொழிப.**

**பொருள்:** சுட்டு எழுத்தை முதலாகவும், இகரத்தை இறுதியாகவும் கொண்ட சொல்லும்; எகர எழுத்தை முதலாகவும், இகரத்தை இறுதியாகவும் கொண்ட வினாச் சொல்லும்; இடையெழுத்து சேர்ந்து நீண்டு ஒலித்தும், ஐகாரத்தை இறுதியிலும் கொண்ட சுட்டுச்சொல்லும்; யாகரத்தை முதலாகவும், ஐகாரத்தை இறுதி யாகவும் கொண்ட வினாச் சொல்லும், புணர்ச்சியில், வல்லின ஒற்று எழுத்து கூடுதலையும், பிறிதாதலையும், சொல்லின் தன்மையைப் பொறுத்துக் கொண்டு உள்ளன, எனச் சொல்லுவர்.

**விளக்கம்:**

1. அதி, இதி, உதி ஆகியவை சுட்டு எழுத்தை முதலாகவும், இகரத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள்.

2. எதி என்பது எகரத்தை முதலாகவும், இகரத்தை இறுதியாகவும் கொண்ட வினாச்சொல்.

*3. அங்கு, இங்கு, உங்கு ஆகிய சொற்களுடன், அ, இ, உ எனும் இடை எழுத்துகள் சேர்ந்து, ஐகாரத்தை இறுதியாக கொண்ட சொற்கள், ஆங்கை, ஈங்கை, ஊங்கை.*

*4. யாகரத்தை முதலாகவும், ஐகாரத்தை இறுதியாகவும் கொண்ட வினாச் சொல், யாவை.*

*இவை, வல்லின ஒற்று எழுத்து கூடுதலையும், பிறிதாதலையும், சொல்லின் தன்மையைப் பொறுத்து கொண்டு உள்ளன*

*எடுத்துக்காட்டு:*

*1. அதி + கண்டான் = அதிக்கண்டான். அதக்கண்டான்.*

*இதி + சேர்ந்தான் = இதிச்சேர்ந்தான். இதச்சேர்ந்தான்.*

*உதி + தொட்டான் = உதித்தொட்டான். உதத்தொட்டான்.*

*2. எதி + பார்த்தான் = எதிப்பார்த்தான்? எதப்பார்த்தான்?*

*3. ஆங்கை + கண்டான் = ஆங்கைக்கண்டான். ஆங்கக்கண்டான்.*

*ஈங்கை + சேர்ந்தான் = ஈங்கைச்சேர்ந்தான். ஈங்கச்சேர்ந்தான்.*

*ஊங்கை + தொட்டான் = ஊங்கைத்தொட்டான். ஊங்கத் தொட்டான்.*

*4. யாவை + பார்த்தான் = யாவைப் பார்த்தான்? யாவப் பார்த்தான்.*

### நெடில் முன் ஒற்று கெடுதலும்
### குறில் முன் ஒற்று இரட்டுதலும்

***161.*** **நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்**
**குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்**
**அறியத் தோன்றிய நெறியிய லென்ப.**

***பொருள்:*** *நெட்டெழுத்தை அடுத்து வரும் ஒற்று மெய்யெழுத்து கழிதல் என்பதும், குற்றெழுத்தை அடுத்து வரும் மெய்யெழுத்து, தன்வடிவத்தை இரட்டித்தல் என்பதும், சொல்லுகின்ற தன்மையை அறிந்துணர்ந்து உருவாக்கிய, விதிஇயல்பு என்பர்.*

***எடுத்துக்காட்டு:*** *கோல் + தீது = கோறீது. ''ல்'' எனும் ஒற்று மெய்யெழுத்து கழிகின்றது.*

*மண் + அகம் = மண்ணகம். ''ண்'' எனும் மெய்யெழுத்து தன்வடிவத்தை இரட்டிக்கின்றது.*

### குறியதன் முன்னர் ஒற்று இரட்டாமை

***162.*** ***ஆறன் உருபினும் நான்கன் உருபினும்***
***கூறிய குற்றொற் றிரட்ட லில்லை***
***ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்***
***நெடுமுதல் குறுகு மொழிமுன் னான.***

***பொருள்:*** சொல்லை அடுத்து, ஆறாவது வேற்றுமை உருபு வரும்போதும், நான்காவது வேற்றுமை உருபு வரும்போதும், மேற்கூறியவாறு, குற்றெழுத்தை அடுத்து வரும், மெய்யெழுத்து தன்வடிவத்தை இரட்டிக்காது. சொல்லின் இறுதியில் வரும் ஒற்றெழுத்து, அகரமாய் மாறி நிற்கும், சொல்லின் முதலான நெட்டெழுத்து குறுகும்.

***விளக்கம்:*** ''அது'' எனும் ஆறாம் வேற்றுமை உருபும், ''கு'' எனும் நான்காம் வேற்றுமை உருபும், தன், தாம் எனும் சொற்களை அடுத்து வரும்போது, மேலே கூறியப்படி, குற்றெழுத்தை அடுத்து வரும் மெய்யெழுத்து, தன்வடிவத்தை இரட்டிக்காது.

ஆறாவது வேற்றுமை உருபான, ''அது'', நான்காம் வேற்றுமை உருபான, ''கு'', தன், தாம் எனும் சொற்களை அடுத்து வரும்போது, சொல்லின் இறுதியில் வரும் ஒற்றெழுத்து, அகரமாய் மாறி நிற்கும், சொல்லின் முதலான நெட்டெழுத்து குறுகும்.

***எடுத்துக்காட்டு:***

தன் + அது = தனது. ''தன்னது'' என வராது. தன் + கு = தனக்கு. ''தன்னக்கு'' என வராது. ''ன்'' எனும் ஒற்றெழுத்து, ''ன'' என அகரமாய் மாறி நிற்கிறது.

தாம் + அது = தமது. தாம் + கு = தமக்கு. ''ம்'' எனும் ஒற்றெழுத்து, ''ம'' என அகரமாய் மாறி நிற்கிறது. சொல்லின் முதலான நெட்டெழுத்து, ''தா'', ''த'' என குறுகி உள்ளது.

### ''நும்'' இறுதி அற்று பெறுதல்

***163.*** ***நும்மென் இறுதியும் அந்நிலை திரியாது.***

***பொருள்:*** ''நும்'' எனும் சொல்லை அடுத்து, ''அது'' எனும் ஆறாம் வேற்றுமை உருபும், ''கு'' எனும் நான்காம் வேற்றுமை

உருபும் வரும்போது, மேற்கூறிய அதே நிலைதான், மாற்றம் இல்லை. அதாவது, குற்றெழுத்தை அடுத்து வரும், மெய்யெழுத்து தன்வடிவத்தை இரட்டிக்காது. சொல்லின் இறுதியில் வரும் ஒற்றெழுத்து, அகரமாய் மாறி நிற்கும்.

**எடுத்துக்காட்டு:** நும் + அது = நுமது. ‘‘நும்மது’’ என வராது. நும் + கு = நுமக்கு. ‘‘நும்மக்கு’’ என வராது. ‘‘ம்‘‘ என, சொல்லின் இறுதியில் வரும் ஒற்றெழுத்து, ‘‘ம’’ என அகரமாய் மாறி நிற்கிறது.

### இயல்பாக நிற்கும் புள்ளி யிறுதிகள்

**164. உகரமொடு புணரும் புள்ளி யிறுதி**
**யகரமும் உயிரும் வருவழி இயற்கை.**

**பொருள்:** உகரத்துடன் புணரும், ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல், யகரத்தையும், உயிர் எழுத்தையும் முதலாய்க் கொண்ட வருமொழியுடன், திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:** கண் + உ = கணு. கண் யாசகம். கண் + அசைவு = கண்ணசைவு,.., கண் + ஓட்டம் = கண்ணோட்டம்.

### அளவு நிறை எண்ணுப் பெயர்கள் புணர்தல்

**165. உயிரும் புள்ளியும் இறுதி யாகி**
**அளவும் நிறையும் எண்ணுஞ் சுட்டி**
**உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்**
**தத்தங் கிளவி தம்மகப் பட்ட**
**முத்தை வரூஉங் காலந் தோன்றின்**
**ஒத்த தென்ப ஏயென் சாரியை.**

உளவெனப்பட்ட = சமுதாயத்தில் நிலவும்.
முத்து = பகுதி
வரூஉங்காலம் = வருமொழி.

**பொருள்:** உயிர் எழுத்தையும், தனிமெய் அல்லது ஒற்றெழுத்தையும் இறுதியாகக் கொண்டு, சமுதாயத்தில் நிலவும், அளவு, நிறை, எண் ஆகியவற்றைக் குறிக்கும் எல்லாச் சொற்களுக்கும், தம் அளவின்பகுதியைக் குறிக்கும் சொல், வருமொழியாய் வந்தால், ‘‘ஏ’’ எனும் சாரியை, அவ்விரண்டு அளவுகளும் ஒத்தத் தன்மையுடையன, என்பதைக் குறிக்கும்.

*எடுத்துக்காட்டு:* உழக்கு + ஏ + ஆழாக்கு = உழக்கேயாழாக்கு. மரக்கால் + ஏ + படி = மரக்காலேபடி. தொடி + ஏ + கஃசு = தொடியே கஃசு. வீசை + ஏ + பலம் = வீசையே பலம். கால் + ஏ + காணி = காலேகாணி. காணி + ஏ + குழி = காணியேகுழி.

''உழக்கேதொடி'' போன்று தன் இனமில்லாத அளவுச் சொற்கள் புணராது.

### அரை ஏகாரச் சாரியை பெறாமை

**166. அரையென வரூஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவ தன்றால் சாரியை யியற்கை.**

**பொருள்:** குறிப்பிட்ட அளவு வகையைக் குறிக்கும் சொல்லை அடுத்து, ''அரை'' என வந்தால், ''ஏ'' எனும் சாரியை, இயல்பாய், புணராது.

*எடுத்துக்காட்டு:* ''உழக்கரை'' என வரும். உழக்குக்கு அகப்பட்ட அல்லது உள்பட்ட அளவே, அதன் அரை என்றாலும், உழக்கே அரை என வராது.

### குறை மொழி, வேற்றுமை பெறுதல்

**167. குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை யியற்கை.**

**பொருள்:** அளவுகளைக் குறிக்கும் பல சொற்களை அடுத்து, ''குறை'' எனும் சொல் வரும் சமயத்தில், பொருள், குழப்பமின்றி, தெளிவாகவே தோன்றும். அப்புணர்ச்சிகளால், வெவ்வேறு அளவு களுக்கு ஏற்றவாறு, பொருள் வேறுபடுவது, இயற்கையாகவே நிகழும்.

*எடுத்துக்காட்டு:* மரக்காற்குறை, படிக்குறை,..., காணிக்குறை, குழிக்குறை.

### குற்றியலுகரம் ''இன்'' சாரியை பெறுதல்

**168. குற்றிய லுகரக் கின்னே சாரியை.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, அளவைக் குறிக்கும் சொற்களுக்கு, ''இன்'' எனும் சாரியையே புணரும்.

***விளக்கம்:*** *ஆழாக்கின்குறை, உழக்கின்குறை.*

*ஆழாக்குக்குறை, வழக்கில் இருந்தாலும், அதைச் சொல்வதில் ஏற்படும் கடினம் கருதி, இயல்போட்டம் உள்ள "இன்" சாரியை, விதியாய்ப் பரிந்துரைக்கப் படுகின்றது.*

### கலம் அத்து சாரியை பெறுதல்

***169. அத்திடை வரூஉங் கலமென் அளவே.***

***பொருள்:*** *"கலம்" எனும் அளவுச்சொல், "குறை" எனும் சொல்லுடன் புணரும்போது, "அத்து" எனும் சாரியை, இடைச்சொல்லாய் வரும்.*

***விளக்கம்:*** *கலம் + அத்து + குறை = கலத்துக்குறை என வரும்.*

*"கலக்குறை" என்பது "கலக்குவதில் குறை", "கலக்கும் உறை" எனப் பொருள் மயக்கம் தரும் போலும். பொருள் தெளிவு, உறுதி கருதி, "அத்து" எனும் சாரியை, இடைச்சொல்லாய் வருகின்றது எனலாம்.*

### பனை, கா இன் சாரியை பெறுதல்

***170. பனையென் அளவுங் காவென் நிறையும்***
***நினையுங் காலை இன்னொடு சிவணும்.***

***பொருள்:*** *"பனை" எனும் அளவுப் பெயரும், "கா" எனும் நிறைப் பெயரும், "குறை" எனும் சொல்லுடன் புணர்வதை, ஆராய்ந்து பார்க்கையில், "இன்" எனும் சாரியையுடன் பொருந்தும்.*

***எடுத்துக்காட்டு:*** *பனை + இன் + குறை = பனையின் குறை. கா + இன் + குறை = காவின் குறை என வரும்.*

### அளவுப் பெயர்க்கும் நிறைப் பெயர்க்கும் முதலெழுத்துகள்

***171. அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுத லாகி***
***உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே***
***அவைதாம்***
***கசதப என்றா நமவ என்றா***
***அகர உகரமோ டவையென மொழிப.***

***பொருள்:*** வழக்கில் பெரும்பாலும் இருக்கும், அளவுப் பெயர்க்கும், நிறைப் பெயர்க்கும், சொல்லின் முதலாக வரும் எழுத்துகள், ஒன்பதே. அவை, "க, ச, த, ப, ந, ம, வ, அ, உ" எனச் சொல்லுவர், அறிஞர்.

***எடுத்துக்காட்டு:*** கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும், கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை.

### *புறனடை*

***172. ஈறியல் மருங்கின் இவைஇவற் றியல்பெனக்***
***கூறிய கிளவிப் பல்லா றெல்லாம்***
***மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி***
***ஒத்தவை உரிய புணர்மொழி நிலையே.***

***பொருள்:*** உயிரெழுத்தையும், தனிமெய் அல்லது ஒற்றெ ழுத்தையும் இறுதியாய்க் கொண்ட சொற்கள் இந்த எழுத்துகளுடன், இந்த வேற்றுமை உருபுகளுடன், இந்தச் சாரியைகளுடன் இந்த வழிகளில் புணரும் என்பதை எல்லாம், ஆராய்ந்து உருவாக்கிய வழக்குடன் பொருத்தி, பொருந்தி வருவதை, புணரும் சொற்களுக்கு உடையதாக்க வேண்டும்.

### *யாவர், யாது மரூஉ முடிபு*

***173. பலரறி சொன்முன் யாவ ரென்னும்***
***பெயரிடை வகரங் கெடுதலும் ஏனை***
***ஒன்றறி சொன்முன் யாதென் வினாவிடை***
***ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்***
***மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே.***

***பொருள்:*** பலரும் கேட்கின்ற சொல்லை அடுத்து "யாவர்" எனும் பெயர்ச்சொல் வரும்போது, அதன் இடையில் உள்ள வகரம் கழிதலும், மற்ற ஒன்றைக் கேட்கும் சொல்முன், "யாது" எனும் வினாவின் இடையில், வகரம் கூடுதலும் ஆகிய இரண்டும், புணர்ச்சியின் (பேச்சு வழக்கின்) இடத்தில், அவற்றிற்கான விதி இல்லாமல் போனாலும், பழக்கத்தால் திரியும்.

***எடுத்துக்காட்டு:***

*அங்கே யாவர் –> அங்கே யாவர் = அங்கே யார்.*

*பலரும் கேட்கின்ற சொல், ‘அங்கே’.*

*வேறு + யாது –> வேறு + யா + வ + து = வேறு + யாவது = வேறு யாவது.*

*மற்ற ஒன்றைக் கேட்கும் சொல், ‘வேறு’.*

*‘வேறு என்ன?’, ‘வேறு ஏதாவது?’, ‘வேறெதாவது?’ என்பன இன்றைய வழக்காகி விட்டன.*

*வழக்கின் வலிமையைக் கொண்டு, பொருண்மையின் தெளிவையும் உறுதியையும் கொண்டு, புணர்ச்சியின் எளிமையை, இயல்போட்டத்தைக் கண்டு, அதற்கான விதியை உருவாக்கிக் கொள்ளலாம்.*

# 6. உருபியல்

உருபியல் = உருபு + இயல். உருபின் இயல்பு. உருபைப் பற்றிய ஆய்வு.

உருபு = உரு + ப் + உ = உரு / வடிவம் கொண்டு வெளிப்படுதல்.

எல்லாப் பெயர்களுடனும், உருபுகள் நேரடியாகச் சேர முடிவ தில்லை. காரணம், சில பெயர்களுடன் உருபுகள் நேரடியாகச் சேர்ந்தால், விளைவாகும் சொல்தொடர், தொடர்பற்ற வேறு ஒரு பொருண்மையைத் தந்துவிடுகின்றது. எனவே, இடையில், சாரி யைகள் தேவைப்படுகின்றன. சாரியைகளால், சில பெயர்களுடன் சேர்ந்த உருபுகளின் பொருண்மை திரியாமல் நிற்கின்றன.

உருபுகளுக்கும், சாரியைகளுக்கும் பகுதிப்பொருண்மை உண்டு போலும்.

ஐ = அ + இ. உயிர்ப்புடன் இருக்கின்ற.
ஒடு = உடன்.
கு = அதற்கு / அவனுக்கு.
இன் = அதனுடைய / அவனுடைய பிரியாத பண்பு / பொருள்
அது = அதனது / அவனது பிரியக்கூடிய பண்பு / பொருள்.
கண் = இடம்.
அக்கு, இக்கு, உக்கு = அதற்கு / அவனுக்கு.
அன், இன் = இன் = அதனுடைய / அவனுடைய பிரியாத பண்பு / பொருள்.
வற்று = பலவின் உடைய.
அற்று = பலவின் உடைய.
அத்து = அதன் உடைய.
அம் = பலருடைய பிரியாத பண்பு / பொருள்.
ஒன் = அரசனின், கடவுளின் பிரியாத பண்பு / பொருள். ஒன்று.
ஆன் = ஆகிய.

***அ, ஆ முதலிய ஈறுகள் உருபினொடு புணர்தல்***

***174. அஆ உஊ ஏஔ என்னும்***
***அப்பாலாறன் நிலைமொழி முன்னர்***
***வேற்றுமை உருபிற் கின்னே சாரியை.***

***பொருள்:*** *அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ என்னும் ஆறு வெவ்வேறு எழுத்துகளுடன் முடியும் நிலைமொழிகளை அடுத்து, வேற்றுமை உருபுகள் வருகையில், ''இன்'' எனும் சாரியையே, அந்நிலை மொழிக்கும் உருபுக்கும் இடையில் வரும்.*

***விளக்கம்:*** *அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ என்னும் ஆறு வெவ்வேறு எழுத்துகளுடன் முடியும் நிலைமொழிகளை அடுத்து, '' ஐ, ஒடு, கு, இன், அது, கண்'' ஆகிய வேற்றுமை உருபுகள் நேரடியாக வந்து இணையாது. அவற்றிற்கு இடையில், சாரியை வரவேண்டும். ''இன்'' னே, அச்சாரியை.*

*''இன்'' எனும் சாரியை இல்லாமல், இந்நிலைமொழிகள் வேற்றுமை உருபுகளுடன் இணைந்தால், பொருண்மை வராது, வேறு பொருண்மை வந்து, குழப்பம் நேரும்.*

***எடுத்துக்காட்டு:***

*விள + இன் + ஐ = விளவினை, விள + இன் + ஒடு = விளவினொடு, விள + இன் + கு = விளவிற்கு, விள + இன் + அது = விளவினது, விள + இன் + கண் = விளவின்கண். ( ''இன்'' எனும் சாரியை இன்றி, விள + ஐ = விளய் என சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது)*

*நிலா + இன் + ஐ = நிலாவினை, நிலா + இன் + ஒடு = நிலாவினொடு, நிலா + இன் + கு = நிலாவிற்கு, நிலா + இன் + அது = நிலாவினது, நிலா + இன் + கண் = நிலாவின்கண். ( ''இன்'' எனும் சாரியை இன்றி, நிலா + ஐ = நிலாய் எனச் சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது)*

*காடு + இன் + ஐ = காட்டினை, காடு + இன் + ஒடு = காட்டினொடு, காடு + இன் + கு = காட்டிற்கு, காடு + இன் + அது = காட்டினது, காடு + இன் + கண் = காட்டின்கண். ( ''இன்'' எனும் சாரியை இன்றி, காடு + ஐ = காடை எனச் சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது. வேறு பொருள், பெயரே கூட வந்து விடலாம்)*

*பூ + இன் + ஐ = பூவினை, பூ + இன் + ஒடு = பூவினொடு, பூ + இன் + கு = பூவிற்கு, பூ + இன் + அது = பூவினது, பூ + இன் + கண் = பூவின்கண். ( ''இன்'' எனும் சாரியை இன்றி, பூ + ஐ = பூய், பூவை எனச் சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது)*

*தே + இன் + ஐ = தேவினை, தே + இன் + ஒடு = தேவினொடு, தே + இன் + கு = தேவிற்கு, தே + இன் + அது = தேவினது, தே + இன் + கண் = தேவின்கண். ( தே = த் + ஏ. தேகத்தில் மிக உயர்ந்தவன். தலைவன். தே + அன் = தேவன். ''இன்'' எனும் சாரியை இன்றி, தே + ஐ = தேய், தேவை எனச் சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது. பொருள் குழப்பம் வரும்)*

*வெள + இன் + ஐ = வெளவினை, வெள + இன் + ஒடு = வெளவினொடு, வெள + இன் + கு = வெளவிற்கு, வெள + இன் + அது = வெளவினது, வெள + இன் + கண் = வெளவின்கண். (''இன்'' எனும் சாரியை இன்றி, வெள + ஐ = வெளய் எனச் சேர்ந்தால், எதிர்பார்க்கும் பொருள் வராது)*

### *அகர ஈற்றுப் பெயர்கள் வற்றொடு பொருந்துதல்*

***175. பல்லவை நுதலிய அகர இறுபெயர்***
***வற்றொடு சிவணல் எச்ச மின்றே.***

***பொருள்:*** *இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்டவைகளைக் குறிக்கும், அகரத்தை இறுதியாகக் கொண்ட பெயர், தவறாமல், ''வற்று''டன் பொருந்தும்.*

***எடுத்துக்காட்டு:*** *பல + வற்று + ஐ = பலவற்றை. சில + வற்று + ஐ = சிலவற்றை.*

*சில + வற்று + ஒடு = சிலவற்றொடு.*
*பல + வற்று + கு = பலவற்றுக்கு.*
*சில + வற்று + இன் = சிலவற்றின்.*
*பல + வற்று + அது = பலவற்றது.*
*சில + வற்று + கண் = சிலவற்றுக்கண்.*

### *யா என் வினாவும் அற்றாதல்*

***176. யாவென் வினாவும் ஆயியல் திரியாது.***

***பொருள்:*** ''யா'' என்கின்ற வினாவும் மேற்கூறிய இயல்பிலிருந்து திரியாமல், தவறாமல், ''வற்று''டன் பொருந்தும்.

***எடுத்துக்காட்டு:*** *யா + வற்று + ஐ. யாவற்றை.*
*யா + வற்று + ஒடு = யாவற்றொடு.*
*யா + வற்று + கு = யாவற்றுக்கு.*
*யா + வற்று + இன் = யாவற்றின்.*
*யா + வற்று + ஒடு = யாவற்றொடு.*
*யா + வற்று + கண் = யாவற்றுக்கண்.*

### சுட்டுமுதல் உகரம் உருபொடு புணர்தல்

***177. சுட்டுமுத லுகரம் அன்னொடு சிவணி***
***ஒட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே.***

*ஒழித்து = விட்டு விட்டு.*

***பொருள்:*** சுட்டு எழுத்தை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும் கொண்ட சொல், ''அன்'' ஒடு பொருந்த, தான் சேர்ந்த மெய்யை விட்டு விட்டு, உகரம் கழியும்.

***விளக்கம்:*** சுட்டு எழுத்துகள் அ, இ, உ. சுட்டு எழுத்தை முதல் எழுத்தாகவும், இறுதி எழுத்தை உகரமாகவும் கொண்ட சொற்கள், 'அது, இது, உது'. இவற்றுடன் ''அன்'' பொருந்த, உகரம், தான் சேர்ந்த மெய்யான தகரத்தை விட்டு விட்டு, அழிந்து விடும்.

***எடுத்துக்காட்டு:***

*அது + அன் = அத் + உ + அன் = அதன்.*
*இது + அன் = இத் + உ + அன் = இதன்.*
*உது + அன் = உத் + உ+ அன் = உதன்.*

### சுட்டுமுதல் ஐகாரம் வற்றுப் பெறுதல்

***178. சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி***
***வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே.***

***பொருள்:*** சுட்டு எழுத்தை முதலாகவும், ஐகாரத்தை இறுதியாகவும் கொண்ட சொல், ''வற்று'' ஒடு பொருந்த, தான் சேர்ந்த மெய்யை விட்டு விட்டு, ஐகாரம் கழியும் அல்லது தொடர்ந்து இருக்கவும் செய்யும்.

**விளக்கம்:** *சுட்டு எழுத்தை முதலாகவும், ஐகாரத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், ‘அவை, இவை, உவை’. இவற்றுடன், “வற்று” பொருந்த, ஐகாரம், தான் சேர்ந்த மெய்யான வகரத்தை விட்டு விட்டு அழிந்து விடும் அல்லது தொடர்ந்து இருக்கவும் செய்யும்.*

**எடுத்துக்காட்டு:**

*அவை + வற்று + ஒடு –> அவ் + ஐ + வற்று + ஒடு = அவற்றொடு. (ஐகாரம் கழிதல்)*
*அவை + வற்று + ஐ = அவையற்றை. (ஐகாரம் நிலைத்தல்)*
*இவை + வற்று + இன் –> இவ் + ஐ + வற்று + இன் = இவற்றின். (ஐகாரம் கழிதல்)*
*இவை + வற்று + கு = இவையற்றுக்கு. (ஐகாரம் நிலைத்தல்)*
*உவை + வற்று + கண் –> உவ் + ஐ + வற்று + கண் = உவற்றுக்கண். (ஐகாரம் கழிதல்)*
*உவை + வற்று + அது = உவையற்றது. (ஐகாரம் நிலைத்தல்)*

### *யா வினாவின் ஐகார இறுதியும் வற்றுப் பெறுதல்*

***179. யாவென் வினாவின் ஐயென் இறுதியும்***
***ஆயியல் திரியா தென்மனார் புலவர்***
***ஆவயின் வகரம் ஐயொடுங் கெடுமே.***

**பொருள்:** *யாவை எனும் வினாவின் ஐகாரமும், மேற்கூறிய இயல்பிலிருந்து மாறுவதில்லை என்னும் கருத்துடையவர்கள், புலவர்கள். அந்த இடத்தில், வகாரமும் ஐகாரத்துடன் கழியும்.*

**விளக்கம்:** *யாவை எனும் வினாவின் வகரமும், “வற்று” வந்து பொருந்த, ஐகாரத்துடன் கழியும்.*

**எடுத்துக்காட்டு:**

*யாவை + வற்று + ஐ –> யாவை + வற்று + ஐ = யாவற்றை.*
*யாவை + வற்று + ஒடு –> யாவை + வற்று + ஒடு = யாவற்றொடு.*
*யாவை + வற்று + கு –> யாவை + வற்று + கு = யாவற்றுக்கு.*
*யாவை + வற்று + இன் –> யாவை + வற்று + இன் = யாவற்றின்.*
*யாவை + வற்று + அது –> யாவை + வற்று + அது = யாவற்றது.*
*யாவை + வற்று + கண் –> யாவை + வற்று + கண் = யாவற்றுக்கண்.*

### *நீ நெடு முதல் குறுகுதல்*

***180. நீயென் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்***
***ஆவயின் னகரம் ஒற்றா கும்மே.***

***பொருள்:*** *நீ என்னும் ஒருவரைக் குறிக்கும் பெயரின் நெடுந் தன்மை, முதலில் குறுகும், "இன்" எனும் சாரியை வந்து சேர்ந்தால். அவ்விடத்தில், "இன்", 'ன்' எனும் ஒற்றெழுத்தாய் ஆகும்.*

***எடுத்துக்காட்டு:***

*நீ + இன் + ஐ –> நீநி + இன் + ஐ = நின்னை.*
*நீ + இன் + ஒடு –> நீநி + இன் + ஒடு = நின்னொடு.*
*நீ + இன் + கு –> நீநி + இன் + கு = நினக்கு.*
*நீ + இன் + இன் –> நீநி + இன் + இன் = நின்னின்.*
*நீ + இன் + அது –> நீநி + இன் + அது = நின்னது.*
*நீ + இன் + கண் –> நீநி + இன் + கண் = நின்கண்.*

### *ஓகார இறுதி ஒன் சாரியை பெறுதல்*

***181. ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை.***

***பொருள்:*** *ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லுக்கு, "ஒன்"னே சாரியையாய் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*கோ + ஒன் + ஐ. கோஒனை.*
*கோ + ஒன் + ஒடு = கோஒன்னொடு.*
*கோ + ஒன் + கு = கோஒற்கு.*
*கோ + ஒன் + இன் = கோஒன்னின்.*
*கோ + ஒன் + அது = கோஒன்னது.*
*கோ + ஒன் + கண் = கோஒன்கண்.*

*கோ எனும் சொல், அரசனை அல்லது கடவுளைக் குறிக்கும். அரசனும் ஒருவன், கடவுளும் ஒருவன். "ஒன்" எனும் அசையும் ஒன்றைக் குறிக்கும்.*

### *அ ஆ ஈற்று மரப்பெயர் ஏழனுருபொடு புணர்தல்*

***182. அஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு***
***அத்தொடுஞ் சிவணும் ஏழன் உருபே.***

**பொருள்:** ''அ'', ''ஆ'' என்று முடியும் மரப்பெயர்ச் சொல், அத்து எனும் சாரியையுடனும் சேர்ந்து, பின், ஏழன் உருபான ''கண்'' ணுடன் பொருந்தும்.

**விளக்கம்:** ''அ'', ''ஆ'' என்று முடியும் சொற்கள், ''இன்'' எனும் சாரியையுடன் பொருந்தும் என ஏற்கனவே, 174வது நூற்பாவில் கண்டோம். அது தவிர, ''அ'', ''ஆ'' என்று முடியும் மரப்பெயர்ச் சொற்கள், ''அத்து'' எனும் சாரியையுடனும் சேர்ந்து, ஏழன் உருபான ''கண்'' ணுடன் பொருந்தும்.

**எடுத்துக்காட்டு:**

*விள + அத்து + கண் = விளத்துக்கண்.*
*பலா + அத்து + கண் = பலாத்துக்கண்.*

**ஞகர நகரப் புள்ளியிறுதி இன்சாரியை பெறுதல்**

***183. ஞநஎன் புள்ளிக்கு இன்னே சாரியை.***

**பொருள்:** ஞ், ந் என ஒற்றெழுத்தில் முடியும் சொல்லுக்கு ''இன்'' னே சாரியை ஆகும்.

**எடுத்துக்காட்டு:**

*உரிஞ் + இன் + ஐ. உரிஞினை.*
*உரிஞ் + இன் + ஒடு = உரிஞினொடு.*
*உரிஞ் + இன் + கு = உரிஞிற்கு.*
*உரிஞ் + இன் + அது = உரிஞினது.*
*உரிஞ் + இன் + கண் = உரிஞின்கண்.*
*பொருந் + இன் + ஐ = பொருநினை.*
*பொருந் + இன் + ஒடு = பொருநினொடு.*
*பொருந் + இன் + கு = பொருநிற்கு.*
*பொருந் + இன் + அது = பொருநினது.*
*பொருந் + இன் + கண் = பொருநின்கண்.*

**சுட்டுமுதல் வகர ஈறு மூன்றும் வற்றுப் பெறுதல்**

***184. சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்***
***கெட்ட இறுதி யியல்திரி பின்றே.***

**பொருள்:** சுட்டு எழுத்தை முதலாகவும், வகரத்தை இறுதியாகவும்

கொண்ட சொல், "வற்று"டன் சேரும்போது, (நூற்பா 179–ல்) வினா எழுத்தை முதலாகவும் ஐகாரத்தை இறுதியாகவும் கொண்ட சொல்லின், ஐகாரமும், அது சேர்ந்த மெய்யும் கழிந்து, "வற்று"டன் சேர்ந்த இயல்பிலிருந்து, மாறுவதில்லை.

**விளக்கம்:** யாவை + வற்று + ஐ = யாவற்றை. இதில், "யாவை" யில் உள்ள, (வை) "வ்" , "ஐ" ஆகிய இரண்டும் கழிய, "யா" மட்டும் மிஞ்சி, "வற்று" டன் சேரும். பின், "ஐ" போன்ற வேற்றுமை உருபுகளுடன் சேரும்.

இதே போன்று, அவ், இவ், உவ் எனும் சொற்களும், "வற்று"டன் சேரும்போது, "வ்" கழிந்து, "வற்று" டன் சேரும். பின், "ஐ" போன்ற வேற்றுமை உருபுகளுடன் சேரும்.

**எடுத்துக்காட்டு:**

*அவ் + வற்று + ஐ = அவற்றை.*
*அவ் + வற்று + ஒடு = அவற்றொடு.*
*அவ் + வற்று + கு = அவற்றுக்கு.*
*அவ் + வற்று + இன் = அவற்றின்.*
*அவ் + வற்று + அது = அவற்றது.*
*அவ் + வற்று + கண் = அவற்றுக்கண்.*

### ஏனை வகரம் இன் பெறுதல்

***185. ஏனை வகரம் இன் பெறுதல்.***

**பொருள்:** மற்ற, வகரத்தை இறுதியாய்க் கொண்ட சொல், "இன்" எனும் சாரியையுடன் இணைந்து, வேற்றுமை உருபுகளுடன் சேரும்.

**எடுத்துக்காட்டு:**

*தெவ் + இன் + ஐ = தெவ்வினை.*
*தெவ் + இன் + ஒடு = தெவ்வினொடு.*
*தெவ் + இன் + கு = தெவ்விற்கு.*
*தெவ் + இன் + அது = தெவ்வினது.*
*தெவ் + இன் + கண் = தெவ்வின்கண்.*

### மகர இறுதி அத்து சாரியை பெறுதல்

***186. மஃகான் புள்ளி முன்னர் அத்தே சாரியை.***

***பொருள்:*** "ம்" ஐ இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, "அத்து" வே சாரியையாக வரும். பின்பு வேற்றுமை உருபுகளுடன் சேரும்.

***எடுத்துக்காட்டு:***

*அகம் + அத்து + ஐ = அகத்தை.*
*அகம் + அத்து + ஒடு = அகத்தொடு.*
*அகம் + அத்து + கு = அகத்துக்கு.*
*அகம் + அத்து + இன் = அகத்தின்.*
*அகம் + அத்து + அது = அகத்தது.*
*அகம் + அத்து + கண் = அகத்துக்கண்.*
*(நூற்பா – 134 ஐ நினைவு கூர்க.)*

***மகரவீற்றுச் சில பெயர் "இன்" சாரியை பெற்று முடிதல்***

***187. இன்னிடை வரூஉம் மொழியுமா ருளவே.***

***பொருள்:*** "இன்", இடைச்சொல்லாக, சாரியையாக வருகின்ற, "ம்" ஐ இறுதியாகக் கொண்ட சொற்களும் உள்ளன.

***எடுத்துக்காட்டு:***

*உரும் + இன் + ஐ = உருமினை.*
*உரும் + இன் + ஒடு = உருமினொடு.*
*உரும் + இன் + கு = உருமிற்கு.*
*உரும் + இன் + அது = உருமினது.*
*உரும் + இன் + கண் = உருமின்கண்.*

***நும் ஈறு உருபொடு முடிதல்***

***188. நும்மென் இறுதி இயற்கை யாகும்.***

***பொருள்:*** "நும்" என்பதன் இறுதியான "ம்", சாரியை இன்றி, வேற்றுமை உருபுகளுடன் சேரும்.

***எடுத்துக்காட்டு:***

*நும் + ஐ = நும்மை*
*நும் + ஒடு = நும்மொடு.*
*நும் + கு = நுமக்கு.*

*நும் + இன் = நும்மின்.*
*நும் + அது = நுமது. (நும்மது என்றால், பொருள் மாறி விடும்)*
*நும் + கண் = நும்கண் = நுங்கண்.*

***தாம் நாம் யாம் என்னும் மகரவீறுகள்***

***189.** **தாம்நாம் என்னும் மகர இறுதியும்**
**யாமென் இறுதியும் அதனோ ரன்ன**
**ஆஎ ஆகும் யாமென் இறுதி**
**ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்**
**ஏனை யிரண்டும் நெடுமுதல் குறுகும்.***

***பொருள்:*** *'தாம், நாம்' என்பதன் மகர இறுதியும், 'யாம்' என்பதன் மகர இறுதியும், அதைப் போன்றதே.*

*'யாம்' என்பதன் "ஆ", "எ" என மாறும், 'யாம்' என்பதன் இறுதி, "ம்", இறுதியாகும். அந்த இடத்தில், "ய்" கழிய வேண்டும்.*

*மற்றைய இரண்டின், அதாவது, 'தாம், நாம்' இன், நெடிதான தன்மை குறுகும், அதாவது "தா", "த" எனவும், "நா", "ந" எனவும் மாறும்.*

***விளக்கம்:*** *"யாம்", "எம்" என மாறும். "தாம்", "தம்" எனவும், "நாம்", "நம்" எனவும் மாறும். பின், "நும்"மைப் போன்று சாரியை இன்றி, வேற்றுமை உருபுகளுடன் சேரும்.*

***எடுத்துக்காட்டு:***

*யாம் –> எம். எம் + ஐ = எம்மை.*
*யாம் –> எம். எம் + ஒடு = எம்மொடு.*
*யாம் –> எம். எம் + கு = எமக்கு.*
*யாம் –> எம். எம் + இன் = எம்மின்.*
*யாம் –> எம். எம் + அது = எமது. (எம்மது என்றால் பொருள் மாறும்)*
*யாம் –> எம். எம் + கண் = எம்கண் = எங்கண்*
*தாம் –> தம். தம் + ஐ = தம்மை.*
*தாம் –> தம். தம் + ஒடு = தம்மொடு.*
*தாம் –> தம். தம் + கு = தமக்கு.*
*நாம் –> நம். நம் + இன் = நம்மின்.*
*நாம் –> நம். நம் + அது = நமது.*
*நாம் –> நம். நம் + கண் = நம்கண் = நங்கண்.*

**எல்லாம் உருபொடு புணர்தல்**

***190.*** **எல்லா மென்னும் இறுதி முன்னர்**
**வற்றென் சாரியை முற்றத் தோன்றும்**
**உம்மை நிலையும் இறுதி யான.**

*முற்ற = முழுமையாக, தவறாமல்.*

**பொருள்:** *''எல்லாம்'' என்னும் சொல்லின் இறுதியான, ''ம்'' ஐ அடுத்து, ''வற்று'' எனும் சாரியை, தவறாமல், எல்லா வேற்றுமை உருபுடன் சேரும்போதும் தோன்றும். ''உம்'' எனும் சாரியை, இறுதியில் வந்து நிலைக்கும்.*

**எடுத்துக்காட்டு:**

*எல்லாம் + வற்று + ஐ + உம் = எல்லாவற்றையும்.*
*எல்லாம் + வற்று + ஒடு + உம் = எல்லாவற்றொடும்.*
*எல்லாம் + வற்று + கு + உம் = எல்லாவற்றுக்கும்.*
*எல்லாம் + வற்று + இன் + உம் = எல்லாவற்றினும்.*
*எல்லாம் + வற்று + அது + உம் = எல்லாவற்றதும்*
*எல்லாம் + வற்று + கண் + உம் = எல்லாவற்றுக்கண்ணும்.*

**எல்லாம் உயர்திணையில் நம் பெறுதல்**

***191.*** **உயர்திணை யாயின் நம்மிடை வருமே.**

**பொருள்:** *''எல்லாம்'' எனும் பெயர், உயர்திணையாக விரவி வந்தால், ''நம்'' எனும் சாரியை இடையில் வரும். 'ம்' அழியும். ''உம்'' எனும் சாரியை, இறுதியில் வந்து நிலைக்கும்.*

**எடுத்துக்காட்டு:**

*எல்லாம் + நம் + ஐ + உம் = எல்லாநம்மையும்.*
*எல்லாம் + நம் + ஒடு + உம் = எல்லாநம்மொடும்.*
*எல்லாம் + நம் + கு + உம் = எல்லாநமக்கும்.*
*எல்லாம் + நம் + இன் + உம் = எல்லாநம்மினும்.*
*எல்லாம் + நம் + அது + உம் = எல்லாநமதும்.*
*எல்லாம் + நம் + கண் + உம் = எல்லாநம்கண்ணும்.*

**எல்லாரும், எல்லீரும் என்பன உருபொடு புணர்தல்**

***192.*** **எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்**

**எல்லீரு மென்னு முன்னிலை யிறுதியும்**
**ஒற்றும் உகரமுங் கெடுமென மொழிப**
**நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி**
**உம்மை நிலையும் இறுதி யான**
**தம்மிடை வரூஉம் படர்க்கை மேன**
**நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே.**

***பொருள்:*** ''எல்லாரும்'' என்னும் படர்க்கைச் சொல்லின் இறுதி யான, ''ம்'' எனும் ஒற்றும், ''எல்லீரும்'' என்னும் முன்னிலைச் சொல்லின் இறுதியான, ''ம்'' எனும் ஒற்றும், உகரமுடன் கழியும் எனச் சொல்லுவர் அறிஞர்.

''ர்'' என்பது நிற்க வேண்டும். (எல்லாரும் –> எல்லார். எல்லீரும் –> எல்லீர்)

''உம்'' மும் நிலைக்கும், வேற்றுமை உருபு வந்து சேர்ந்த பிறகு.

படர்க்கைச் சொல்லாகிய, ''எல்லார்'' என்பதற்கும், வேற்றுமை உருபிற்கும் இடையில், ''தம்'' எனும் சாரியை வரும்.

முன்னிலைச் சொல்லாகிய, ''எல்லீர்'' என்பதற்கும், வேற்றுமை உருபிற்கும் இடையில், ''நும்'' எனும் சாரியை வரும்.

***எடுத்துக்காட்டு:***

எல்லார் + தம் + ஐ + உம் = எல்லார்தம்மையும்.
எல்லீர் + நும் + ஒடு + உம் = எல்லீர்நும்மொடும்.
எல்லார் + தம் + கு + உம் = எல்லார்தமக்கும்.
எல்லீர் + நும் + இன் + உம் = எல்லீர்நும்மினும்.
எல்லார் + தம் + அது + உம் = எல்லார்தமதும்.
எல்லீர் + நும் + கண் + உம் = எல்லீர்நும்கண்ணும். எல்லீர்நுங்கண்ணும்.

***தான், யான் உருபொடு புணர்தல்***

***193.*** **தான்யான் என்னும் ஆயீ ரிறுதியும்**
**மேன்முப் பெயரொடும் வேறுபா டிலவே.**

***பொருள்:*** ''தான்'', ''யான்'' என்னும் சொற்களின் இறுதி, மேலே கூறிய மூன்று பெயர்களோடு வேறுபட்டு இல்லை.

***விளக்கம்:*** ''தான்'', ''யான்'' என்னும் சொற்களின் இறுதி, மேலே கூறிய மூன்று பெயர்களான, ''தாம்'', ''நாம்'', ''யாம்'' ஆகியவற்றின்

*இறுதி மாறுகின்ற முறையிலிருந்து, வேறுபடவில்லை. (நூற்பா 189)*

*'தான்' இன், நெடிதான தன்மை குறுகும், அதாவது "தா", "த" என மாறும்.*

*'யான்' என்பதன் "ஆ", "எ" என மாறும்.*

***எடுத்துக்காட்டு:***

*தான் –> தன்.*
*தன் + ஐ = தன்னை.*
*தன் + ஒடு = தன்னொடு.*
*தன் + கு = தனக்கு.*
*தன் + இன் = தன்னின்.*
*தன் + அது = தனது.*
*தன் + கண் = தன்கண் –> தங்கண்.*
*யான் –> என்.*
*என் + ஐ = என்னை.*
*என் + ஒடு = என்னொடு.*
*என் + கு = எனக்கு.*
*என் + இன் = என்னின்.*
*என் + அது = எனது.*
*என் + கண் = என்கண் –> எங்கண்.*

### *அழன், புழன் உருபொடு புணர்தல்*

***194. அழனே புழனே ஆயிரு மொழிக்கும்***
***அத்தும் இன்னும் உறழத் தோன்றல்***
***ஒத்த தென்ப உணரு மோரே.***

***பொருள்:*** *"அழன்", "புழன்" ஆகிய இரண்டு சொற்களுக்கும், "அத்து" எனும் சாரியையும், "இன்" எனும் சாரியையும், மாறி மாறி வந்தாலும், அவை வந்த இடத்தில், ஒரே மாதிரியான விளைவையே ஏற்படுத்தும் என்பர், சாரியைகளின் நுண்மையான வேறுபாடுகளை உணர்ந்தோர்.*

***எடுத்துக்காட்டு:***

*அழன் + அத்து + ஐ = அழத்தை.*
*அழன் + இன் + ஐ = அழனினை.*

*புழன் + அத்து + ஐ = புழத்தை.*
*புழன் + இன் + ஐ = புழனினை.*

### *ஏழ் 'அன்' சாரியை பெறுதல்*

**195. *அன்னென் சாரியை ஏழன் இறுதி***
***முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப.***

**பொருள்:** *"அன்" எனும் சாரியை, "ஏழ்" எனும் சொல்லின் இறுதியை அடுத்து தோன்றுவது, இயற்கைத் தன்மையுடையது என்பர், அறிஞர்.*

**எடுத்துக்காட்டு:**

*ஏழ் + அன் + ஐ. ஏழனை.*
*ஏழ் + அன் + ஒடு = ஏழனொடு.*
*ஏழ் + அன் + கு = ஏழற்கு.*
*ஏழ் + அன் + இன் = ஏழனின்.*
*ஏழ் + அன் + அது = ஏழனது.*
*ஏழ் + அன் + கண் = ஏழன்கண்.*

*(சாரியை இன்றி வேற்றுமை உருபுடன் சேர்ந்தால், ஏழ் + ஐ = ஏழை என ஆகிவிடும். பொருள் மயக்கம் வரும்.)*

### *குற்றியலுகரம் இன் சாரியை பெறுதல்*

**196. *குற்றிய லுகரத் திறுதி முன்னர்***
***முற்றத் தோன்றும் இன்னென் சாரியை.***

*முற்ற = முழுவதுமாய். தவறாமல்.*

**பொருள்:** *சொற்களின் குற்றியலுகர இறுதியை அடுத்து, "இன்" எனும் சாரியை, தவறாமல் வரும்.*

**எடுத்துக்காட்டு:**

*ஒடு + இன் + ஐ = ஒட்டினை. ('இன்' எனும் சாரியை இன்றி, ஒடை என வந்து பொருள் மாறி விடும். ஒற்று மிகுதலுக்கான நூற்பா அடுத்து வருகின்றது)*

*வயிறு + இன் + ஒடு = வயிற்றினொடு.*
*தெள்கு + இன் + கு = தெள்கிற்கு.*

*அஃது + இன் + அது = அஃதினது.*
*கொக்கு + இன் + கண் = கொக்கின்கண்.*
*அங்கு + இன் + ஐ = அங்கினை.*

*'அங்கு' வைப் பொறுத்தவரை, 'அன்' எனும் சாரியையும், 'உன்' எனும் சாரியையும், சொல்வழக்கில் வரலாம் என்று தோன்றுகின்றது.*

*அங்கு + அன் + ஐ = அங்கனை.*
*அங்கு + உன் + ஐ = அங்குனை.*

### ட, ற ஒற்று இரட்டுதல்

**197. நெட்டெழுத் திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்**
**அப்பான் மொழிகள் அல்வழி யான.**

**பொருள்:** *குற்றியலுகர சொற்களின் நெட்டெழுத்தை அடுத்து ஒற்று மிகுந்தும், வேற்றுமைப் பொருளைக் குறிக்காமல் இருந்தால், அவ்வகைச்சொற்கள் வேற்றுமை உருபுகளுடன் சேரும்போது, நெட்டெழுத்தை அடுத்து ஒற்று மிகும்.*

**விளக்கம்:** *''ஓடு'', ''ஆறு'' போன்ற குற்றியலுகரச் சொற்கள், வேற்றுமை உருபுகளுடன் சேரும்போது, அக்குற்றியலுகரச் சொற்களின் நெட்டெழுத்துகளை அடுத்து, முறையே ''ட்'', ''ற்'' எனும் ஒற்றெழுத்து கூடுதலாய்த் தோன்றும். அப்படி வந்தும், வேற்றுமைப் பொருள் தோன்றாது.*

**எடுத்துக்காட்டு:**

*ஓடு + ஐ –> ஓட்டு + ஐ = ஓட்டை.*
*ஆறு + ஐ –> ஆற்று + ஐ = ஆற்றை.*

*(இந்த ஒற்று மிகுதல் இல்லாமல் கூடினால், ஓடு + ஐ = ஓடை, ஆறு + ஐ = ஆறை, எனப் பொருள் மாறிவிடும்)*

*''க்'', ''ச்'', ''த்'', ''ப்'' ஆகியவற்றின் குற்றியலுகர இறுதியைக் கொண்ட சொற்களில், ஒற்று கூடினால், வேற்றுமைப் பொருள் வந்துவிடும்.*

*சான்றாக, 'நாகு' எனும் குற்றியலுகர சொல்லுடன், ஒற்று மிகாமல், 'ஐ' எனும் வேற்றுமை உருபு சேர்ந்தால், நாகு + ஐ = நாகை என வரும். ஒற்று கூடினால், 'நாக்கை', 'நாவின் கை' என, வேற்றுமைப் பொருள் வந்துவிடும்.*

***யாண்டு இன் சாரியை பெறாமை***

***198. அவைதாம்***
***இயற்கைய வாகுஞ் செயற்கைய என்ப.***

***பொருள்:*** *மேற்கூறியவற்றைத்தான், இயற்கையாகும் செயற்கை என்பர், அறிஞர்.*

***விளக்கம்:*** *காடு + ஐ = காட்டை. இதில், ஒற்று கூடுதல் எனும் திரிபு செயற்கையாக ஏற்படினும், அது இயல்பானது என்பர், அறிஞர். எனவே, அதைச் சிறப்பு நிகழ்வாக, இயல்பாகும் திரிபு எனக் கூறுவர்.*

***எண்ணுப் பெயர் 'அன்' சாரியை பெறுதல்***

***199. எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்.***

***பொருள்:*** *எண்களின் இறுதி எழுத்து, "அன்" எனும் சாரியையுடன் இணையும்.*

***விளக்கம்:*** *எண்களின் குற்றியலுகர இறுதி, "அன்" எனும் சாரியையுடன் இணையும். பின், வேற்றுமை உருபுடன் சேரும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஒன்று + அன் + ஐ = ஒன்றனை.*
*இரண்டு + அன் + ஐ = இரண்டனை.*

***எண்ணின் இறுதி 'ஆன்' சாரியையும் பெறுதல்***

***200. ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்***
***எல்லா எண்ணுஞ் சொல்லுங் காலை***
***ஆனிடை வரினு மான மில்லை***
***அஃதென் கிளவி ஆவயிற் கெடுமே***
***உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே.***

***பொருள்:*** *ஒன்று முதலாகப் பத்து வரை தொடர்ந்து வரும் எல்லா எண்களையும் (பேச்சுவழி) சொல்லும்போது, "ஆன்" எனும் சாரியை வந்தாலும் தவறில்லை. "பஃது" எனும் எண்ணில், "அஃது" எனும் சொல், அப்போது, கழியும், பகரத் தனிமெய் நிற்கும்.*

*‘அன்’ எனும் சாரியை முன் நூற்பாவில் கூறப்பட்டது. இந்நூற்பாவில், ‘ஆன்’ எனும் சாரியை இணைவது பற்றிக் கூறப்படுகின்றது.*

***எடுத்துக்காட்டு:***

*ஒன்று + ஆன் + ஐ = ஒன்றானை (ஒன்றானதை).*
*ஒன்று + ஆன் + ஒடு = ஒன்றானொடு.*
*ஒன்று + ஆன் + கு =ஒன்றாற்கு.*
*ஒன்று + ஆன் + இன் = ஒன்றானின்.*
*ஒன்று + ஆன் + அது = ஒன்றானது.*
*ஒன்று + ஆன் + கண் = ஒன்றான்கண்.*
*இரண்டு + ஆன் + ஐ = இரண்டானை.*
*மூன்று + ஆன் + ஐ = மூன்றானை.*
*நான்கு + ஆன் + ஐ = நான்கானை.*
*ஐந்து + ஆன் + ஐ = ஐந்தானை.*
*ஆறு + ஆன் + ஐ = ஏழானை.*
*எட்டு + ஆன் + ஐ = எட்டானை.*
*ஒன்பது + ஆன் + ஐ = ஒன்பதானை.*
*பஃது + ஆன் + ஐ = ப் + ~~அஃது~~ + ஆன் + ஐ = பானை. (பத்தானதை).*

*“ப்” என்பது “பத்து” என்பதைக் குறிப்பது போலும்.*

*“ஆனிடை வரினும்“ என்பதால், இந்நூற்பாவும், 199 ம் நூற்பாவைப் போலவே, எண்களின் குற்றியலுகர இறுதி, சாரியையுடன் இணைவதைப் பற்றிக் கூறுவது எனலாம்.*

*எழுத்து வழியில், இச்சொற்கள், குழப்பம் விளவிக்கலாம்.*

*அல்லது*

***பொருள்:*** *ஒன்று முதல் எல்லா எண்களையும் அடுத்து பத்து வருவதைச் சொல்லும்போது, “ஆன்” எனும் சாரியை இடையில் வந்தாலும் தவறில்லை. “அஃது” எனும் சொல், அந்த இடத்தில், கழியும், பகரத் தனிமெய் நிற்கும்.*

***எடுத்துக்காட்டு:*** *ஒரு + ப் + ~~அஃது~~ + ஆன் + ஐ = ஒருபானை.*

*ஒன்று, “ஒரு” எனத் திரிந்தது பேச்சுமொழி என்பதாலா? எனின், அதன் இலக்கணம் இங்கு ஏன் கூறப்படவில்லை?*

***யாது, ஆய்தம் 'அன்' சாரியை பெறுதல்***

***201. யாதென் இறுதியுஞ் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தங் கெடுதல் ஆவயி னான.***

***பொருள்:*** *"யாது" எனும் சொல்லின் இறுதியும், சுட்டு எழுத்தை முதலாகக் கொண்ட ஆய்தத்தின் இறுதியும், "அன்" எனும் சாரியையுடன் இணையும். ஆய்தம் கழியும் அந்த இடத்தில்.*

***விளக்கம்:*** *"யாது" எனும் சொல்லின் இறுதியான குற்றியலு கரமும், அ, இ, உ போன்ற, சுட்டு எழுத்தை முதலாகக் கொண்ட ஆய்தத்தின் இறுதியான (து) குற்றியலுகரமும், அதாவது, 'அஃது', இஃது, உஃது' போன்றவை, "அன்" எனும் சாரியையுடன் இணை யும். அந்த இடத்தில் ஆய்தம் கழியும்.*

***விளக்கம்:***

*யாது + அன் + ஐ = யாதனை.*
*அஃது + அன் + ஐ = அஃது + அன் + ஐ = அதனை.*

***திசைப் பெயரொடு ஏழனுருபு புணர்தல்***

***202. ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி இயற்கையு மாகும்
ஆவயின் இறுதி மெய்யொடுங் கெடுமே.***

***பொருள்:*** *ஏழாவது உருபிற்கு, திசைப்பெயரை அடுத்து, சாரியைச் சொல் வரும். ஏழன் உருபு, சாரியை இல்லாமலும், திசைப்பெயருடன் இணையும். அந்த இடத்தில், இறுதிக் குற்றியலுகரம், மெய்யெழுத்துடன் கழியும்.*

***விளக்கம்:*** *நூற்பா 196 ல், "சொற்களின் குற்றியலுகர இறுதியை அடுத்து, 'இன்' எனும் சாரியை, தவறாமல் வரும்.", என்று ஏற்கனவே கூறி இருப்பதால், மீண்டும் அதைக் கூற வேண்டிய அவசியமில்லை.*

*எனவே, திசைப்பெயர்களான, கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு ஆகியவற்றை அடுத்து, சாரியை சொல்லான, "அன்" வரும் ("அன்னென் கிளவி" – 120), அதன் பிறகு, ஏழாவது வேற்றுமை*

உருபு, ''கண்'' வரும் என்பதே, இந்நூற்பாவின் பொருளாக இருக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

*கிழக்கு + அன் + கண் = கிழக்கன்கண் = கிழக்கங்கண்.*
*மேற்கு + அன் + கண் = மேற்கன்கண் = மேற்கங்கண்.*
*வடக்கு + அன் + கண் = வடக்கன்கண் = வடக்கங்கண்.*
*தெற்கு + அன் + கண் = தெற்கன்கண் = தெற்கங்கண்.*

ஏழன் உருபு, சாரியை இல்லாமலும், இயல்பாகவும் திசைப் பெயருடன் இணையும். அந்த இடத்தில், சொல்லின் இறுதிக் குற்றியலுகரம், மெய்யெழுத்துடன் கழியும்.

**எடுத்துக்காட்டு:**

*கிழக்~~கு~~ + கண் = கிழக்கண்.*
*மேற்~~கு~~ + கண் = மேற்கண்.*
*வடக்~~கு~~ + கண் = வடக்கண்.*
*தெற்~~கு~~ + கண் = தெற்கண்.*

**புறனடை**

***203. புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்***
***சொல்லிய அல்ல ஏனைய வெல்லாம்***
***தேருங் காலை உருபொடு சிவணிச்***
***சாரியை நிலையுங் கடப்பா டிலவே.***

**பொருள்:** இங்கு சொல்லிய சொற்களைத் தவிர, பிற ஒற்று எழுத்தை இறுதியாகக் கொண்ட சொற்களையும், உயிர் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொற்களையும், ஆராய்ந்து பார்க்கையில், அவை, வேற்றுமை உருபுடன் இணைய, சாரியை இடையில் நிற்க வேண்டிய கட்டாயம் இல்லை. சாரியை வரலாம். வராமலும் இருக்கலாம்.

# 7. உயிர்மயங்கியல்

*உயிர்மயங்கியல் = உயிர் + மயங்கு + இயல். உயிரெழுத்துகள் கலக்கும் இயல்பு. நிலைமொழியின் இறுதியில் வரும் உயிர் எழுத்துகள், வருமொழியின் முதல் எழுத்துடன் புணரும் முறைகள்.*

***அகர ஈற்றுப் பெயருடன் வன்கணம் அல்வழியிற் புணர்தல்***

**204. அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை யல்வழிக் கசதபத் தோன்றின்**
**தத்தம் ஒத்த ஒற்றிடை மிகுமே.**

**பொருள்:** *நிலைமொழியாக உள்ள பெயரில், அகரம் இறுதியாக வந்து, அதனை அடுத்து, வேற்றுமைப் பொருளின்றி, ''க'' / ''ச'' / ''த'' / ''ப'' வந்து புணர்ந்தால், அதைப் போன்ற ஒற்றெழுத்து, சொற்களுக்கு இடையில் கூடும்.*

**விளக்கம்:** *நிலைமொழியாக உள்ள பெயரில், அகரம் இறுதியாக வந்து, அதனை அடுத்து, வேற்றுமைப் பொருளின்றி, அல்வழியில் ''க்'' / ''ச்'' / ''த்'' / ''ப்'' எனும் எழுத்தை முதலாகக் கொண்ட சொல், வருமொழியாக வந்தால், அந்த எழுத்தைப் போன்ற ஒற்றெழுத்து, சொற்களுக்கு இடையில் கூடும்.*

**எடுத்துக்காட்டு:**

*கசதப + கடினம் = கசதபக் கடினம், கசதப + செறிவு = கசதபச் செறிவு, கசதப + தோற்றம் = கசதபத் தோற்றம், கசதப + பாடம் = கசதபப் பாடம்.*

*மக = மகன், மகள்.*

*மக + குறிது = மகக்குறிது, மக + சிறிது = மகச்சிறிது, மக + தீது*

= மகத்தீது, மக + பெரிது = மகப்பெரிது.

**அகரவீற்று வினையெச்சமும் இடைச்சொல்லும் வன்கணத்துடன் புணர்தல்**

> ***205.*** **வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்**
> **எனவென் எச்சமும் சுட்டின் இறுதியும்**
> **ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்**
> **ஞாங்கர்க் கிளர்ந்த வல்லெழுத்து மிகுமே.**

***பொருள்:*** *வினை எச்சச் சொல்லும், உவமச் சொல்லும், ''என'' என்கின்ற எச்சச் சொல்லும், சுட்டுச் சொல்லும், ''ஆங்க'' என்னும் உரை அசைச் சொல்லும், அகரத்தை இறுதியாகக் கொண்டு இருக்க, அதை அடுத்து வல்லினம் எழுந்தால் (வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல், வருமொழியாகத் தோன்றினால்), அவ்வல்லின ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*வினை எச்சச்சொல் புணர்தல்: உண்ண + கொடு = உண்ணக்கொடு. உண்ண + சொல் = உண்ணச்சொல். உண்ண + தா = உண்ணத்தா. உண்ண + போடு = உண்ணப்போடு.*

*உவமச் சொல் புணர்தல்: வைரம்போல + கடினம் = வைரம்போலக் கடினம். வைரம்போல + சலனம் = வைரம்போலச் சலனம். வைரம்போல + தவம் = வைரம்போலத் தவம். வைரம் போல + பாவம் = வைரம்போலப் பாவம்.*

*''என'' எனும் எச்சச்சொல் புணர்தல்: கொள் + என + கொண்டான் = கொள்ளெனக் கொண்டான். செல் + என + சென்றான் = செல்லெனச் சென்றான். தின் + என + தின்றான் = தின்னெனத் தின்றான். படி + என + படித்தான் = படியெனப் படித்தான்.*

*சுட்டுச்சொல் புணர்தல்: அ + கலைஞன் = அக்கலைஞன். அ + சாணன் = அச்சாணன். அ + தலைவன் = அத்தலைவன். அ + பையன் = அப்பையன்.*

*''ஆங்க'' எனும் உரை அசைச்சொல் புணர்தல்: ஆங்க + கண்டேன் = ஆங்கக் கண்டேன். ஆங்க + சொன்னேன் = ஆங்கச் சொன்னேன். ஆங்க + தந்தேன் = ஆங்கத் தந்தேன். ஆங்க + பிடுங்கினேன் =*

ஆங்கப் பிடுங்கினேன்.

### அகரச்சுட்டு மென்கணத்தோடு புணர்தல்

**206. சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்**
**ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்.**

***பொருள்:*** சுட்டு எழுத்தை அடுத்து "ஞ", "ந", "ம" வந்தால், சேர்ந்த எழுத்தின் ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***விளக்கம்:*** "அ" எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, "ஞ" / "ந" / "ம" எனும் மெல்லின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தால், சேர்ந்த மெல்லின எழுத்தின் ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*அ + ஞானம் = அஞ்ஞானம்.*
*அ + நாள் = அந்நாள்.*
*அ + மலர் = அம்மலர்.*

### அகரச்சுட்டு இடைக்கணத்தோடு புணர்தல்

**207. யவமுன் வரினே வகரம் ஒற்றும்.**

***பொருள்:*** சுட்டு எழுத்தை அடுத்து, "ய" / "வ" வந்தாலே, வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***விளக்கம்:*** "அ" எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, "ய" / "வ" எனும் இடையின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலே, வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*அ + யானை = அவ்யானை.*
*அ + வீடு = அவ்வீடு.*

### அகரச்சுட்டு உயிர்க்கணத்தோடு புணர்தல்

***208. உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.***

**பொருள்:** உயிர் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலும், அந்த இயல்பு மாறாது.

**விளக்கம்:** முன் நூற்பாவின் (206ன்) தொடர்ச்சியாக, ‘‘அ’’ எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, உயிர் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலும், வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*அ + அணில் = அவ்வணில்.*
*அ + ஆடு = அவ்வாடு.*
*அ + இலை = அவ்விலை.*
*அ + ஈ = அவ்வீ.*
*அ + உரல் = அவ்வுரல்.*
*அ + ஊசி = அவ்வூசி.*
*அ + எறும்பு = அவ்வெறும்பு.*
*அ + ஏணி = அவ்வேணி.*
*அ + ஐவர் = அவ்வைவர்.*
*அ + ஒட்டகம் = அவ்வொட்டகம்.*
*அ + ஓணான் = அவ்வோணான்.*
*அ + ஔவை = அவ்வௌவை.*

### அகரச்சுட்டு செய்யுளில் நீடல்

***209. நீட வருதல் செய்யுளுள் உரித்தே.***

**பொருள்:** நீண்டு வருவது, செய்யுளுக்கு உடையது.

**விளக்கம்:** முன் நூற்பாவின் (206ன்) தொடர்ச்சியாக, ‘‘அ’’ எனும் சுட்டு எழுத்து, செய்யுளில் மாத்திரை அளவில் மிகையாவதற்கு வரும்.

**எடுத்துக்காட்டு:**

*அ + இயல் = அவ்வியல் –> அ + அ + இயல் = ஆ + இயல் = ஆயியல். (208 ஐக் காண்க)*

### சாவ மொழியுடன் வன்கணம் புணர்தல்

***210. சாவ என்னுஞ் செயவென் எச்சத்து***

**இறுதி வகரங் கெடுதலும் உரித்தே.**

***பொருள்:*** *"சாவ" எனும் வினை எச்சச் சொல்லின் இறுதி, வகரத்தோடு கழிதலும் உடையது. கழியாமல் நிற்பதும் உள்ளது.*

***எடுத்துக்காட்டு:***

*சா + கண்டான் = சாக்கண்டான். சா + சொன்னான் = சாச்சொன்னான். சா + தந்தான் = சாத்தந்தான். சா + பண்ணினான். சாப்பண்ணினான்.*

*சாவ + கண்டான் = சாவக்கண்டான். சாவ + சொன்னான் = சாவச்சொன்னான். சாவ + தந்தான் = சாவத்தந்தான். சாவ + பண்ணினான் = சாவப்பண்ணினான், எனவும் வரும்.*

### அகர ஈறு இயல்பாய் முடிதல்

***211.** **அன்ன என்னும் உவமக் கிளவியும்***
***அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்***
***செய்ம்மன என்னுந் தொழிலிறு சொல்லும்***
***ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்***
***செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்***
***செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்***
***அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்***
***பலவற் றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட***
***அன்றி அனைத்தும் இயல்பென மொழிப.***

***பொருள்:*** *அகரத்தை இறுதியாய்க் கொண்ட, "அன்ன" எனும் உவமச் சொல்லும்; அருகாமையைக் குறிக்கும் அழைப்புச் சொல்லும்; "செய்ம்மன" எனும் வினைமுற்றுச் சொல்லும்; கட்டளையுடன் கூடிய வினைமுற்றுச் சொல்லும்; "செய்த" எனும் பெயர் எச்சச் சொல்லும்; "செய்யிய" எனும் வினை எச்சச் சொல்லும்; "அம்ம" எனும் உரைப் பொருள் சொல்லும்; "பல" எனப் பெயர் கொண்ட சொல் உள்பட அனைத்தும், இவை போன்ற பிறவும், இயல்பாய்ப் புணரும் எனச் சொல்வர், அறிஞர்.*

***விளக்கம்:*** *மேற்காணும் சொற்களும், அவை போன்ற பிறவும், வல்லின எழுத்துகளை முதலாகக் கொண்ட சொல், வருமொழியாக வந்து சேரும்போது, இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*உவமச் சொல்:*

*காற்று அன்ன + குதிரை = காற்று அன்ன குதிரை. இடி அன்ன + சொல் = இடி அன்ன சொல். மின்னல் அன்ன + தாக்கு. மழை அன்ன + பேச்சு = மழை அன்ன பேச்சு.*

*(அன்னக்குதிரை, அன்னச்சொல், அன்னத்தாக்கு, அன்னப்பேச்சு என்றால், சோற்றால் ஆன குதிரை, சோற்றுக்கானச் சொல், சோற்றால் செய்த தாக்கு, சோற்றுக்கானப் பேச்சு என்றோ, அன்னம் என்பதற்கான வேறு பொருளை உடையதாகவோ குழப்பம் ஏற்படும்.)*

*அருகாமையைச் சுட்டிய அழைப்புச்சொல்:*

*மலைய(ன்) + கொடு = மலைய கொடு. தலைவ(ன்) + சொல் = தலைவ சொல். நாட(ன்) + தா = நாட தா. ஊர(ன்) + பெறுவாய் = ஊர பெறுவாய்.*

*வினைமுற்றுச்சொல்:*

*செய்ம்மன = செய்ய வேண்டியன. செய்ய விரும்புவன.*

*செய்ம்மன + கண்டான் = செய்ம்மன கண்டான். செய்ம்மன + செய்தான் = செய்ம்மன செய்தான். செய்ம்மன + தொகுத்தான் = செய்ம்மன தொகுத்தான். செய்ம்மன + புரிந்தான் = செய்ம்மன புரிந்தான்.*

*(ஆய்ம்மன = ஆய வேண்டியன. கொய்ம்மன = கொய்ய விரும்புவன. இவை, "செய்ம்மன" போன்றவை.)*

*கட்டளையுடன் கூடிய வினைமுற்றுச் சொல்:*

*வாழிய + கந்தா = வாழிய கந்தா. ஒழிக + சினம் = ஒழிக சினம். நிலைக்க + தவம் = நிலைக்க தவம். சிறக்க + பாவனை = சிறக்க பாவனை.*

*பெயர் எச்சச்சொல்:*

*செய்த + கண்ணன் = செய்த கண்ணன். செய்த + செந்நாய் = செய்த செந்நாய். செய்த + தலைவன் = செய்த தலைவன். செய்த + பிழை = செய்த பிழை.*

*(கொய்த கனி. நெய்த சேலை. உய்த தாவரம். பெய்த பனி. இடையில் ஒற்று வந்தால், பொருள் மாறிவிடும்.)*

*வினை எச்சச்சொல்:*

*செய்யிய + கண்டான் = செய்யிய கண்டான். செய்யிய +*

*செய்தான் = செய்யிய செய்தான். செய்யிய + துறந்தான் = செய்யிய துறந்தான். செய்யிய + பயின்றான் = செய்யிய பயின்றான்.*

*(சொல்லிய கேட்டான். உண்ணிய செய்தான். எண்ணிய தந்தான். பண்ணிய பாடல்.)*

*உரைப்பொருள் சொல்:*

*அம்ம + கண்டேன் = அம்ம கண்டேன். அம்ம + செய்தான் = அம்ம செய்தான். அம்ம + திருடன் = அம்ம திருடன். அம்ம + பாணன் = அம்ம பாணன்.*

*(அப்ப கண்டேன். அய்ய செய்தான். அக்க தொலைந்தான். மக்க படிந்தான்)*

*“பல” எனும் பெயர்ச்சொல்:*

*பல + கண்டேன் = பல கண்டேன். பல + சொன்னேன் = பல சொன்னேன். பல + தந்தேன் = பல தந்தேன். பல + படித்தேன் = பல படித்தேன்.*

*(சில கண்டேன். சில சொன்னேன். சில தந்தேன். சில படித்தேன். உள கண்டேன். உள சொன்னேன். உள தந்தேன். உள படித்தேன்)*

### வாழிய இறுதி யகரம் கெடுதல்

***212.*** **வாழிய வென்னுஞ் சேயவென் கிளவி**
**இறுதி யகரங் கெடுதலும் உரித்தே.**

***பொருள்:*** *“வாழிய” எனும் பொருள் கொண்ட “சேய” எனும் சொல்லின் இறுதியான யகரம் கழியக்கூடியது.*

***விளக்கம்:*** *வாழிய –> வாழி என, யகரம் கழிந்து, ஆவதைப் போல், சேய என்பதும், யகரம் கழிந்து, “சே” என ஆகும்.*

*வாழி = வ் + ஆழ் + இ. வ் = உ + அ. புறமும் அகமும்.*

*இ = இருத்தல். வாழி = புறமும் அகமும் ஆழ்ந்து இருத்தல்.*

*வாழிய = வாழி + அ. புறமும் அகமும் ஆழ்ந்த இருத்தல் ஆகுக. ஆழ்தியான நிலை பெறுக.*

*சேய = ச் + ஏய் + அ = இயக்கம் மிக உயர்ந்து நிலைக்க. சே = இயக்கம் மிக உயர்வதாகுக.*

*விளைவில், ''வாழி'' என்பதும் ''சே'' என்பதும் ஒன்றே!*

### அம்ம இறுதி அகரம் நீடல்

***213. உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்.***

***பொருள்:*** *''அம்ம'' போன்ற உரைப் பொருள் சொல், மாத்திரை அளவில் நீள்வதற்கு, எல்லையை வரையறுக்கவில்லை, அறிஞர்.*

***விளக்கம்:*** *கண்டதை, கேட்டதை, செய்ததை ஒருவர் மற்றவரிடம் உரைக்கும்போது, கேட்பவர் ஆர்வம் கொள்ள வேண்டி, கவனம் நிலைப்பதற்காக, வியப்பை எதிர்பார்க்கும் வகையில், ''அம்ம'', ''அய்ய'' போன்ற சொற்களின் இறுதி எழுத்தான அகரத்தை மாத்திரை அளவில் நீட்டிப்பதற்கு எல்லை வகுக்கப்படவில்லை. காலம், இடம், பொருள், சொல்பவர், கேட்பவர் ஆகியவற்றைப் பொறுத்து, அது மாறும்.*

***எடுத்துக்காட்டு:*** *அம்ம...(இறுதி அகர ஒலியே தொடர்தல்), அம்மா (குறிய அகரம் நெடிய ஆகாரம் ஆதல்), அம்மா..(நெடிய ஆகார ஒலியே தொடர்தல்)*

### பல சில செய்யுள் முடிபு

***214. பலவற் றிறுதி நீடுமொழி உளவே***
***செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.***

***பொருள்:*** *செய்யுளில் இணைந்த தொடர்மொழியாக, ''பல'' எனும் சொல்லின் இறுதியான அகரம், நீண்டு வருவதும் உள்ளது.*

***எடுத்துக்காட்டு:*** *''பலாஅஞ் சிலாஅம்''. (பல + அ + அம், சில + அ + அம்). பலவும் சிலவும். பலவின் தன்மை சிலவின் தன்மை.*

### பல, சில – தம்முன் தாம் புணர்தல்

***215. தொடரல் இறுதித் தம்முன் தாம்வரின்***
***லகரம் றகரவொற் றாதலு முரித்தே.***

**பொருள்:** தொடர்மொழியில், நிலைமொழியின் இறுதியில், அதே சொல்லே வருமொழியாய் வந்தால், லகரம் றகர ஒற்றெழுத்தாய் மாறுவதும் உண்டு.

**எடுத்துக்காட்டு:** *பல + பல = பற்பல. சில + சில = சிற்சில.*

லகரம் றகர ஒற்றெழுத்தாய் மாறாமல், பல பல, சில சில என தொடர்மொழியில் வருவதும் உண்டு.

## வல்லெழுத்தின் இயல்பும் விகற்பமும்

***216. வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும்.***

**பொருள்:** வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட வருமொழி, நிலைமொழியுடன் இயல்பாகவும் திரிந்தும் புணரும்.

**விளக்கம்:** அகரத்தை இறுதியாகக் கொண்ட ''பல'', ''சில'' எனும் சொற்களை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட ''பல'', ''சில'' எனும் சொல் வந்தால், புணர்ச்சி, இயல்பாகவும் திரிந்தும் ஏற்படும். திரிதலில் ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*பல + பல = பல பல / பலப்பல.*
*சில + சில = சில சில / சிலச்சில.*

## அகர ஈற்றுப் பெயர்முன் வன்கணம் வேற்றுமையிற் புணர்தல்

***217. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.***

**பொருள்:** வேற்றுமை இடத்திலும் அதைப் போன்றதே.

**விளக்கம்:** அகரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே (204) வேற்றுமையிலும், புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*மக + கண் = மகக்கண்.*
*அத + கிளை = அதக்கிளை.*

## அகர வீற்று மரப்பெயர் முன் மென்கணம் மிகுதல்

***218. மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே.***

***பொருள்:*** *மரப்பெயர்ச் சொல்லை அடுத்து, மெல்லின எழுத்துகூடும்.*

***விளக்கம்:*** *அகரத்தை இறுதியாகக் கொண்ட மரப்பெயர்ச் சொல்லை அடுத்து, மெல்லின எழுத்தை முதலாகக் கொண்டச் சொல் வந்தால், புணரும் சொற்களுக்கு இடையில், மெல்லின ஒற்றெழுத்து வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*விள + கிளை = விளங்கிளை.*
*அத + செதில் = அதஞ்செதில்.*
*விள + தோல் = விளந்தோல்.*
*அத + பால் = அதம்பால்.*

***மக 'இன்' சாரியை பெறுதல்***

***219. மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை.***

***பொருள்:*** *"மக" எனும் அகரத்தை இறுதியாய்க் கொண்டப் பெயர்ச் சொல்லுக்கு 'இன்' தான் சாரியையாக வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*மக + இன் + கை = மகவின்கை.*
*மக + இன் + சிலை = மகவின்சிலை.*
*மக + இன் + தலை = மகவின்தலை.*
*மக + இன் + பகை = மகவின்பகை.*

***மக, 'அத்து' சாரியை பெறுதல்***

***220. அத்துவண் வரினும் வரைநிலை இன்றே.***

***பொருள்:*** *'அத்து' அங்கு வந்தாலும் தடை இல்லை.*

*விளக்கம்: மேற்கூறிய, "மக" எனும் சொல்லுக்கு, 'அத்து' எனும் சாரியை வந்தாலும் தடையில்லை.*

***எடுத்துக்காட்டு:***
*மக + அத்து + கை = மகத்துக்கை.*

*மக + அத்து + சிலை = மகத்துச்சிலை.*
*மக + அத்து + தலை = மகத்துத்தலை.*
*மக + அத்து + பகை = மகத்துப்பகை.*

### பல ‘வற்று’ச் சாரியை பெறுதல்

***221. பலவற் றிறுதி உருபியல் நிலையும்.***

***பொருள்:*** “பல” எனும் சொல், ‘வற்று’ எனும் சாரியையை, இறுதியில் பெறுவது, உருபியல்படி நிகழும் *(175).*

***விளக்கம்:*** “பல” எனும் அகரத்தை இறுதியாய்க் கொண்ட சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வருவதாய் இருந்தால், ‘வற்று’ எனும் சாரியை இடையில் வந்தே, சேரும்.

***எடுத்துக்காட்டு:***

*பல + வற்று + கிளை = பலவற்றுக்கிளை.*
*பல + வற்று + சிலை = பலவற்றுச்சிலை.*
*பல + வற்று + தலை = பலவற்றுத்தலை.*
*பல + வற்று + பகை = பலவற்றுப்பகை.*

### ஆகார ஈற்றுப் பெயர் அல்வழியிற் புணர்தல்

***222. ஆகார இறுதி அகர இயற்றே.***

***பொருள்:*** ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், அகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் இயல்புடையதே *(204).*

***விளக்கம்:*** ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல்லுடன், அல்வழி–யில்புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து மிகும்.

***எடுத்துக்காட்டு:***

*சுறா + கடிது = சுறாக்கடிது.*
*சுறா + சிறிது = சுறாச்சிறிது.*
*சுறா + தீது = சுறாத்தீது.*

*சுறா + பெரிது = சுறாப்பெரிது.*

### செய்யா என்னும் வினையெச்சம் வன்கணத்துடன் புணர்தல்

**223. செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்.**

**பொருள்:** "செய்யா" எனும் வினை எச்சச் சொல்லும், அந்த இயல்பிலிருந்து மாறாது என்னும் கருத்துடையவர்கள், ஆறிஞர்கள்.

**விளக்கம்:** "செய்யா" எனும் ஆகாரத்தை இறுதியாய்க் கொண்ட வினை எச்சச் சொல்லுடனும், வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*செய்யா + கொண்டான் = செய்யாக் கொண்டான்.*
*உண்ணா + சென்றான் = உண்ணாச் சென்றான்.*
*எண்ணா + தந்தான் = எண்ணாத் தந்தான்.*
*சொல்லா + போனான் = சொல்லாப் போனான்.*

### ஆகார ஈற்று உம்மைத் தொகை முடிபு

**224. உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக அகரம் மிகுமே.**

**பொருள்:** இரண்டு பெயர்ச் சொற்கள் புணரும்போது, "உம்" இல்லாமலே, அப்பொருளை உணர்த்தும் வகையில், மெய்யெழுத்து தோன்ற, அகரம் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*இந்தியா + கொரியா = இந்தியாஅக்கொரியா.*
*கந்தா + சந்தா = கந்தாஅச்சந்தா.*
*இந்தியா + தாய்லாந்து = இந்தியாஅத்தாய்லாந்து.*
*இந்தியா + நியூஸிலாந்து = இந்தியாஅந்நியூஸிலாந்து.*
*இந்தியா + பாகிஸ்தான் = இந்தியாஅப்பாகிஸ்தான்.*
*இந்தியா + மலேசியா = இந்தியாஅம்மலேசியா.*
*வசந்தா + பத்மா = வசந்தாஅப்பத்மா.*
*இரா + பகல் = இராஅப்பகல்.*

இவை பொதுவாக, பேச்சு வழக்கில் நிகழ்வது.

*ஆகார ஈறு இயல்பாய் முடிதல்*

**225.** ***ஆவு மாவும் விளிப்பெயர்க் கிளவியும்***
***யாவென் வினாவும் பலவற் றிறுதியும்***
***ஏவல் குறித்த உரையசை மியாவும்***
***தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியோடு***
***அன்றி அனைத்தும் இயல்பென மொழிப.***

***பொருள்:*** *ஆ, மா, அழைக்கும் பெயர்ச்சொல், "யா" என்கின்ற வினா, பலவற்றைக் குறித்து (வினாவாக) ஆகாரத்தில் முடியும் சொற்கள், கட்டளைச் சொல்லுடன் சேர்ந்த உரை அசையான "மியா", தன்செயலைக் குறிக்கும் வினாச்சொல், ஆகியவை மட்டுமின்றி, இவை போன்ற பிறவும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்டு வரும் வருமொழியுடன், இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஆ:*

*ஆ + கண்டேன் = ஆகண்டேன். ஆ + சொன்னேன் = ஆ சொன்னேன். ஆ + தந்தேன் = ஆதந்தேன். ஆ + பார் = ஆபார்.*

*மா:*

*மா + கண்டேன் = மாகண்டேன். மா + சொன்னேன் = மாசொன்னேன். மா + தந்தேன் = மாதந்தேன். மா + பார் = மாபார்.*

*அழைக்கும் பெயர்ச்சொல்:*

*கந்தா + காண் = கந்தா காண். முருகா + சொல் = முருகா சொல். கண்ணா + தா = கண்ணா தா. கோபாலா + போ = கோபாலா போ.*

*யா:*

*யா + கண்டாய் = யா கண்டாய்? யா + சொன்னாய் = யா சொன்னாய்? யா + தந்தாய் = யா தந்தாய்? யா + பார்த்தாய் = யா பார்த்தாய்?*

*பலவற்றிறுதி:*

*மீன்களா + கண்டாய் = மீன்களா கண்டாய்? மரங்களா + செதுக்கினாய் = மரங்களா செதுக்கினாய்? வண்டுகளா + தேடினாய் = வண்டுகளா தேடினாய்? பூக்களா + பறித்தாய் = பூக்களா*

*பறித்தாய்?*

*ஏவல்குறித்த உரையசை மியா:*

*(சொல்) சொன்மியா + கந்தா = சொன்மியா கந்தா. (கேள்) கேண்மியா + சொக்கா = கேண்மியா சொக்கா. (நில்) நின்மியா + தமிழா = நின்மியா தமிழா. (கொள்) கொண்மியா + பார்த்தா = கொண்மியா பார்த்தா.*

*தன்செயலைக் குறிக்கும் வினாச்சொல்:*

*உண்பனா + காண் = உண்பனா? காண். காண்பனா + சொல் = காண்பனா? சொல். சொல்வனா + தமிழ் = சொல்வனா? தமிழ். தருவனா + பண் = தருவனா? பண்.*

### ஆகார ஈற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்

***226. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.***

**பொருள்:** வேற்றுமை இடத்திலும் அதைப் போன்றதே.

விளக்கம்: ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே *(204)* வேற்றுமையிலும் *(217)*, புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*நிலா + காட்சி = நிலாக்காட்சி.*
*பலா + சுளை = பலாச்சுளை.*
*சிவா + தாள் = சிவாத்தாள்.*
*தேவா + பாடல் = தேவாப்பாடல்.*

### ஆகார ஈற்றுடன் அகர எழுத்துப்பேறு தோன்றுதல்

***227. குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்***
***அறியத் தோன்றும் அகரக் கிளவி.***

*அறிய = தனிப்படுத்தித் தெரிவிக்க.*

**பொருள்:** குற்றெழுத்தை அடுத்து ஆகார எழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல்லையும், ஆகாரத்தை இறுதியாய்க் கொண்ட ஓர் எழுத்துச் சொல்லையும், தனிப்படுத்தித் தெரிவிக்க, அகரம் எனும்

ஓர் எழுத்துச் சொல், புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*குற்றெழுத்தை அடுத்து ஆகாரம்:*

*நிலா + அ + காட்சி = நிலாஅக்காட்சி (நிலாக்காட்சி என்பதில், நில்லாத காட்சி எனும் பொருள் வராமல் இருக்க, நிலவின் காட்சி என்பதைத் தெளிவாக்க, ''அ'', இடையில் வருகின்றது).*

*பலா + அ + சுளை = பலாஅச்சுளை (பலாச்சுளை என்பதில், பலவானச் சுளை எனும் பொருள் வராமல் இருக்க, பலாப்பழத்தின் சுளை என்பதைத் தெரிவிக்க, ''அ'', இடையில் வருகின்றது).*

*சிவா + அ + தாள் = சிவாஅத்தாள் (சிவாத்தாள் என்பதில், சிவப்பானவள் எனும் பொருள் வராமல் இருக்க, சிவனின் பாதம் என்பதைத் தெளிவாக்க, ''அ'', இடையில் வருகின்றது).*

*தேவா + அ + பாடல் = தேவாஅப்பாடல் (தேவாப்பாடல் என்பதில், தேவையில்லாதப் பாடல் எனும் பொருள் வராமல் இருக்க, தேவாவின் பாடல் என்பதைத் தெளிவாக்க, ''அ'', இடையில் வருகின்றது).*

*ஆகார ஓர் எழுத்துச் சொல்:*

*கா + அ + கண்டான் = காஅக்கண்டான். (கா = சோலை. காக்கண்டான் என்றால், ''காக்க வேண்டாம்'' எனும் பொருள்பட பேச்சு வழக்கில், குழப்பம் வரலாம். காஅக்கண்டான் என்பதால், சோலையைக் கண்டான் என்பது தெளிவாகும்).*

*சா + அ + சொன்னான் = சாஅச்சொன்னான் (சாச்சொன்னான் என்றால், சாகச் சொன்னான் எனப் பொருள் வந்து விடும். சாஅச்சொன்னான் என்பதால், சாவு செய்தியைச் சொன்னான் எனத் தெளிவாகும்).*

## இரா வேற்றுமையில் அகரம் பெறாமை

***228. இராவென் கிளவிக் ககர மில்லை.***

***பொருள்:*** *''இரா'' எனும் சொல்லுக்கு அகரம் வராது.*

***விளக்கம்:*** *''இரா'' எனும் சொல்லுக்கும், வல்லின எழுத்தை முதலாகக் கொண்டு புணர்கின்ற சொல்லுக்கும் இடையில், அகரம் வராது.*

*ஏனெனில், அகரம் வந்தால், இரா + அ + பகல் = இராஅப்பகல் என ஆகும். அது, இரவின் பகல் என பொருந்தாத பொருள் தரும். ஆனால், இராப்பகல் என்பது, இரவும் பகலும் எனப் பொருள் தருவதால், பொருள் குழப்பம் ஏற்படலாம் என்பதால், தவிர்க்கப்பட்டது போலும்.*

### நிலா அத்துச் சாரியை பெறுதல்

**229. நிலாவென் கிளவி அத்தொடு சிவணும்.**

**பொருள்:** *"நிலா" எனும் சொல் "அத்து" எனும் சாரியையுடன் சேரும்.*

**எடுத்துக்காட்டு:**

*நிலா + அத்து + கல் = நிலாஅத்துக்கல். (நிலாத்துக்கல் என்பது நிலத்துக்கல் என்பது போல் பொருள் தந்துவிடலாம். நிலவினது கல் எனத் தெளிவுப்படுத்த "அ" கழியாமல் நிலைக்கின்றது).*

*நிலா + அத்து + சாயல் = நிலாஅத்துச்சாயல்.*
*நிலா + அத்து + தண்ணீர் = நிலாஅத்துத்தண்ணீர்.*
*நிலா + அத்து + பாறை = நிலாஅத்துப்பாறை.*

### யா, பிடா, தளா மென்கணம் மிகுதல்

**230. யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்**
**ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே.**

**பொருள்:** *"யா" எனும் மரச்சொல், பிடா, தளா ஆகிய மூன்று பெயர்களுக்கும், மெல்லின எழுத்து கூடும்.*

**விளக்கம்:** *"யா", பிடா, தளா ஆகிய மூன்று ஆகாரத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்களையும், தனிப்படுத்தித் தெரிவிக்க, அகரம் எனும் ஓர் எழுத்து கூடுவதோடன்றி, புணர வரும் வல்லின எழுத்துக்கு இனமான, மெல்லெழுத்தும் கூடும்.*

**எடுத்துக்காட்டு:**

*யா + அ + ங் + கிளை = யாஅங்கிளை.*
*யா + அ + ஞ் + சோலை = யாஅஞ்சோலை.*
*பிடா + அ + ந் + தோல் = பிடாஅந்தோல்.*
*தளா + அ + ம் + பால் = தளாஅம்பால்.*

***யா, பிடா, தளா வல்லெழுத்து மிகுதல்***

***231. வல்லெழுத்து மிகினு மான மில்லை.***

***பொருள்:*** வல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

***விளக்கம்:*** யா, பிடா, தளா ஆகிய மூன்று ஆகாரத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்களையும், தனிப்படுத்தித் தெரிவிக்க, அகரம் எனும் ஓர் எழுத்து கூடுவதோடன்றி, புணர வரும் வல்லின எழுத்தின், ஒற்றெழுத்து கூடுவதிலும் தவறில்லை.

***எடுத்துக்காட்டு:***

*யா + அ + க் + கிளை = யாஅக்கிளை.*
*யா + அ + ச் + சோலை = யாஅச்சோலை.*
*பிடா + அ + த் + தோல் = பிடாஅத்தோல்.*
*தளா + அ + ப் + பால் = தளாஅப்பால்.*

***மா மரப்பெயரும் மா விலங்கும் ஆவும் வன்கணத்தோடு புணர்தல்***

***232. மாமரக் கிளவியும் ஆவும் மாவும்***
***ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன***
***அகரம் வல்லெழுத் தவையவண் நிலையா***
***னகரம் ஒற்றும் ஆவும் மாவும்.***

***பொருள்:*** ''மா'' எனும் மரச் சொல்லும், ''ஆ'' வும், ''மா'' வும், ஆகிய அந்த மூன்று பெயர்களும், (மேல்கூறிய) அவற்றைப் போன்றன.

''ஆ'' உடனும், ''மா'' உடனும், அகரம், வல்லின எழுத்து ஆகியவை அங்கு நிலைக்காமல், னகர ஒற்றெழுத்து சேரும்.

***விளக்கம்:*** ''மா'', ''ஆ'', ''மா'' ஆகிய மூன்று ஆகாரத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச் சொற்களையும், ''யா, பிடா, தளா'' வை போன்று, அகரம் எனும் ஓர் எழுத்து கூடுவதோடன்றி, புணர வரும் வல்லின எழுத்துக்கு இனமான, மெல்லெழுத்தும் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*மா + அ + ங் + கிளை = மாஅங்கிளை*
*ஆ + அ + ங் + கொம்பு = ஆஅங்கொம்பு.*
*மா + அ + ங் + கொம்பு = மாஅங்கொம்பு.*

*அது மட்டும் இல்லாமல், அகரம் எனும் ஓர் எழுத்து கூடுவதுடன், புணர வரும் வல்லின எழுத்தின் ஒற்றெழுத்தும் கூடலாம்.*

**எடுத்துக்காட்டு:**

*மா + அ + க் + கிளை = மாஅக்கிளை.*

ஆனால், ''ஆ'' மற்றும் ''மா'' வை பொறுத்த வரை, கூடி வந்த ''அ'' வும், வல்லின ஒற்றெழுத்தும், அங்கு நிலைப் பெறாமல் கழிய, னகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*ஆ + ன் + பால் = ஆன்பால்.*
*மா + ன் + கொம்பு = மான்கொம்பு.*

## ''ஆ'' எனும் பெயர் னகர ஒற்றொடு இயைதல்

***233. ஆனொற் றகரமொடு நிலையிடன் உடைத்தே.***

***பொருள்:*** ''ஆ'' வை ஒட்டிய னகர ஒற்றுடன், அகரம் நிலைக்கும் இடம், உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

*ஆ + ன் + அ + நெய் = ஆனநெய்.*

சொல்லும்போது, 'ஆ' வை அடுத்து ஒரு சிறிய இடைவெளி வரும். ''ஆ'' வையும், ''ன'' வையும் சேர்த்து விரைவாய்ச் சொன்னால் பொருள் மாறும்.

## ''ஆ'' எனும் பெயரோடு ஈகாரபகாரம் புணர்தல்

***234. ஆன்முன் வரூஉம் ஈகாரப் பகரம்***
***தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே.***

***பொருள்:*** ''ஆ'' வை அடுத்து வந்து கொண்டிருக்கும் ''பீ', தன் ஒற்றெழுத்து கூடியோ, தானே குறுகியோ வருவதை உடையது.

**எடுத்துக்காட்டு:**

*ஆ + பீ = ஆப்பீ / ஆப்பி.*

### ஆகார ஈறு செய்யுளில் முடிதல்

***235. குறியதன் இறுதிச் சினைகெட உகரம்***
***அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.***

*சினை = சின் + ஐ = சில் + ஐ. சிறியது ஐக்கியமானது. சிறிய ஒலிக்கூறு சேர்ந்தது.*

*அறிய = தனிப்படுத்தித் தெரிவிக்க.*

***பொருள்:*** *குற்றெழுத்தை அடுத்து வரும் ஆகார இறுதியின் சேர்ப்பு கழிய, சொல்லைத் தனிப்படுத்தி தெரிவிக்க, உகரம் வருவது, செய்யுளில் உள்ளது.*

***எடுத்துக்காட்டு:***

*நிலா + கதிர் –> நில + ~~அ~~ + உ +கதிர் = நில + உ + கதிர் = நிலவுக்கதிர்.*

*குற்றெழுத்தான ''நி'' யை அடுத்து, இறுதியான ''லா'' வின் சினை, ''அ'' ஆகும்.*

*(உகரம் வராமல், நிலாக்கதிர் என்றால், நிற்காத கதிர் எனப் பொருள் மாறிவிடும்)*

*இறா + செதில் = இற + உ + செதில் = இறவுச்செதில். (உகரம் வராமல், இறாச்செதில் என்றால், பிரியாத செதில் எனக் குழப்பம் வரலாம்)*

### இகர ஈற்றுப் பெயர் வேற்றுமையில் புணர்தல்

***236. இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்***
***வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.***

***பொருள்:*** *இகரத்தை இறுதியாகக் கொண்ட நிலைமொழிப் பெயர்ச்சொல்லை அடுத்து, வேற்றுமைப் பொருளைக் குறிக்கும் சொல் வந்தால், வல்லின எழுத்து கூடும்.*

***விளக்கம்:*** *இகரத்தை இறுதியாகக் கொண்ட நிலைமொழிப் பெயர்ச்சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட, வேற்றுமைப் பொருளைக் குறிக்கும் சொல்,*

வருமொழியாக வந்தால், அச்சொற்களுக்கு இடையில், வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*அல்லி + கொடி = அல்லிக்கொடி.*
*மல்லி + சரம் = மல்லிச்சரம்.*
*கள்ளி + தண்டு = கள்ளித்தண்டு.*
*முள்ளி + பால் = முள்ளிப்பால்.*

### இகர ஈற்றுப் புணர்ச்சியில் வன்கணம் மிகுதல்

**237. இனிஅணி என்னுங் காலையும் இடனும்**
**வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டும் அன்ன.**

**பொருள்:** "இனி" எனும் காலத்தைக் குறிக்கும் சொல்லும், "அணி" எனும் இடத்தைக் குறிக்கும் சொல்லும், வினை எச்சச் சொல்லும், சுட்டும், அதைப் போன்றதே.

**விளக்கம்:** இகர இறுதியைக் கொண்ட, "இனி" எனும் காலத்தைக் குறிக்கும் சொல்லும்; "அணி" எனும் இடத்தைக் குறிக்கும் சொல்லும்; வினை எச்சச் சொல்லும், இகரச்சுட்டும் நிலைமொழியாய் இருக்க, வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட, வேற்றுமைப் பொருளைக் குறிக்கும் சொல், வருமொழியாக வந்தால், அச்சொற்களுக்கு இடையில், வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*இனி:*

*இனி + கொடுமை = இனிக்கொடுமை.*
*இனி + செம்மை = இனிச்செம்மை.*
*இனி + தனிமை = இனித்தனிமை.*
*இனி + பெருமை = இனிப்பெருமை.*

*அணி:*
*அணி + கடுமை = அணிக்கடுமை.*
*அணி + சொன்மை = அணிச்சொன்மை.*
*அணி + தன்மை = அணித்தன்மை.*
*அணி + பொறுமை = அணிப்பொறுமை.*

*வினை எச்சச் சொல்:*

*தேடி + கொண்டான் = தேடிக்கொண்டான்.*
*நாடி + சென்றான் = நாடிச்சென்றான்.*
*சாடி + தீர்த்தாள் = சாடித்தீர்த்தாள்.*
*வாடி + போனான் = வாடிப்போனான்.*

*சுட்டு:*

*இ + கள்வன் = இக்கள்வன்.*
*இ + சோலை = இச்சோலை.*
*இ + தலைவி = இத்தலைவி.*
*இ + பாகன் = இப்பாகன்.*

## இன்றி என்னும் இகர ஈறு செய்யுட்கண் உகரமாதல்

***238.** **இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி***
***நின்ற இகரம் உகரம் ஆதல்***
***தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே.***

***பொருள்:*** *வினை எச்சச் சொல்லின் இறுதியில் வரும் ''இன்றி'', என்பதன் இகரம், உகரம் ஆவது, நெடுங்காலமாய் செய்யுளில் நிகழ்வது.*

***எடுத்துக்காட்டு:***

*''உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே''. என வரும்.*
*சொல்லின்றி உரைப்பாயா? –> சொல்லின்று உரைப்பாயா?*
*கண்ணின்றிக் காணாமோ? –> கண்ணின்று காணாமோ?*

## இகரச் சுட்டு இயல்பு கணத்தொடு முடிதல்

***239.** **சுட்டி னியற்கை முற்கிளந் தற்றே.***

***பொருள்:*** *சுட்டுச் சொல்லின் இயல்பு முன்பு எழுந்ததைப் போன்றதே.*

***விளக்கம்:*** *இகரச் சுட்டுச் சொல்லின் இயல்பு, முன்பு கூறிய அகரச் சுட்டின் இயல்பைப் போன்றதே. (206, 207, 208 & 209)*

*''இ'' எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, ''ஞ'' / ''ந'' / ''ம'' எனும் மெல்லின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்டச்*

சொல் வந்தால், சேர்ந்த மெல்லின எழுத்தின் ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*இ + ஞானம் = இஞ்ஞானம்.*
*இ + நாள் = இந்நாள்.*
*இ + மணி = இம்மணி.*

''இ'' எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, ''ய'' / ''வ'' எனும் இடையின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தால், வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*இ + யானை = இவ்யானை.*
*இ + ஆடை = இவ்வாடை.*

''இ'' எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, உயிர் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலும், வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*இ + அணில் = இவ்வணில். இ + ஆடு = இவ்வாடு... இ + ஔவை = இவ்வௌவை.*

''இ'' எனும் சுட்டு எழுத்து, செய்யுளில் மாத்திரை அளவில் மிகையாவதற்கு வரும்.

**எடுத்துக்காட்டு:**

*இவ்வியல் –> ஈவியல்.*

### தூணி பதக்கொடு புணர்தல்

***240. பதக்குமுன் வரினே தூணிக் கிளவி***
***முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே.***

***பொருள்:*** ''தூணி'' எனும் சொல்லை அடுத்து ''பதக்கு'' வந்தாலே, முன்பு எழுந்து வடிவெடுத்த வேற்றுமை இயல்பே, இங்கும், ஆகும்.

***விளக்கம்:*** ''தூணி'' எனும் இகர இறுதியைக் கொண்ட சொல்லை

அடுத்து, "பதக்கு" எனும் சொல் வந்தாலே, முன்பு, (236ல்) வேற்றுமைப் பொருளைக் குறிக்கும் புணர்ச்சியில், வல்லின ஒற்றெழுத்து எழுந்து வந்து கூடியதைப்போல், இச்சொற்களுக்கு இடையிலும், பகர ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

தூணி + பதக்கு = தூணிப்பதக்கு.

### நாழி உரியொடு புணர்தல்

241. உரிவரு காலை நாழிக் கிளவி
**இறுதி இகர மெய்யொடுங் கெடுமே**
**டகார மொற்றும் ஆவயி னான.**

**பொருள்:** "நாழி" எனும் சொல்லை அடுத்து "உரி" எனும் சொல் வரும்போது, இறுதியான இகரம், மெய்யுடன் கழியும். அந்த இடத்தில், டகார ஒற்றெழுத்து ஒட்டும்.

**விளக்கம்:** "நாழி" எனும் இகர இறுதியுடைய அளவுச் சொல்லை அடுத்து "உரி" எனும் அளவுச் சொல் புணர வரும்போது, "நாழி" யின் இறுதியான இகரம், தான் கலந்த "ழ்" மெய்யுடன் கழியும். அந்த இடத்தில், டகார ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

நாழி + உரி = நா + ~~ழ்~~ + ~~இ~~ + ட் + உரி = நாடுரி.

ஏனெனில், நாழி + உரி என புணர்ந்தால், "நாழிவரி" என ஆகும். அது, நாழி அளவு வரி எனப் பொருள் தந்து விடும்.

இகரத்தை மட்டும் கழித்து, நாழ் + உரி எனப் புணர்ந்தால், "நாழுரி" என வரும். அது, குற்றத்திற்கு உரியது என்றோ, நாளுக்கு உரியதென்றோ பொருள் தந்து விடும்.

இகரத்தையும் மெய்யையும் கழித்துப் புணர்த்தால், நா + உரி = நாவுரி என வரும். அது, எதிர்நோக்கிய பொருளைத் தந்தாலும், நாயுருவி எனும் பொருள் மயக்கத்தையும் ஏற்படுத்தலாம்.

எனவே, பொருளைத் தெளிவாக்க, உறுதியாக்க, டகார ஒற்று மிகுகின்றது. அதனால், கவனம் மிக, எதிர்நோக்கிய பொருள் பெறப்படும்.

### பனி என்னும் காலப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்

**242. பனியென வரூஉங் கால வேற்றுமைக்(கு)**
**அத்தும் இன்னும் சாரியை ஆகும்.**

**பொருள்:** காலத்தைக் குறிக்கும் "பனி" எனும் இகர இறுதிச் சொல், புணரும் சொல்லால், வேற்றுமைப் பொருளைக் குறிக்கும் போது, "அத்து" அல்லது "இன்" சாரியையாக வரும்.

**எடுத்துக்காட்டு:**

பனி + அத்து + கண்டான் = பனியத்துக் கண்டான்.
பனி + இன் + சென்றான் = பனியிற் சென்றான்.
பனி + அத்து + தந்தான் = பனியத்துத் தந்தான்.
பனி + இன் + படுத்தான் = பனியிற் படுத்தான்.

### வளி என்னும் பூதப் பெயர் வன்கணத்துடன் புணர்தல்

**243. வளியென வரூஉம் பூதக் கிளவியும்**
**அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.**

**பொருள்:** "வளி" எனும் சொல்லும், அந்த இயல்புடன் நிலைப்பது, நல்லது என்பர், அறிஞர்.

**விளக்கம்:** "வளி" எனும் இகர இறுதிச் சொல்லும், புணரும் சொல்லால், வேற்றுமைப் பொருளைக் குறிக்கும்போது, "அத்து" அல்லது "இன்" சாரியையாக வருவது, சிறந்தது என்பர், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

வளி + அத்து + கலந்தான் = வளியத்துக் கலந்தான்.
வளி + இன் + பறந்தான் = வளியிற் பறந்தான்.

### உதி மரப் பெயர்ப் புணர்ச்சியில் மெல்லெழுத்து மிகுதல்

**244. உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.**

**பொருள்:** "உதி" எனும் சொல்லுக்கு, மெல்லின எழுத்து கூடும்.

விளக்கம்: "உதி" எனும் இகர இறுதிச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட, வேற்றுமைப்

பொருளைக் குறிக்கும் சொல், வருமொழியாக வந்தால், அச்சொற்களுக்கு இடையில், மெல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*உதி + கிளை = உதிங்கிளை.*
*உதி + சிலை = உதிஞ்சிலை.*
*உதி + தலை = உதிந்தலை.*
*உதி + பூ = உதிம்பூ.*

### புளி மரப்பெயர் 'அம்' சாரியை பெறுதல்

***245. புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.***

**பொருள்:** ''புளி'' எனும் மரப்பெயர்ச் சொல்லுக்கு, ''அம்'' தான் சாரியையாக வரும்.

**எடுத்துக்காட்டு:**

*புளி + அம் + காய் = புளியங்காய்.*
*புளி + அம் + செதில் = புளியஞ்செதில்.*
*புளி + அம் + துளிர் = புளியந்துளிர்.*
*புளி + அம் + பூ = புளியம்பூ.*

### சுவைப் புளிப்பெயர்ப் புணர்ச்சியில் மெல்லெழுத்து மிகுதல்

***246. ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.***

**பொருள்:** மற்ற புளிப்பெயர்ச் சொல்லுக்கு மெல்லெழுத்து கூடும்.

**விளக்கம்:** மரம் தவிர்த்து, ''புளி'' என்பது புளிப்புச் சுவையைக் குறிக்கும். அது வேற்றுமையில் புணரும்போது, அங்கு, மெல்லின எழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*புளி + கூழ் = புளிங்கூழ்.*
*புளி + சோறு = புளிஞ்சோறு.*
*புளி + தொக்கு = புளிந்தொக்கு.*
*புளி + பாளிதம் = புளிம்பாளிதம்.*

### *சுவைப் புளிப்பெயர்ப் புணர்ச்சியில் வல்லெழுத்து மிகுதல்*

***247. வல்லெழுத்து மிகினு மானம் இல்லை***
***ஒல்வழி யறிதல் வழக்கத் தான.***

***பொருள்:*** பேச்சு வழக்கின்படி, பொருந்துகின்ற இடங்களில், வல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

***விளக்கம்:*** புளிப்புச் சுவையைக் குறிக்கும் சொல், வேற்றுமையில் புணரும்போது, பேச்சு வழக்கின்படி, பொருந்துகின்ற இடங்களில், வல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

***எடுத்துக்காட்டு:***

*புளி + கூழ் = புளிக்கூழ்.*
*புளி + சோறு = புளிச்சோறு.*
*புளி + தொக்கு = புளித்தொக்கு.*
*புளி + பாளிதம் = புளிப்பாளிதம்.*

### *நாட்பெயர் 'ஆன்' சாரியை பெறுதல்*

***248. நாள்முன் தோன்றுந் தொழில்நிலைக் கிளவிக்கு***
***ஆன்இடை வருதல் ஐயம் இன்றே.***

***பொருள்:*** இகரத்தை இறுதியாய்க் கொண்ட நாள் பெயரை அடுத்து வரும் வினைச்சொல்லுக்கு, "ஆன்" இடையில் வருவதில், சந்தேகம் இல்லை.

***விளக்கம்:*** *நாள் பெயர், நட்சத்திரத்தை (நட்சத்திரம் = நள் + சத்திரம் = இரவின் அதிசயம்) வைத்தோ, கிரகங்களை வைத்தோ குறிப்பிடப்படுகின்றது.*

***எடுத்துக்காட்டு:***

*பரணி + ஆன் + கொண்டான் = பரணியாற் கொண்டான்.*
*சுவாதி + ஆன் + பெற்றான் = சுவாதியாற் பெற்றான்.*
*வெள்ளி + ஆன் + செய்தான் = வெள்ளியாற் செய்தான்.*
*சனி + ஆன் + தீர்ந்தான் = சனியாற் தீர்ந்தான்.*

### *திங்கட்பெயர் இக்குச் சாரியை பெறுதல்*

***249. திங்கள் முன்வரின் இக்கே சாரியை.***

***பொருள்:*** *திங்கள் முன் வந்தால் இக்குதான் சாரியை.*

***விளக்கம்:*** *இகரத்தில் முடியும் மாதத்தின் பெயரை அடுத்து வரும் வினைச்சொல்லுக்கு, இடையில், ''இக்கு'' தான் சாரியையாக வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*வைகாசி + இக்கு + கண்டான் = வைகாசிக்குக் கண்டான்.*
*ஆனி + இக்கு + செய்தான் = ஆனிக்குச் செய்தான்.*
*ஆடி + இக்கு + தந்தான் = ஆடிக்குத் தந்தான்.*
*ஆவணி + இக்கு + போனான் = ஆவணிக்குப் போனான்.*

### *ஈகார ஈற்றுப் பெயர் அல்வழியில் புணர்தல்*

***250. ஈகார இறுதி ஆகார இயற்றே.***

***பொருள்:*** *ஈகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் இயல்புடையதே.*

***விளக்கம்:*** *ஈகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும், ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லைப் போல் (222, 204), வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமையின்றி அதாவது அல்வழியில் புணரும்போது, சொற்களுக்கு இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*தீ + கடிது = தீக்கடிது.*
*தீ + சிறிது = தீச்சிறிது.*
*தீ + தீது = தீத்தீது.*
*தீ + பெரிது = தீப்பெரிது.*

### *ஈகார ஈற்றுப் பெயர் இயல்பாய் முடிதல்*

***251. நீஎன் பெயரும் இடக்கர்ப் பெயரும்***
***மீஎன மரீஇய இடம்வரை கிளவியும்***
***ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.***

***பொருள்:*** *''நீ'' எனும் பெயரும், தடுமாறச் செய்யும் பெயரும், ''மீ'' என மருவிய இடத்தை வரையறுக்கும் சொல்லும், வல்லின*

எழுத்து அவ்விடத்தில் வந்தால், இயல்புப் புணர்ச்சியாகும்.

**விளக்கம்:** ''நீ'' எனும் பெயரையும், ஈகாரப் பகாரப் பெயரையும், மீ என்று மருவிய இடத்தை வரையறுக்கும் சொல்லையும் அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், வேற்றுமையின்றி அதாவது அல்வழியில் வந்தால், புணர்ச்சி இயல்பாகும்.

**எடுத்துக்காட்டு:**

*நீ + சிறியன் = நீ சிறியன்.*
*பீ + கொடியது = பீ கொடியது.*
*மீ + பெரிது = மீ பெரிது. (மீ = மேல், வெளி, ஆகாயம், வானம்)*

### மீ – வன்கணம் மிகுந்து முடிதல்

**252. இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்**
**உடனிலை மொழியும் உளவென மொழிப.**

**பொருள்:** இடத்தை வரையறுக்கும் சொல்லை அடுத்து, வல்லின எழுத்து கூடுகின்ற, உடன்நிலைச் சொல்லும் உள்ளன, என்று சொல்லுவர் அறிஞர்.

**விளக்கம்:** இடத்தை வரையறுக்கும் சொல்லான, ''மீ'' யை அடுத்து, சில உடன்நிலைச் சொல் வந்தால், இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*மீ + கோள் = மீக்கோள்.*
*மீ + செவி = மீச்செவி.*
*மீ + தலை = மீத்தலை.*
*மீ + பல் = மீப்பல்.*

### ஈகார ஈற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்

**253. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

**பொருள்:** வேற்றுமை இடத்திலும் அதைப் போன்றதே.

**விளக்கம்:** ஈகார இறுதியைக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே (204) வேற்றுமையிலும் (217) (226),

புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*ஈ + கால் = ஈக்கால்.*
*ஈ + சிறகு = ஈச்சிறகு.*
*ஈ + தலை = ஈத்தலை.*
*ஈ + புறம் = ஈப்புறம்.*

### நீ குறுகி நின் ஆதல்

**254. நீஎன் ஒருபெயர் உருபியல் நிலையும்**
**ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.**

**பொருள்:** "நீ" எனும் ஒரு பெயர், உருபியல் விதிப்படி நிற்கும். அவ்விடத்தில், வல்லின எழுத்து இயல்பாகும்.

**விளக்கம்:** "நீ" எனும் ஒரு பெயர், உருபியல் (180) விதிப்படி நடக்கும். அதாவது, "நீ", "நி" ஆக குறுகும், மற்றும் அங்கு, "ன்" கூடும். "நின்" ஐ அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வேற்றுமைப் பொருளில் வந்தால், புணர்ச்சி இயல்பாகும். வல்லின ஒற்றெழுத்து கூடாது.

**எடுத்துக்காட்டு:**

*நின் + கை = நின்கை.*
*நின் + செவி = நின்செவி.*
*நின் + தலை = நின்தலை.*
*நின் + பல் = நின்பல்.*

### உகர ஈற்றுப் பெயர் அல்வழியிற் புணர்தல்

**255. உகர இறுதி அகர இயற்றே.**

**பொருள்:** உகரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும், அகரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லின் இயல்பு டையதுதான் (204).

**விளக்கம்:** உகரத்தை இறுதியாகக் கொண்டப் பெயர்ச் சொல்லை அடுத்து, வேற்றுமைப் பொருளின்றி, அல்வழியில் "க்" / "ச்" / "த்" / "ப்' எனும் எழுத்தை முதலாகக் கொண்ட சொல், வருமொழியாக வந்தால், அந்த எழுத்தைப் போன்ற ஒற்றெழுத்து, சொற்களுக்கு

இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*அணு + குறிது = அணுக்குறிது.*
*அணு + சிறிது = அணுச்சிறிது.*
*அணு + தீது = அனுத்தீது.*
*அணு + பெரிது = அணுப்பெரிது.*

### உகரச் சுட்டு வல்லெழுத்து மிகுந்து முடிதல்

***256. சுட்டின் முன்னரும் அத்தொழிற் றாகும்.***

**பொருள்:** "உ" எனும் சுட்டெழுத்தை அடுத்தும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், "அ" வின் வினைப்போல் ஆகும். அதாவது, வல்லின ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*உ + கலைஞன் = உக்கலைஞன்.*
*உ + சொல் = உச்சொல்.*
*உ + தொழில் = உத்தொழில்.*
*உ + பண் = உப்பண்.*

### உகரச் சுட்டுடன் மென்கணமும் இடைக்கணமும் புணர்தல்

***257. ஏனவை வரினே மேல்நிலை யியல்பே.***

**பொருள்:** "உ" எனும் சுட்டெழுத்தை அடுத்து, மெல்லின, இடையின, உயிர் எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தாலும், "உ" எனும் சுட்டெழுத்து நீண்டு வந்தாலும், முன்பு கூறிய, அகரச் சுட்டின் இயல்பைப் *(206, 207, 208, 209)* போலவே நடக்கும்.

**விளக்கம்:**

"உ" எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, "ஞ்" / "ந்" / "ம்" எனும் மெல்லின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தால், சேர்ந்த மெல்லின எழுத்தின் ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*உ + ஞானம் = உஞ்ஞானம்.*

*உ + நாள் = உந்நாள்.*

*உ + மலர் = உம்மலர்.*

"உ" எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, "ய" / "வ" எனும் இடையின எழுத்தை, முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலே, வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*உ + யானை = உவ்யானை.*

*உ + வீடு = உவ்வீடு.*

"உ" எனும் சுட்டு எழுத்தை / சொல்லை அடுத்து, உயிர் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தாலும், வகர ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*உ + அணில் = உவ்வணில்.*

*உ + ஆடு = உவ்வாடு.*

*உ + இலை = உவ்விலை.*

*உ + ஈ = உவ்வீ.*

*உ + உரல் = உவ்வுரல்.*

*உ + ஊசி = உவ்வூசி.*

*உ + எறும்பு = உவ்வெறும்பு.*

*உ + ஏணி = உவ்வேணி.*

*உ + ஐவர் = உவ்வைவர்.*

*உ + ஒட்டகம் = உவ்வொட்டகம்.*

*உ + ஓணான் = உவ்வோணான்.*

*உ + ஔவை = உவ்வௌவை.*

"உ" எனும் சுட்டு எழுத்து, செய்யுளில் மாத்திரை அளவில் மிகையாவதற்கு வரும்.

*எடுத்துக்காட்டு:*

*உவ்வயின் –> ஊவயின்.*

### சுட்டுமுதல் உகரம் இயல்பாதல்

***258. சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே.***

***பொருள்:*** சுட்டெழுத்தை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும்

கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், புணர்ச்சி இயல்பாகும். ஒற்றெழுத்து இடையில் கூடாது.

**எடுத்துக்காட்டு:**

*அது + குறிது = அதுகுறிது.*
*இது + சிறிது = இதுசிறிது.*
*உது + தீது = உதுதீது.*
*உது + பெரிது = உதுபெரிது.*

## அன்றும் ஐயும் சுட்டு முதலுடன் செய்யுளில் புணர்தல்

***259. அன்றுவரு காலை ஆவா குதலும்***
***ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்***
***செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப.***

**பொருள்:** சுட்டுமுதல் இறுதியை அடுத்து, ''அன்று'' எனும் சொல் வரும்போது, உகரம் ஆகாரமாவதும், ''ஐ'' எனும் சாரியை வரும்போது, உயிர்மெய்யை தனிமெய்யாக விட்டு ( து – உ = த்) உகரம் கழிதலும், செய்யுள் இடங்களில் உள்ளன, என சொல்லுவர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

*அன்று:*

*அது + அன்று = அதா + அன்று = அதான்று –> அதாஅன்று.*
*இது + அன்று = இதா + அன்று = இதான்று –> இதாஅன்று.*
*உது + அன்று = உதா + அன்று = உதான்று –> உதாஅன்று.*

''அதான்று'' என வந்தால், எச்சொல் எதனுடன் புணர்ந்தன என அறிய முடியாமல், பொருள் குழப்பம் ஏற்படும். எனவே, ''அறியத் தெரிய'', ''அதாஅன்று'' என அகரம் கூடி வந்தது.

கூற வந்த பொருளும், தெளிவுடன், அழகாகின்றது. ''அது + அன்று – அதுவன்று'' என வந்து, ''அது இல்லை'' எனும் பொருளைக் காட்டிலும், ''அதாஅன்று என வந்து, ''அது என்று நினைத்தாயா, அது இல்லை'' என்று பொருண்மை மிகுந்து, செய்யுள் அழகியலுடன், வருகின்றது.

*ஐ:*

*அது + ஐ = அத் + ஐ = அதை.*
*இது + ஐ = இத் + ஐ = இதை.*
*உது + ஐ = உத் + ஐ = உதை.*

பொதுவான (257) விதிப்படி புணர்ந்தால், "அதுவை", இதுவை", "உதுவை" என ஆகி இருக்கும். செய்யுளுக்காக, "அதை", "இதை", "உதை" என்றானது, இன்று, பொது வழக்காய் உள்ளது.

### உகர ஈற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்

**260. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

**பொருள்:** உகர இறுதியைக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே (204) வேற்றுமையிலும் (217) (226) (253), புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

*அணு + காலம் = அணுக்காலம்.*
*அணு + சுழற்சி = அணுச்சுழற்சி.*
*அணு + துகள் = அணுத்துகள்.*
*அணு + பிளவு = அணுப்பிளவு.*

### எரு, செரு பெயர்கள் வேற்றுமையிற் புணர்தல்

**261. எருவுஞ் செருவும் அம்மொடு சிவணித்**
**திரிபிடன் உடைய தெரியுங் காலை**
**அம்மின் மகரஞ் செருவயின் கெடுமே**
**தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை.**

**பொருள்:** ஆராய்ந்து பார்க்கையில், "எரு" எனும் சொல்லும், "செரு" எனும் சொல்லும், வேற்றுமைப் பொருளுடன் புணரும்போது, "அம்" எனும் சாரியையுடன் சேர்ந்து திரியும் இடம் உள்ளது.

"அம்" இன் "ம்", "செரு" வின் இடத்தில் கழியும், வல்லின எழுத்தின் இயல்பான, அதன் ஒற்றெழுத்து கூடும்.

*எடுத்துக்காட்டு:*

*எரு:*

*எரு + அம் + குழி = எருவம் + குழி = எருவங்குழி.*
*எரு + அம் + சாறு = எருவம் + சாறு = எருவஞ்சாறு.*
*எரு + அம் + திறம் = எருவம் + திறம் = எருவந்திறம்.*
*எரு + அம் + புழு = எருவம் + புழு = எருவம்புழு.*

*எரு + குழி = எருக்குழி என வந்தால், எருக்கு + உழி என* பொருள் மாற்றம் கொள்ள வாய்ப்புள்ளது.

*செரு:*

*செரு + அ*ஞ்ஞ் *+ களம் = செருவ + களம் = செருவக்களம்.*
*செரு + அ*ஞ்ஞ் *+ சேனை = செருவ + சேனை = செருவச்சேனை*
*செரு + அ*ஞ்ஞ் *+ தாரை = செருவ + தாரை = செருவத்தாரை.*
*செரு + அ*ஞ்ஞ் *+ பறை = செருவ + பறை = செருவப்பறை.*

*செரு + களம் = செருக்களம் என்றால், செருக்கு + அளம் எனப்* பொருள் படலாம். செரு + பறை = செருப்பறை என்றால், செருப்பு + அறை என பொருள் வரலாம். எனவே, ''அம்'' சாரியை வந்தது.

*ஆனால், ''அம்'' சாரியையிலும், ''ம்'' கழியக் காரணம் என்ன?* ''அம்'' தொடர்ந்து இருந்தால், செரு + அம் + களம் = செருவம் + களம் = செருவங்களம் என வரும். அது, செரு + வன் + களம், ''போர் வலிமைக் களம்'' என வேறொரு பொருள் தந்து விடலாம். நமக்கு, இவ்விடம் வேண்டியதோ, ''போர்க்களம்'' எனும் பொருள்தான். எனவே, ''ம்'' கழிந்தது.

### பூகர உகர ஈற்றுப் பெயர் செய்யுளிற் புணர்தல்

**262. பூகர உகரம் நீடிடன் உடைத்தே**
**உகரம் வருதல் ஆவயி னான.**

**பொருள்:** உகர பூகரம் (பூ) நீளும் இடம் உள்ளது. அந்த இடத்தில், உகரம் கூட வேண்டும்.

*விளக்கம்:* இது, பொதுவாகச் செய்யுளில் நிகழும்.

**எடுத்துக்காட்டு:**

''பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி'' (குறுந்.180) என வரும்.

### ஒடு மரப்பெயர் வன்கணத்துடன் புணர்தல்

**263. ஒடுமரக் கிளவி யுதிமர இயற்றே.**

***பொருள்:*** "ஒடு" எனும் மரப் பெயர்ச்சொல், "உதி" எனும் மரப் பெயர்ச்சொல் வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்ந்த இயல்புடையது (244). மெல்லின ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

***எடுத்துக்காட்டு:***

ஒடு + கிளை = ஒடுங்கிளை.
ஒடு + சிலை = ஒடுஞ்சிலை.
ஒடு + தலை = ஒடுந்தலை.
ஒடு + பூ = ஒடும்பூ.

### சுட்டுமுதல் உகரம் 'அன்' சாரியை பெறுதல்

**264. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்**
**ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை.**

***பொருள்:*** சுட்டு எழுத்தை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், உருபியல் (177) விதிப்படி நடந்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, வல்லின எழுத்தின் இயல்பான, ஒற்றெழுத்து கூடாது.

***விளக்கம்:*** சுட்டு எழுத்தை முதல் எழுத்தாகவும், இறுதி எழுத்தை உகரமாகவும் கொண்ட சொற்கள், 'அது, இது, உது'. இவற்றுடன் "அன்" பொருந்த, உகரம், தான் சேர்ந்த மெய்யான தகரத்தை விட்டு விட்டு, அழிந்து விடும்.

அதாவது, எடுத்துக்காட்டாக,

உது + அன் = உத் + உ + அன் = உதன் என ஆகும்.

அதனுடன், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் புணரும்போது, வல்லின எழுத்தின் இயல்பான, ஒற்றெழுத்து கூடாது.

அதாவது,

உதன் + கிளை = உதன்கிளை என வரும்.

### ஊகார வீறு அல்வழியில் முடிதல்

**265. ஊகார இறுதி ஆகார இயற்றே.**

**பொருள்:** ஊகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் (222) இயல்புடையதே.

**விளக்கம்:** ஊகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும், ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லைப் போல் (222, 204), வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமையின்றி அதாவது அல்வழியில் புணரும்போது, சொற்களுக்கு இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

கொண்மூ = கொள் + ம் + ஊ. (நீரைக்) கொண்டு மூடி மிக தூரத்தில் இருப்பது. மேகம்.

கொண்மூ + கடிது = கொண்மூக்கடிது.
கொண்மூ + சிறிது = கொண்மூச்சிறிது.
கொண்மூ + தீது = கொண்மூத்தீது.
கொண்மூ + பெரிது = கொண்மூப்பெரிது.

### ஊகார வீறு வினைச்சொல்லுடன் புணர்தல்

**266. வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்
நினையுங் காலை அவ்வகை வரையார்.**

**பொருள்:** ஆராய்ந்துப் பார்க்கையில், ஊகாரத்தை இறுதியாய்க் கொண்ட வினை எச்சச் சொல்லும்; முன்னிலைச் சொல்லும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும் போது, வல்லின ஒற்றெழுத்து கூடுவதை விலக்க மாட்டார்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

வினை எச்சச் சொல்:

உண்ணூ + கொண்டான் = உண்ணூக்கொண்டான். (தின்றுக் கொண்டான்)

அண்ணூ + சென்றான் = அண்ணூச்சென்றான். (நெருங்கிச் சென்றான்)

எண்ணூ + தந்தான் = எண்ணூத்தந்தான். (நினைத்துத் தந்தான்)

கண்ணூ + பார்த்தான் = கண்ணூப்பார்த்தான். (கருதிப் பார்த்தான்).

அகரவீற்று வினை எச்சச் சொல்லும் (205), ஆகார ஈற்று வினை எச்சச் சொல்லும் (223), வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து கூடியது. எனவே, ஊகார வீற்று வினை எச்சச் சொல்லுக்கும், ஒற்றெழுத்து கூடுவது, இயல்பே.

முன்னிலைச் சொல்:

உண்ணூ + கந்தா = உண்ணூக்கந்தா.
அண்ணூ + சாந்தா = அண்ணூச்சாந்தா.
அடூ + கண்ணா = அடூக்கண்ணா.
அழூ + காந்தா = அழூக்காந்தா.

ஒற்றெழுத்து இன்றிப் புணராமல், ''உண்ணூ கந்தா'' எனக் கட்டளையாய் (ஏவலாய்) வரும். புணர்ந்து, ஒற்றெழுத்து கூடினால், ''உண்ணூக்கந்தா'' என்பது ''உண்ணுகின்ற கந்தனை'' அழைப்பதாய் (விளியாய்) வரும்.

**ஊகார வீறு வேற்றுமையிற் புணர்தல்**

**267. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.**

**பொருள்:** வேற்றுமை இடத்திலும் அதைப் போன்றதே.

விளக்கம்: ஊகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே (222) வேற்றுமையிலும் (226), புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

**எடுத்துக்காட்டு:**

கொண்மூ = மேகம்.
கொண்மூ + கூட்டம் = கொண்மூக்கூட்டம்.
கொண்மூ + சுழற்சி = கொண்மூச்சுழற்சி.
கொண்மூ + திருப்பம் = கொண்மூத்திருப்பம்.
கொண்மூ + பாய்ச்சல் = கொண்மூப்பாய்ச்சல்.

**உகர எழுத்துப்பேறு தோன்றுதல்**

***268.** **குற்றெழுத் திம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்***
***நிற்றல் வேண்டும் உகரக் கிளவி.***

**பொருள்:** *குற்றெழுத்துக்குப் பின் ஊகார எழுத்தை இறுதியாய் கொண்ட சொல்லையும், ஊகாரத்தை இறுதியாய்க் கொண்ட ஓர் எழுத்துச் சொல்லையும் அடுத்து, "உ" எனும் ஓர் எழுத்துச் சொல், புணரும் சொற்களுக்கு இடையில் வர வேண்டும்.*

***விளக்கம்:*** *நூற்பா 227 ஐக் காண்க. நிலைச்சொல்லைத் தனிப்படுத்தித் தெரிவிக்க (அறியத் தோன்றியவாறு), அங்கு அகரம் வந்தது போல், இங்கும் உகரம் வருகின்றது.*

***எடுத்துக்காட்டு:***

*குற்றெழுத்தின் பின் ஊகார இறுதி:*
*அடூ + உ + களம் = அடூஉக்களம்.*
*உடூ + உ + செலவு = உடூஉச்செலவு.*
*எழூ + உ + தலை = எழூஉத்தலை.*
*அறூ + உ + பனை = அறூஉப்பனை.*

*இடையில் உகரம் வராமல் போனால், அடூ + களம் = அடூக்களம் என ஆகும். அடு + ஊக்களம் எனப் பிரிக்க நேர்ந்து, "சமீப தசைக்களம்" என்றோ, "சமைக்கும் தசைக்களம்" என்றோ பொருள் மாறிக் குழம்பலாம். உகரம் வருவதால், அடூ –> அடு என்பதுதான் நிலைமொழி என்று தனிப்படுத்தித் தெரிவிக்க, அது "போரை"க் குறிப்பது என்றும், அடூஉக்களம் என்பது போர்க்களத்தைக் குறிக்கின்றது என்றும் தெளிவாக உணரலாம்.*

*ஓரெழுத்து ஊகார இறுதி:*

*தூ + உ + குறை = தூஉக்குறை.*
*தூ + உ + செலவு = தூஉச்செலவு.*
*தூ + உ + தரை = தூஉத்தரை.*
*தூ + உ + பந்தல் = தூஉப்பந்தல்.*

*இடையில் உகரம் வராமல் போனால், தூ + குறை = தூக்குறை என வரும். அதை தூக்கு + உறை எனப் பிரிக்க நேர்ந்து, பொருள் மாறி விடலாம். உகரம் வருவதால், 'தூ' என்பதுதான் நிலைமொழி என்று தனிப்படுத்தித் தெரிவிக்க, அது "தூய்மையை"க் குறிப்பது*

என்றும் தூஉக்குறை = தூய்மைக் குறையைக் குறிக்கின்றது என்றும் தெளிவாக உணரலாம்.

### பூ வன்கணத்துடன் புணர்தல்

**269. பூஎன் ஒருபெயர் ஆயியல் பின்றே**
**ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

**பொருள்:** ‘‘பூ’’ எனும் ஊகாரத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச்சொல் மேற்கூறிய இயல்பு இல்லாதது. அதற்கு, உகரம், புணரும் சொற்களுக்கு இடையில் வராது. அவ்விடத்தில், அது, மெல்லின எழுத்து அல்லது வல்லின எழுத்து கூடுவதை உடையது.

**எடுத்துக்காட்டு:**

பூ + கொத்து = பூங்கொத்து / பூக்கொத்து.
பூ + சடை = பூஞ்சடை / பூச்சடை
பூ + தோரணம் = பூந்தோரணம் / பூத்தோரணம்.
பூ + பந்தல் = பூம்பந்தல் / பூப்பந்தல்.

### ஊகார ஈற்றுப் பெயர் சாரியை பெறுதல்

**270. ஊஎன் ஒருபெயர் ஆவொடு சிவணும்.**

**பொருள்:** ‘‘ஊ’’ எனும் பெயர்ச்சொல், ‘‘ஆ’’ எனும் பெயர்ச் சொல்லுடன் பொருந்தும்.

**விளக்கம்:** 232 வது நூற்பாவில், ‘‘ஆ’’, ‘‘மா’’ விற்கு கூறிய னகர ஒற்றெழுத்து, ‘‘ஊ’’ விற்கும் பொருந்தும் போலும். முன்கூறிய உகரமும் (நூற்பா 268), ஒற்றெழுத்தும் (நூற்பா 269) கூடாமல், னகர ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

ஊ + ன் + குறை = ஊன்குறை.

### ஊகார ஈற்றுப் பெயர் ‘அக்கு’ச் சாரியையும் பெறுதல்

**271. அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே**
**தக்கவழி அறிதல் வழக்கத் தான.**

**பொருள்:** *"ஊ" எனும் பெயர்ச்சொல், 'அக்கு' எனும் சாரியையும் பெறும்.*

**எடுத்துக்காட்டு:** *ஊ + அக்கு + குறை =ஊஅக்குறை = ஊவக்குறை.*

### ஆடூஉ, மகடூஉ – 'இன்' சாரியையும் பெறுதல்

***272. ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்***
***இன்னிடை வரினும் மான மில்லை.***

**பொருள்:** *'ஆடூஉ', 'மகடூஉ' ஆகிய இரண்டு பெயர்களுக்கு, 'இன்' எனும் சாரியை இடைச்சொல்லாக வந்தாலும் தவறில்லை. எனவே, 'ஆடூஉ', 'மகடூஉ' ஆகிய இரண்டு பெயர்களும், சாரியை இன்றியும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்.*

**எடுத்துக்காட்டு:**

*இன் சாரியையுடன்:*

*ஆடூஉ + இன் + கால் = ஆடூஉவின்கால்.*
*மகடூஉ + இன் + செவி = மகடூவின்செவி.*
*ஆடூஉ + இன் + தலை = ஆடூஉவின்தலை.*
*மகடூஉ + இன் + பல் = மகடூவின்பல்.*
*சாரியையின்றி:*
*ஆடூஉ + கால் = ஆடூஉக்கால்.*
*மகடூஉ + செவி = மகடூஉச்செவி.*
*ஆடூஉ + தலை = ஆடூஉத்தலை.*
*மகடூஉ + பல் = மகடூஉப்பல்.*

### எகரமும் ஒகரமும் ஈறாதல்

***273. எகர ஒகரம் பெயர்க்கீ றாகா***
***முன்னிலை மொழிய என்மனார் புலவர்***
***தேற்றமுஞ் சிறப்பும் அல்வழி யான.***

**பொருள்:** *எகரமும் ஒகரமும் பெயர்ச் சொல்லுக்கு இறுதியாக வராது. தேர்வுப் பொருளிலோ, உயர்வுப் பொருளிலோ இல்லாதப் போது, அவை, முன்னிலைச் சொல்லில் வரும் என்னும்*

கருத்துடையவர்கள், அறிஞர்கள். ஏகாரம், தேர்வுப்பொருளிலும், ஓகாரம் சிறப்புப் பொருளிலும் வரும்.

**எடுத்துக்காட்டு:** ‘கந்தெ’. ‘கரியெ’, ‘கந்தொ’, ‘கரியொ’ என முன்னிலையில் வரும்.

கந்தன் என்பவனை முன்னிலையில், “கந்த, கந்தா, கந்தி, கந்தீ, கந்து, கந்தூ, கந்தே, கந்தை, கந்தோ, கந்தௌ” என்றும் கரியன் என்பவனை முன்னிலையில், “கரிய, கரியா, கரிஇ, கரீ, கரு, கரூ, கரியே, கரியை, கரியோ, கரியௌ” என்றும், பேச்சு வழக்கில் பெயர்ச்சொல்லுடன் எல்லா உயிர் எழுத்துகளும் இறுதியில் வருவதால், எகரமும் ஒகரமும், முன்னிலைப் பெயர்ச் சொல்லில் இறுதியாய் வருவது இயல்பே.

### தேற்ற எகரமும் சிறப்பின் ஒகரமும் வன்கணத்தில் இயல்பாதல்

**274. தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா.**

**பொருள்:** பேச்சு வழக்கில், தேர்வுப் பொருளில் எகரமும், உயர்வுப் பொருளில் ஒகரமும், முன்னிலை இயல்பில் வந்து, அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், வல்லின ஒற்றெழுத்து கூடாது.

**எடுத்துக்காட்டு:**

கந்தெ + கால் = கந்தெ கால்.
கந்தொ + கால் = கந்தொ கால்.
கரியெ + தலை = கரியெ தலை.
கரியொ + தலை = கரியொ தலை.

### ஏகார ஈற்றுப் பெயர் அல்வழியில் புணர்தல்

**275. ஏகார இறுதி ஊகார இயற்றே.**

**பொருள்:** ஏகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், ஊகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல்லின் இயல்புடையதே.

**விளக்கம்:** ஏகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும், ஊகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லைப் போல்

*(265)*, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமையின்றி அதாவது அல்வழியில் புணரும்போது, சொற் களுக்கு இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*சே + கடிது = சேக்கடிது. (காளைக்கடிது)*
*தே + சிறிது = தேச்சிறிது. (தலவன் / தெய்வம் சிறிது)*
*சே + தீது = சேத்தீது. (காளைத்தீது)*
*பே + பெரிது = பேப்பெரிது. (மேகம் பெரிது)*

### ஏகார ஈறு வன்கணத்துடன் புணர்தல்

***276. மாறுகொள் எச்சமும் வினாவும் எண்ணும்***
***கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்.***

***பொருள்:*** வேறு பொருள் கொண்டு மறுக்கும், ஏகார ஈற்றுப் பெயர் எச்சமும், ஏகார ஈற்று வினாச்சொல்லும், எண் அல்லது எல்லையைக் குறிக்கும் சொல்லும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் இயல்பாய்ப் புணரும். வல்லின ஒற்றெழுத்து இடையில் கூடாது.

***எடுத்துக்காட்டு:***

*யானே + கள்வன் = யானே கள்வன்! (கோவலன் இல்லை)*
*நீயே + சொன்னாய் = நீயே சொன்னாய்?*
*ஒன்றே + தந்தேன் = ஒன்றே தந்தேன்.*
*காணியே + போக்கினேன் = காணியே போக்கினேன்.*

### ஏகார வீறு வேற்றுமையிற் புணர்தல்

***277. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.***

***பொருள்:*** வேற்றுமை இடத்திலும் அதைப் போன்றதே.

***விளக்கம்:*** ஏகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், அல்வழியில் போலவே *(265, 275)* வேற்றுமையிலும் *(267)*, புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும்.

எடுத்துக்காட்டு:

தே + குறை = தேக்குறை. (தெய்வக்குறை)
தே + சிலை = தேச்சிலை.
தே + தலை = தேத்தலை.
தே + பல் = தேப்பல்.

**ஏகார ஈறு எகர எழுத்துப்பேறு பெறுதல்**

**278. ஏயென் இறுதிக்கு எகரம் வருமே.**

**பொருள்:** "ஏ" என முடியும் சொல்லை அடுத்து எகரம் வரும்.

**விளக்கம்:** நூற்பா 227 – ல், ஆகார ஈறு அகரம் பெற்றதைப் போல், நூற்பா 268 – ல், ஊகார ஈறு உகரம் பெற்றதைப் போல், இந்நூற்பாவில், ஏகார ஈறும் எகரம் பெறுகின்றது.

காரணம், நிலைச்சொல்லைத் தனிப்படுத்தித் தெரிவிக்கத்தான் (அறியத் தோன்றியவாறு).

**எடுத்துக்காட்டு:**

ஏகாரம் சொல்லாய்:

'ஏ' எனும் எழுத்தே சொல்லாய் வந்தால், 'ஏ' வை அடுத்து, 'எ' வரும்.

ஏஎ + கூர்மை = ஏஎக்கூர்மை. (அம்பின் கூர்மை)
ஏஎ + செறிவு = ஏஎச்செறிவு. (பெருக்கத்தின் செழுமை)
ஏஎ + தொடர் = ஏஎத்தொடர். (அடுக்குத்தொடர்)
ஏஎ + பணி = ஏஎப்பணி. (எய்யும் தொழில்)

ஏகார இறுதி பிற ஓரெழுத்து ஒருமொழியில்:

தே + குறை = தேஎக்குறை. (தே + குறை = தேக்குறை என வந்து, தேக்கு + உறை எனப் பிரிந்து, தேக்கு மரத்தாலான உறை என வேறு பொருளைத் தந்து விடலாம். எகரம் வருதலால், அது தெய்வக்குறை என்பது அறியத் தோன்றும்.)

தே + சிலை = தேஎச்சிலை.
தே + தலை = தேஎத்தலை.
தே + பல் = தேஎப்பல்.

**சே என்னும் மரப்பெயர் வன்கணத்தோடு புணர்தல்**

**279. சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே.**

**பொருள்:** 'சே' எனும் மரப் பெயர்ச்சொல், 'ஒடு' எனும் மரப் பெயர்ச்சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்ந்த இயல்புடையது (263). மெல்லின ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

சே + கிளை = சேங்கிளை.
சே + சிலை = சேஞ்சிலை.
சே + தோல் = சேந்தோல்.
சே + பூ = சேம்பூ.

**சே பெற்றம் 'இன்' சாரியை பெறுதல்**

**280. பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்.**

**பொருள்:** 'சே' என்பது காளையைக் குறிக்கும் இடத்தில், தெளிவு பெற, 'இன்' சாரியை வர வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

சே + இன் + கால் = சேவின்கால்.
சே + இன் + சிலை = சேவின்சிலை.
சே + இன் + தோல் = சேவின்தோல்.
சே + இன் + பல் = சேவின்பல்.

'சேயின்கால்' என்றால், பொருள் மாறி விடும்.

**ஐகார வீற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்**

**281. ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்**
**வேற்றுமை ஆயின் வல்லெழுத்து மிகுமே.**

**பொருள்:** ஐகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல் நிலைமொழியாக வந்து, அதை அடுத்து வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல் வந்தால்,

*வல்லின ஒற்றெழுத்து கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*யானை + கால் = யானைக்கால்.*
*யானை + செவி = யானைச்செவி.*
*யானை + தலை = யானைத்தலை.*
*யானை + பாகன் = யானைப்பாகன்.*

***சுட்டுமுதல் வன்கணத்துடன் புணர்தல்***

***282. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்.***

***பொருள்:*** *சுட்டு எழுத்தை முதல் எழுத்தாகவும், ஐகாரத்தை இறுதி எழுத்தாகவும் கொண்ட பெயர்ச்சொல், உருபியலில் (178–ல்) கூறிய புணர்ச்சி விதிப்படி நடக்கும். அதாவது, ஐகாரம் கழிந்து அல்லது நின்று, வற்றுப் பெற்று, வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல்லுடன் புணரும்போது, வல்லின ஒற்றெழுத்தை இடையில் பெறும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஐ நிற்றல்:*

*அவை + வற்று + கோடு = அவையற்றுக்கோடு.*
*இவை + வற்று + செவி = இவையற்றுச்செவி.*
*உவை + வற்று + தலை = உவையற்றுத்தலை.*

*ஐ கழிதல்:*

*அவை + வற்று + கோடு = அவற்றுக்கோடு.*
*இவை + வற்று + செவி = இவற்றுச்செவி.*
*உவை + வற்று + தலை = உவற்றுத்தலை.*

***விசை, ஞெமை, நமை – மரப்பெயர்கள் வன்கணத்துடன் புணர்தல்***

***283. விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்***
***அவைமுப் பெயருஞ் சேமர இயல.***

***பொருள்:*** *"விசை" எனும் மரப்பெயர்ச் சொல்லும், "ஞெமை", "நமை" ஆகிய மூன்று பெயர்ச் சொற்களும் "சே" மரப்பெயர்ச் சொல்லின் (279) இயல்பைக் கொண்டுள்ளன. அதாவது, இப்பெயர்ச் சொற்கள், வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக்*

கொண்ட சொல்லுடன் புணரும்போது, மெல்லின ஒற்றெழுத்தை இடையில் பெறும்.

**எடுத்துக்காட்டு:**

*விசை + கிளை = விசைங்கிளை.*
*ஞெமை + செதில் = ஞெமைஞ்செதில்.*
*நமை + தோல் = நமைந்தோல்.*
*விசை + பூ = விசைம்பூ.*

**பனை, அரை, ஆவிரை பெயர்கள் வன்கணத்துடன் புணர்தல்**

**284. பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்**
**நினையுங் காலை அம்மொடு சிவணும்**
**ஐயென் இறுதி யரைவரைந்து கெடுமே**
**மெயவண் ஒழிய என்மனார் புலவர்.**

**பொருள்:** ஆராய்ந்துப் பார்த்தால், ''பனை'', ''அரை'', ''ஆவிரை'' ஆகியச் சொற்கள் 'அம்' எனும் சாரியையுடன் சேரும்.

''அரை'' எனும் சொல்லைத் தவிர்த்து, மற்ற இரண்டுச் சொற்களிலும், தான் சேர்ந்த மெய் எழுத்தை விட்டு விட்டு, ''ஐ'' எனும் இறுதி எழுத்து, கழிந்து விடும்.

**விளக்கம்:** பொதுவாக மரப்பெயர்ச் சொற்கள், வல்லின எழுத்தை முதல் எழுத்தாய்க் கொண்டுள்ள சொல்லுடன் புணரும்போது, மெல்லின எழுத்தை இடையில் பெறுகின்றன. அதன்படி, பனை + கிளை = பனைங்கிளை என்றும், ஆவிரை + கிளை = ஆவிரைங்கிளை என்றும் வரும்.

இத்தொடர்கள், இயல்பான ஓட்டம் இன்றி, சொல்வதற்குக் கடினமாய் உள்ளன. எனவே, இச்சொற்களில் உள்ள, ''ஐ'' முதலில் தவிர்க்கப்படுகின்றன.

மேலும், ''ஐ'' நீக்கப்பட்டப் பின்பு, பன் + கிளை, ஆவிர் +கிளை எனப் புணர்த்தினால், 'பங்கிளை' என்றும் 'ஆவிர்ங்கிளை' என்றும் வரும். 'பங்கிளை', பொருள் குழப்பத்தையும், 'ஆவிர்ங்கிளை', சொல்வதற்கு மேலும் கடினத்தையும் உருவாக்குவதால், அம் எனும் சாரியை, புணரும் சொற்களுக்கு இடையில் வருவிக்கப்படுகின்றது.

எடுத்துக்காட்டு:

*பன் + ஐ + அம் + கிளை = பனங்கிளை.*

*அரை + அம் + சாறு = அரையஞ்சாறு.*
*ஆவிர் + ஐ + அம் + தோல் = ஆவிரந்தோல்.*
*பன் + ஐ + அம் + பூ = பனம்பூ.*

### பனையுடன் 'அட்டு'ப் புணர்தல்

**285. பனையின் முன்னர் அட்டுவரு காலை**
**நிலையின் றாகும் ஐயென் உயிரே**
**ஆகாரம் வருதல் ஆவயி னான.**

**பொருள்:** 'பனை' எனும் சொல்லை அடுத்து 'அட்டு' எனும் சொல் வரும்போது, 'ஐ' எனும் உயிரெழுத்து நிற்காமல் போகும். அவ்விடத்தில், ஆகாரம் வரும்.

**எடுத்துக்காட்டு:**

*பன் + ஐ + ஆ + அட்டு = பனா + அட்டு = பனாஅட்டு = பனாட்டு. பனை வெல்லம்.*

### பனையுடன் கொடி புணர்தல்

**286. கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக்**
**கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி.**

**பொருள்:** 'பனை' எனும் சொல்லை அடுத்து 'கொடி' எனும் சொல் வந்தால், ''ஐ'' அங்கு நிற்கும், நீக்கம் இன்றி. வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**விளக்கம்:** இங்கு கொடி என்பது பனை மரத்தின் பகுதியோ தன்மையோ அல்ல. பனைமரத்தின் மீது ஏறிப்படரும் வேறொரு தாவரத்தைக் குறிப்பது. எனவேதான், ''பனை'' யில் 'ஐ' தொடர்ந்து நிற்கின்றது, மெல்லின ஒற்றெழுத்தும் வராமல், வல்லின ஒற்றெழுத்து வருகின்றது.

**எடுத்துக்காட்டு:**

*பனை + கொடி = பனைக்கொடி.*

### திங்கட் பெயரும் நாட்பெயரும் முடியுமாறு

**287. திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன.**

**பொருள்:** மாதமும் நாளும் முன்பு கூறியது போன்றது.

**விளக்கம்:** இகர ஈற்றுத் திங்கள், ‘இக்கு’ (249) எனும் சாரியை பெற்றது. இகர ஈற்று நாள், ‘ஆன்’ (248) எனும் சாரியை பெற்றது.

சித்திரை, கார்த்திகை, தை ஆகிய மாதங்கள், ‘ஐ’ யைப் பெயரின் இறுதியில் கொண்டுள்ளன. எனவே, இம்மாதங்களும், ‘இக்கு’ எனும் சாரியை பெறும்.

கிருத்திகை, திருவாதிரை, கேட்டை, சித்திரை ஆகிய நட்சத்திரப் பெயர்களைக் கொண்ட நாட்கள், ‘ஐ’ யைப் பெயரின் இறுதியில் கொண்டுள்ளன. எனவே, இந்நாட்களும், ‘ஆன்’ எனும் சாரியை பெறும்.

**எடுத்துக்காட்டு:**

சித்திரை + இக்கு + கொண்டான் = சித்திரைக்குக் கொண்டான்.
கிருத்திகை + ஆன் + சென்றான் = கிருத்திகையாற் சென்றான்.

### மழை வன்கணத்துடன் புணர்தல்

**288. மழையென் கிளவி வளியியல் நிலையும்.**

**பொருள்:** ‘‘மழை’’ எனும் ஐகாரத்தை இறுதியாக உள்ள சொல், ‘‘வளி’’ எனும் சொல்லின் இயல்பில் (243) நிற்கும், அதாவது, ‘அத்து’ அல்லது ‘இன்’ சாரியை பெறும்.

**எடுத்துக்காட்டு:**

மழை + அத்து + கொண்டான் = மழையத்துக் கொண்டான்.
மழை + இன் + கொண்டான் = மழையிற் கொண்டான்.

### வேட்கையுடன் அவா செய்யுளில் புணர்தல்

**289. செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகார மாதல் வேண்டும்.**

**பொருள்:** செய்யுளில், ‘‘வேட்கை’’ எனும் ஐகார இறுதிச் சொல்லை அடுத்து, ‘‘அவா’’ எனும் சொல் வந்தால், ‘‘வேட்கை’’ யின் ‘ஐ’ எனும் இறுதி எழுத்து, தான் சேர்ந்த, ‘க்‘ எனும்

மெய்யெழுத்துடன், கழிய வேண்டும் என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்கள். அவ்விடத்தில் உள்ள டகார ஒற்றெழுத்தும், ணகார ஒற்றெழுத்தாக மாற வேண்டும் என்பர்.

***விளக்கம்:*** *இல்லையெனில், "வேட்கை + அவா = வேட்கையவா" என வரும். இது வேட்கையையே அழைப்பது போன்ற பொருளில் வருகின்றது. எனவே, இறுதி 'ஐ' யை நீக்கி, புணர்த்தினால், "வேட்க் + அவா = வேட்கவா" என வரும். இதுவும் அழைப்புப் பொருளில் வருகின்றது. 'கை' யையும் நீக்கி, "வேட் + அவா = வேடவா" என, முன்னிலையாகவோ, அழைப்பாகவோ பொருள் தந்து விடும். எனவே, டகரத்தின் இணை எழுத்தான ணகரம் உள்வருகின்றது.*

*புணர்ச்சியில் நேரும் பொருள் குழப்பங்களைத் தீர்க்க, பொதுவாக, நிலைமொழியிலேயே மாற்றங்கள் நிகழ்கின்றன, நிகழ்த்தப்படுகின்றன.*

*எடுத்துக்காட்டு:*

*வேட்கை + அவா –> வேட் + ண் + அவா = வேணவா.*

## ஓகார இறுதி அல்வழியிற் புனர்தல்

***290. ஓகார இறுதி ஏகார இயற்றே.***

***பொருள்:*** *ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், ஏகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல்லின் இயல் புடையதே.*

***விளக்கம்:*** *ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும், ஏகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லைப் போல் (275), வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமையின்றி அதாவது அல்வழியில் புணரும்போது, சொற் களுக்கு இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஓ + குறிது = ஓக்குறிது. (ஓ = தங்கும் இடம்)*
***கோ + சிறிது = கோச்சிறிது. (கோ = காளை மாடு)***
***சோ + பெரிது = சோப்பெரிது. (சோ = அரண்)***
***நோ + தீது = நோத்தீது. (நோ = பிணி, வலி)***

**ஓகார இடைச்சொல் வன்கணத்துடன் புணர்தல்**

***291. மாறுகொள் எச்சமும் வினாவும் ஐயமும்***
***கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.***

***பொருள்:*** *வேறு பொருள் கொண்டு மறுக்கும் ஓகார ஈற்றுப் பெயர் எச்சமும், ஓகார ஈற்று வினாச்சொல்லும், ஓகார ஈற்று ஐயச் சொல்லும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் இயல்பாய்ப் புணரும். வல்லின ஒற்றெழுத்து இடையில் கூடாது.*

***எடுத்துக்காட்டு:***

*கோவலனோ + கள்வன் = கோவலனோ கள்வன்!*
*நீயோ + சொன்னாய் = நீயோ சொன்னாய்?*
*ஒன்றோ + இரண்டோ + தந்தேன் = ஒன்றோயிரண்டோ தந்தேன்.*
*அவனோ + இவனோ காணேன் = அவனோயிவனோ காணேன்.*

**ஒழியிசை ஓகாரம் இயல்பாய் முடிதல்**

***292. ஒழிந்ததன் நிலையும் ஒழிந்தவற் றியற்றே.***

***பொருள்:*** *ஒழியிசையில் (ஓகாரத்தில்) முடியும் சொற்களின் இயல்பும், ஏற்கனவே (மேலே) கூறியனவற்றின் இயல்பே.*

*ஒழியிசை = ஓங்காரம் நின்ற இசை, நிலைத்த இசை.*

***எடுத்துக்காட்டு:***

*கொளலோ + கொண்டான் = கொளலோ கொண்டான்.*
*சொலலோ + சொன்னான் = சொலலோ சொன்னான்.*
*தரவோ + தந்தான் = தரவோ தந்தான்.*
*உறவோ + பெற்றான் = உறவோ பெற்றான்.*

**ஒழியிசை ஓகார வீற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்**

***293. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே***
***ஒகரம் வருதல் ஆவயி னான.***

***பொருள்:*** *வேற்றுமை இடத்திலும் அல்வழியைப் போன்றதே. அவ்விடத்தில், ஒகரம் கூடும்.*

*விளக்கம்: ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால்,*

அல்வழியில் போலவே (290) வேற்றுமையிலும் (277), புணர்ச்சி திரிந்து ஏற்படும். ஒற்றெழுத்து மிகும். அவ்விடத்தில், ஒகரமும் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

ஓ + கட்டை = ஓஒக்கட்டை.
சோ + சுவர் = சோஒச்சுவர்.
நோ + திறம் = நோஒத்திறம்.
கோ + பெருமை = கோஒப்பெருமை.

## கோ இல்லொடு புனர்தல்

**294. இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும்.**

**பொருள்:** ஒகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், ''கோ'', ''இல்'' எனும் சொல்லுடன் புணர்ந்தால், ஒகரம் கூடாமல், இயல்பாய்ச் சேரும்.

**எடுத்துக்காட்டு:**

கோ + இல் = கோயில்.

## கோ – ஒன் சாரியை பெற்றுப் புணர்தல்

**295. உருபியல் நிலையும் மொழியுமா ருளவே**
**ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.**

**பொருள்:** உருபியல் விதிப்படி நிகழும், ஒகாரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லும் உள்ளது. அவ்விடத்தில், வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல், இயல்பாய்ச் சேரும்.

**விளக்கம்:** நூற்பா 181–ன் படி, ''கோ'' எனும் சொல்லுக்கு, 'ஒன்' னே சாரியையாய் வரும்.

**எடுத்துக்காட்டு:**

கோ + ஒன் + கை = கோஒன்கை.
கோ + ஒன் + சிலை = கோஒன்சிலை.
கோ + ஒன் + தலை = கோஒன்தலை.
கோ + ஒன் + பார்வை = கோஒன்பார்வை.

***ஔகார வீற்றுப் பெயர் இருவழியிலும் புணர்தல்***

***296. ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்***
***அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்***
***வல்லெழுத்து மிகுதல் வரைநிலை யின்றே***
***அவ்விரு வீற்றும் உகரம் வருதல்***
***செவ்வி தென்ப சிறந்திசி னோரே.***

***பொருள்:*** ஔகாரத்தை இறுதியாகக் கொண்ட நிலைமொழிப் பெயர்ச்சொல்லை அடுத்து, அல்வழியிலும், வேற்றுமை இடத்திலும், வல்லின எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வந்தால், வல்லின ஒற்றெழுத்து கூடுவதற்கு தடையில்லை; அந்த இரண்டு இறுதியிலும், உகரம் வருவது நல்லது என்பர், சிறந்த அறிஞர்கள்.

***எடுத்துக்காட்டு:***

*கௌ + குறிது = கௌஉக்குறிது. (கௌ = எள்) (அல்வழி)*

*கௌ + குறுமை = கௌஉக்குறுமை. (வேற்றுமை)*

*சௌ + சிறிது = சௌஉச்சிறிது. (சௌ = சிறுமி, சுறுசுறுப்பானவள்) (அல்வழி)*

*சௌ + சிறுமை = சௌஉச்சிறுமை. (வேற்றுமை)*

*கௌ + தீது = கௌஉத்தீது. (அல்வழி)*

*கௌ + தீமை = கௌஉத்தீமை. (வேற்றுமை)*

*நௌ + பெரிது = நௌஉப்பெரிது. (நௌ = மரக்கலம்) (அல்வழி)*

*நௌ + பெருமை = நௌஉப்பெருமை. (வேற்றுமை)*

# 8. புள்ளி மயங்கியல்

*புள்ளி மயங்கியல் = புள்ளி + மயங்கு + இயல் = ஒற்றெழுத்துகள் கலக்கும் இயல்பு. நிலைமொழியின் இறுதியில் இருக்கும் மெய் எழுத்துகள், வருமொழியின் முதல் எழுத்துடன் புணரும் முறைகள்.*

**ஞகார ஈறு இருவழியிலும் புணர்தல்**

***297. ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்***
***அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்***
***வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே***
***உகரம் வருதல் ஆவயி னான.***

*பொருள்: ஞகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப் பெயரை அடுத்து, அல்வழியிலோ, வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்.*

***எடுத்துக்காட்டு:*** *உரிஞ் = உறுஞ்சுதல்*

*அல்வழியில்:*

*உரிஞ் + கடிது = உரிஞ் + உ + க் + கடிது = உரிஞுக்கடிது.*
*உரிஞ் + சிறிது = உரிஞ் + உ + ச் + சிறிது= உரிஞுச்சிறிது.*
*உரிஞ் + தீது = உரிஞ் + உ + த் + தீது = உரிஞுத்தீது.*
*உரிஞ் + பெரிது = உரிஞ் + உ + ப் + பெரிது = உரிஞுப்பெரிது.*

*வேற்றுமைப்பொருளில்:*

*உரிஞ் + கடுமை = உரிஞ் + உ + க் + கடுமை = உரிஞுக்கடுமை.*
*உரிஞ் + சிறுமை = உரிஞ் + உ + ச் + சிறுமை = உரிஞுச்சிறுமை.*
*உரிஞ் + தீமை = உரிஞ் + உ + த் + தீமை = உரிஞுத்தீமை.*

*உரிஞ் + பெருமை = உரிஞ் + உ + ப் + பெருமை = உரிஞுப்பெருமை.*

### ஞகார ஈறு மென்கணத்தோடும் இடைகணத்தோடும் புணர்தல்

***298. ஞநமவ இயையினும் உகர நிலையும்.***

***பொருள்:*** *“ஞ”, “ந”, “ம”, “வ” ஆகிய மெல்லினம் மற்றும் இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தாலும், உகரம் வரும்.*

***விளக்கம்:*** *ஞகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப்பெயரை அடுத்து, அல்வழியிலோ, வேற்றுமைப் பொருளிலோ, “ஞ்”, “ந்”, “ம்“, “வ்” ஆகிய மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.*

***எடுத்துக்காட்டு:***

*ஞாற்சி = தொங்குதல். நீட்சி = நீட்டம். மாட்சி = மகிமை.*

*அல்வழியில் (தன்மைப்பொருளில்):*

*உரிஞ் + ஞான்றது = உரிஞ் + உ + ஞான்றது = உரிஞு ஞான்றது.*
*உரிஞ் + நீண்டது = உரிஞ் + உ + நீண்டது = உரிஞு நீண்டது.*
*உரிஞ் + மாண்டது = உரிஞ் + உ + மாண்டது = உரிஞு மாண்டது.*
*உரிஞ் + வலிது = உரிஞ் + உ + வலிது = உரிஞு வலிது.*

*வேற்றுமைப்பொருளில்:*

*உரிஞ் + ஞாற்சி = உரிஞ் + உ + ஞாற்சி = உரிஞு ஞாற்சி.*
*உரிஞ் + நீட்சி = உரிஞ் + உ + நீட்சி = உரிஞு நீட்சி.*
*உரிஞ் + மாட்சி = உரிஞ் + உ + மாட்சி = உரிஞு மாட்சி.*
*உரிஞ் + வலிமை = உரிஞ் + உ + வலிமை = உரிஞு வலிமை.*

### நகர இறுதியும் உகரச் சாரியை பெறுதல்

***299. நகர இறுதியும் அதனோ ரற்றே.***

***பொருள்:*** *நகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப் பெயரும், அல்வழியில், ஞகரத்தைப் போன்றதே. (அடுத்த நூற்பா,*

*வேற்றுமைப் பொருளைப் பற்றிக் கூறுகின்றது)*

***விளக்கம்:*** *நகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப் பெயரை அடுத்து, அல்வழியில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.*

***எடுத்துக்காட்டு:***

*அல்வழியில் (தன்மைப்பொருளில்):*

*பொருந் + கடிது = பொருந் + உ + க் + கடிது = பொருநுக்கடிது.*
*பொருந் + சிறிது = பொருந் + உ + ச் + சிறிது = பொருநுச்சிறிது.*
*பொருந் + தீது = பொருந் + உ + த் + தீது = பொருநுத்தீது.*
*பொருந் + பெரிது = பொருந் + உ + ப் + பெரிது = பொருநுப்பெரிது.*
*பொருந் + ஞான்றது = பொருந் + உ + ஞான்றது = பொருநு ஞான்றது.*
*பொருந் + நீண்டது = பொருந் + உ + நீண்டது = பொருநு நீண்டது.*
*பொருந் + மாண்டது = பொருந் + உ + மாண்டது = பொருநு மாண்டது.*
*பொருந் + வலிது = பொருந் + உ + வலிது = பொருநு வலிது.*

***நகரவிறுதி வேற்றுமையில் உக்கெட அகரம் பெறுதல்***

***300. வேற்றுமைக்கு உக்கெட அகர நிலையும்.***

***பொருள்:*** *வேற்றுமைப் பொருளுக்கு உகரம் கழிய, அகரம் நிற்கும்.*

***விளக்கம்:*** *நகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப் பெயரை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், உகரம் போகும், அகரம் வரும், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் போகும், அகரம் வரும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.*

**எடுத்துக்காட்டு:**

*பொருந் + கடுமை = பொருந் + அ + க் + கடுமை = பொருநக் கடுமை.*

*பொருந் + சிறுமை = பொருந் + அ + ச் + சிறுமை = பொருநச் சிறுமை.*

*பொருந் + தீமை = பொருந் + அ + த் + தீமை = பொருநத்தீமை.*

*பொருந் + பெருமை = பொருந் + அ + ப் + பெருமை = பொருநப்பெருமை.*

*பொருந் + ஞாற்சி = பொருந் + அ + ஞாற்சி = பொருந ஞாற்சி.*

*பொருந் + நீட்சி = பொருந் + அ + நீட்சி = பொருந நீட்சி.*

*பொருந் + மாட்சி = பொருந் + அ + மாட்சி = பொருந மாட்சி.*

*பொருந் + வலிமை = பொருந் + அ + வலிமை = பொருந வலிமை.*

### நகர விறுதி கெட்டு மென்கணம் மிகுதல்

***301.* வெரிந்என் இறுதி முழுதுங் கெடுவழி**
**வருமிடன் உடைத்தே மெல்லெழுத் தியற்கை.**

**பொருள்:** "வெரிந்" எனும் சொல்லின் இறுதி எழுத்து, மொத்தமாக கழிந்து, மெல்லின எழுத்து வருகின்ற இடமும் உள்ளது.

**விளக்கம்:** "வெரிந்" எனும் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சில சொற்கள் வந்தால், "வெரிந்" எனும் சொல்லின் இறுதி எழுத்தான, "ந்", மொத்தமாக நீங்க, அவ்விடத்தில், இணையான மெல்லின ஒற்றெழுத்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

*வெரிந் = முதுகு.*
*வெரிந் + கட்டி = வெரிந் + ங் + கட்டி = வெரிங்கட்டி.*
*வெரிந் + சிறுமை = வெரிந் + ஞ் + சிறுமை = வெரிஞ்சிறுமை.*
*வெரிந் + தொய்வு = வெரிந் + ந் + தொய்வு = வெரிந்தொய்வு.*
*வெரிந் + பட்டை = வெரிந் + ம் + பட்டை = வெரிம்பட்டை.*

### நகர விறுதி கெட்டு வன்கணம் மிகுதல்

***302.* ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

***பொருள்:*** அந்த இடத்தில், வல்லின எழுத்து கூடுவதும் உள்ளது.

***விளக்கம்:*** ''வெரிந்'' எனும் சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சில சொற்கள் வந்தால், ''வெரிந்'' எனும் சொல்லின் இறுதி எழுத்தான, ''ந்'', மொத்தமாக நீங்க, அவ்விடத்தில், வல்லின ஒற்றெழுத்தும் வரும்.

***எடுத்துக்காட்டு:***

*வெரிந் + கட்டி = வெரிந் + க் + கட்டி = வெரிக்கட்டி.*
*வெரிந் + சிறுமை = வெரிந் + ச் + சிறுமை = வெரிச்சிறுமை.*
*வெரிந் + தொய்வு = வெரிந் + த் + தொய்வு = வெரித்தொய்வு.*
*வெரிந் + பட்டை = வெரிந் + ப் + பட்டை = வெரிப்பட்டை.*

**ணகார வீற்றுப் பெயர் வேற்றுமையிற் புணர்தல்**

***303. ணகார இறுதி வல்லெழுத் தியையின்***
***டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.***

***பொருள்:*** ணகர ஒற்றெழுத்து இறுதியாய் வரும் நிலைமொழிச் சொல்லை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த ''ண்'', ''ட்'' ஆக மாறும்.

***எடுத்துக்காட்டு:***

*மண்ட் + குடம் = மட்குடம்.*
*மண்ட் + சாடி = மட்சாடி.*
*மண்ட் + தீமை = மட்தீமை.*
*மண்ட் + பெருமை = மட்பெருமை.*

**ஆண், பெண், இயல்பாய் முடிதல்**

***304. ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.***

***பொருள்:*** ''ஆண்'', ''பெண்'' எனும் சொற்கள், அஃறிணையைக்குறித்தால், புணர்ச்சி இயல்பாகும்.

***விளக்கம்:*** ''ஆண்'', ''பெண்'' எனும் ணகர ஒற்றெழுத்தை இறுதி யாகக் கொண்ட சொற்களை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், அஃறிணையானால், மேற்கூறிய திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.

எடுத்துக்காட்டு:

ஆண் + கன்று = ஆண்கன்று.
பெண் + சிட்டு = பெண்சிட்டு.
ஆண் + தாவரம் = ஆண்தாவரம்.
பெண் + புறா = பெண்புறா.

ஏனெனில்,

நூற்பா 148 –ன் படி, 'ண், 'ன்' ஐ அடுத்து மொழிக்கு முதலாய் வரும் எல்லா எழுத்துகளும், அல்வழியில், சொல்லின் முதலில் வந்தால், இயல்பாய்ப் புணரும். (ஆண் + குறியன் = ஆண்குறியன். பெண் + குறியள் = பெண்குறியள்.)

நூற்பா 149 –ன் படி, 'ண், 'ன்'' ஐ அடுத்து, வல்லின எழுத்துகள் இல்லாமல், மெல்லின, இடையின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள், வேற்றுமைப் பொருளில் வந்தால், இயல் பாய்ப் புணரும். (ஆண் + ஞானம் = ஆண்ஞானம். பெண் + ஞாலம் = பெண்ஞாலம்.)

நூற்பா 149 –ன் மறுதலையாக, 'ண், 'ன்'' ஐ அடுத்து, வல்லின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள், வேற்றுமைப் பொரு ளில் வந்தால், திரிந்துப் புணரும். (ஆண் + குறுமை = ஆட்குறுமை. பெண் + சிறுமை = பெட்சிறுமை.)

நூற்பா 156 –ன் படி, அஃறிணை விரவுப்பெயர்களில் சிலவற்றை அடுத்து, வல்லின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள், வேற்றுமைப் பொருளில் வந்தால், இயல்பாய்ப் புணர்வதும் உள்ளன. (கறுப்பன் + கொம்பு = கறுப்பன் கொம்பு. கறுப்பி + தந்தம் = (கறுப்பி தந்தம்.)

நூற்பா 156 –ன் மறுதலையாக, பொதுவாக, அஃறிணைப் பெயர்ச்சொற்களை அடுத்து, வல்லின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள், வேற்றுமைப் பொருளில் வந்தால், திரிந்துப் புணரும். (மான் + கொம்பு = மாட்கொம்பு. தீ + சுவை = தீச்சுவை, தீஞ்சுவை.)

ஆனால், 'ஆண்', 'பெண்', எனும் உயர்திணைப் பெயர்கள் நிலைமொழியாய் நிற்க, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள், அஃறிணையைக் குறித்து, வருமொழியாய் வந்தால், புணர்ச்சி இயல்பாகும்.

### ***ஆண் மரப்பெயர் அம்முச் சாரியை பெறுதல்***

***305. ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே.***

***பொருள்:*** *"ஆண்" எனும் மரப் பெயர்ச்சொல், "அரை" எனும் மரப் பெயர்ச்சொல்லின் இயல்பை உடையது.*

***விளக்கம்:*** *"அரை" எனும் மரப் பெயர்ச்சொல்லுடன் "அம்" எனும் சாரியை சேர்ந்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்வதைப் போலவே (நூற்பா 284), "ஆண்" எனும் மரப் பெயர்ச்சொல்லுடனும், "அம்" எனும் சாரியை சேர்ந்து, பின் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஆண் + அம் + கிளை = ஆணங்கிளை.*
*ஆண் + அம் + சிலை = ஆணஞ்சிலை.*
*ஆண் + அம் + தோல் = ஆணந்தோல்.*
*ஆண் + அம் + பூ = ஆணம்பூ.*

### ***விண் செய்யுளில் 'அத்து'ச் சாரியை பெறுதல்***

***306. விண்ணென வரூஉங் காயப் பெயர்வயின்***
***உண்மையும் உரித்தே அத்தென் சாரியை***
***செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை.***

*விண் = வ் + இ + ண் = புறமும் அகமும் நிலையாய் மிக நெருங்கி இருப்பது.*

*காயம் = க் + ஆய் + அம். பொருண்மையாகும் தன்மை. விண்ணே மெல்ல மெல்ல புலப்படும் பொருண்மையாகின்றது.*

*பொருள்: செய்யுளில், வினைச்சொல் வருமொழியாய் வரும் போது, 'விண்' என நிலைமொழியாய் வருகின்ற இயற்கை மூலத்தின் பெயரை அடுத்து, 'அத்து' எனும் சாரியை வருவதும் உள்ளது.*

***எடுத்துக்காட்டு:***

*விண் + அத்து + கொட்கும் = விண்ணத்துக் கொட்கும் (வண்ணத்தமரர்).*

**ணகார வீற்றுத் தொழிற்பெயர் இருவழியும் உகரம் பெறுதல்**

**307. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.**

**பொருள்:** ணகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட வினைப் பெயர் எல்லாம், ஏற்கனவே கூறிய ஞகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட வினைப்பெயரின் இயல்புடன் (நூற்பாக்கள் 297, 298) நடக்கும்.

**விளக்கம்:** ணகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட வினைப் பெயரை அடுத்து, அல்வழியிலோ (தன்மைப் பொருளிலோ), வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.

**எடுத்துக்காட்டு:**

*அல்வழியில் வல்லினம்:*

உண் + கடிது = உண் + உ + க் + கடிது = உண்ணுக்கடிது.
எண் + சிறிது = எண் + உ + ச் + சிறிது = எண்ணுச்சிறிது.
மண் + தீது = மண் + உ + த் + தீது = மண்ணுத்தீது.
பண் + பெரிது = பண் + உ + ப் + பெரிது = பண்ணுப்பெரிது.

*வேற்றுமையில் வல்லினம்:*

உண் + கடுமை = உண் + உ + க் + கடுமை = உண்ணுக்கடுமை.
எண் + சிறுமை = எண் + உ + ச் + சிறுமை = எண்ணுச்சிறுமை.
மண் + தீமை = மண் + உ + த் + தீமை = மண்ணுத்தீமை.
பண் + பெருமை = பண் + உ + ப் + பெருமை = பண்ணுப் பெருமை.

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

உண் + ஞான்றது = உண் + உ + ஞான்றது = உண்ணு ஞான்றது.
எண் + நீண்டது = எண் + உ + நீண்டது = எண்ணு நீண்டது.
மண் + மாண்டது = மண் + உ + மாண்டது = மண்ணு மாண்டது.
பண் + வலிது = பண் + உ + வலிது = பண்ணு வலிது.

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*உண் + ஞாற்சி = உண் + உ + ஞாற்சி = உண்ணு ஞாற்சி.*
*எண் + நீட்சி = எண் + உ + நீட்சி = எண்ணு நீட்சி.*
*மண் + மாட்சி = மண் + உ + மாட்சி = மண்ணு மாட்சி.*
*பண் + வன்மை = பண் + உ + வலிமை = பண்ணு வன்மை.*

### ணகர வீற்றுக் கிளைப்பெயர் இயல்பாய் முடிதல்

**308. கிளைப்பெய ரெல்லாங் கொளத்திரி பிலவே.**

*கிளைப்பெயர் = இனப்பெயர். மரத்தின் கிளைகள், மரத்தைச் சமநிலைப்படுத்த தோன்றுவதைப்போல், சமுதாயத்திலும், சம நிலைப்படுத்தும் விதமாக, இனங்கள் தோன்றி வளர்கின்றன. அவை அழிவதும், சமநிலை கருதியே. தோன்றலும், நிலைத்தலும், அழிதலும் இயல்பாக நடக்க வேண்டும்.*

***பொருள்:*** *ணகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட இனப் பெயர் எல்லாம், திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*அமண் = சமணர். உமண் = உப்பு உற்பத்தியாளர்.*
*அமண் + கடிது = அமண் கடிது. (அல்வழி – வல்லினம்)*
*அமண் + கடுமை = அமண் கடுமை. (வேற்றுமை – வல்லினம்)*
*அமண் + நீண்டது = அமண் நீண்டது. (அல்வழி – மெல்லினம்)*
*அமண் + வலிது = அமண் வலிது (அல்வழி – இடையினம்)*
*அமண் + நீட்சி = அமண் நீட்சி (வேற்றுமை – மெல்லினம்)*
*அமண் + வன்மை = அமண் வன்மை (வேற்றுமை – இடை–யினம்)*
*உமண் + குடி = உமண் குடி. (வேற்றுமை – வல்லினம்)*

### ‘எண்’, என் ணகர விறுதி அல்வழியிற் புணர்தல்

**309. வேற்றுமை யல்வழி எண்ணென் உணவுப்பெயர்**
**வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே.**

***பொருள்:*** *“எண்” எனும் ணகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட உணவுப்பெயர், அல்வழியில் புணரும்போது, வேற்று மைப் பொருளில் திரிந்து புணர்வதைப் போன்றும் (நூற்பா 303), திரிந்துப் புணரும்.*

**எடுத்துக்காட்டு:**

*எண் + கடிது = எட்கடிது.*
*எண் + சிறிது = எட்சிறிது.*
*எண் + தீது = எட்தீது.*
*எண் + பெரிது = எட்பெரிது.*

*எண் + கடிது = எண்கடிது, எண்சிறிது, எண்தீது, எண்பெரிது எனவும் வரும்.*

## 'முரண்', என் ணகர விறுதித் தொழிற்பெயர், இயல்பாய் முடிதல்

**310. முரணென் தொழிற்பெயர் முதலியல் நிலையும்.**

**பொருள்:** "முரண்" எனும் ணகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட வினைப்பெயர், முதலில் கூறிய இயல்பின்படி, புணரும்.

**விளக்கம்:** "முரண்" எனும் ணகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட வினைப்பெயர், அல்வழியில் இயல்பாகவும் (நூற்பா148), வேற்றுமையில் திரிந்தும் (நூற்பா 303) புணரும்.

**எடுத்துக்காட்டு:**

*முரண் + கடிது = முரண்கடிது. (அல்வழி)*
*முரண் + கடுமை = முரட்கடுமை. (வேற்றுமை)*

## மகர வீறு வேற்றுமையிற் புணர்தல்

**311. மகர இறுதி வேற்றுமை யாயின்**
**துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.**

**பொருள்:** மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், வேற்று மைப் பொருளில் வந்தால், அம்மகர இறுதி முழுவதுமாக கழிய, அவ்வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*மரம் + கிளை = மரஂ + க் + கிளை = மரக்கிளை.*
*மரம் + சாறு = மரஂ + ச் + சாறு = மரச்சாறு.*
*மரம் + தோல் = மரஂ + த் + தோல் = மரத்தோல்.*
*மரம் + பட்டை = மரஂ + ப் + பட்டை = மரப்பட்டை.*

**மகர வீற்றுப் பெயர் அகர ஆகாரங்கள் வருவழி முடிபு வேறுபடுதல்**

***312. அகர ஆகாரம் வரூஉங் காலை***
***ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே.***

***பொருள்:*** *மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, அகரத்தையும் ஆகாரத்தையும் முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அம்மகர இறுதி முழுவதுமாக கழிய, நிலைமொழியின் இறுதி ஒலி, அகரத்தால் நீள்வதும் உடையது.*

**எடுத்துக்காட்டு:**

*மரம் + அடி = மரம் + அ + அடி = மரா + அடி.*
*குளம் + ஆம்பல் = குளம் + அ + ஆம்பல் = குளாஅம்பல்.*
*மரவடி, குளவாம்பல் எனவும் வரும்.*

**மகர வீற்றுப் பெயர் உறழ்தல்**

***313. மெல்லெழுத் துறழூ மொழியுமா ருளவே***
***செல்வழி யறிதல் வழக்கத் தான.***

***பொருள்:*** *மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், வேற்று மைப் பொருளில் வந்து, மெல்லின எழுத்து கூடும் சொற்களும் உள்ளன. அவற்றின் போக்கை, பல்வேறு இடங்களில் நிலவும் சொல்வழக்கைக் கொண்டு அறிந்து பயன்படுத்த வேண்டும்.*

**எடுத்துக்காட்டு:**

*குளம் + கரை = குளங்கரை.*
*மரம் + சாறு = மரஞ்சாறு.*
*களம் + திருட்டு = களந்திருட்டு.*
*மரம் + பலகை = மரம்பலகை.*

**இல்லம் மரப்பெயர் வன்கணத்தோடு புணர்தல்**

***314. இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே.***

***பொருள்:*** *'இல்லம்' எனும் மரப்பெயர், 'விசை' எனும் மரப்பெயரின் இயல்பை உடையது.*

**விளக்கம்:** அதாவது, (விசை– நூற்பா 283), இல்லம் எனும் மரப்பெயர்ச்சொல், வல்லின எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட சொல்லுடன் புணரும்போது, மெல்லின ஒற்றெழுத்தை இடையில் பெறும்.

**எடுத்துக்காட்டு:**

இல்லம் + கிளை = இல்லஃம் + ங் + கிளை = இல்லங்கிளை.
இல்லம் + சாறு = இல்லஃம் + ஞ் + சாறு = இல்லஞ்சாறு.
இல்லம் + தோல் = இல்லஃம் + ந் + தோல் = இல்லந்தோல்.
இல்லம் + பட்டை = இல்லஃம் + ம் + பட்டை = இல்லம்பட்டை.

### மகர வீற்றுப் பெயர் அல்வழியிற் புணர்தல்

**315. அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்.**

**பொருள்:** மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், அல்வழிப் பொருளில் வந்தால், அம்மகர இறுதி முழுவதுமாக கழிய, மெல்லின ஒற்றெழுத்து இடையில் கூடும்.

**எடுத்துக்காட்டு:**

மரம் + குறிது = மரஃம் + ங் + குறிது = மரங்குறிது.
மரம் + சிறிது = மரஃம் + ஞ் + சிறிது = மரஞ்சிறிது.
மரம் + தீது = மரஃம் + ந் + தீது = மரந்தீது.
மரம் + புதிது = மரஃம் + ம் + புதிது = மரம்புதிது.

### ‘அகம்‘. ‘கை’, ஆகியவை புணர்தல்

**316. அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே யாசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.**

**பொருள்:** ‘‘அகம்‘‘ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, ‘‘கை’’ எனும் சொல் வந்தால், நிலைமொழியின் முதலான ‘‘அ’’ வை விடுத்து, அதற்கு முன் உள்ள ‘‘கம்‘‘ கழிவதில், அறிஞர்களுக்கு தடையில்லை. அவ்விடத்தில், மெல்லெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*அகம் + கை = அ~~கம்~~ + ங் + கை = அங்கை.*

### ‘இலம்‘ எனும் மகர இறுதி, ‘படு’ எனும் வருமொழியொடு செய்யுளில் முடிதல்

***317.* இலமென் கிளவிக்குப் படுவரு காலை**
**நிலையலும் உரித்தே செய்யு ளான.**

***பொருள்:*** *செய்யுளில், “இலம்“ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, “படு” எனும் சொல் வந்தால், அம்மகர இறுதி கழியாமல் நிற்பதும் உண்டு.*

**எடுத்துக்காட்டு:**

*“இலம்படு புலவ ரேற்றகை நிறைய” (மலைபடு.576) என வரும்.*

### ஆயிரம் ‘அத்து’ச் சாரியை பெறுதல்

***318.* அத்தொடு சிவணும் ஆயிரத் திறுதி**
**ஒத்த எண்ணு முன்வரு காலை.**

***பொருள்:*** *“ஆயிரம்“ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, பொருந்துகின்ற எண்ணும் வந்தால், ‘அத்து’ எனும் சாரியை இடையில் சேரும்.*

**எடுத்துக்காட்டு:**

*ஆயிரம் + ஒன்று = ஆயிரம் + அத்து + ஒன்று = ஆயிரத்தொன்று.*
*ஆயிரம் + கோடி = ஆயிரத்துக்கோடி என வராது.*

*ஆயிரத்தை அடுத்து ஆயிரத்திற்கு குறைந்த எண் வருதலே, ‘அத்து’ எனும் சாரியை வந்து சேர்வதற்கான நிலைமையாகும்.*

### அடையொடு கூடிய ஆயிரம் ‘அத்து’ப் பெறுதல்

***319.* அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே.**

***பொருள்:*** *“ஆயிரம்“, அடைமொழியோடு தோன்றினாலும், மேலே கூறியதைப் போன்று, ‘அத்து’ எனும் சாரியை இடையில் சேரும்.*

**விளக்கம்:** *அடைமொழியுடன், ''ஆயிரம்'' எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல் தோன்றி, அதை அடுத்து, பொருந்துகின்ற எண் வந்தாலும், 'அத்து' எனும் சாரியை இடையில் சேரும்.*

**எடுத்துக்காட்டு:**

*பத்து + ஆயிரம் + ஒன்று = பத்து + ஆயிரம் + அத்து + ஒன்று = பத்தாயிரத்தொன்று.*

*நல்ல + ஆயிரம் + எட்டு = நல்ல + ஆயிரம் + அத்து + எட்டு = நல்லாயிரத்தெட்டு.*

### 'ஆயிரம்', அளவு நிறைப் பெயர்களுடன் புணர்தல்

***320. அளவும் நிறையும் வேற்றுமை யியல.***

**பொருள்:** ''ஆயிரம்'' உடன் சேரும் அளவும் நிறையும், வேற்றுமை இயல்பைப் பெறும்.

**விளக்கம்:** *மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமைப் பொருளில் புணரும்போது, அதன் மகர இறுதி முழுவதுமாக கழிய, அங்கு, வல்லின ஒற்றெழுத்து கூடும். (நூற்பா 311)*

*கலம், சாடி, தூதை, பானை ஆகியன அளவுப் பெயர்கள்.*

*கழஞ்சு, தொடி, பலம் ஆகியன நிறைப் பெயர்கள்.*

**எடுத்துகாட்டு:**

*ஆயிரம் + கலம் = ஆயிரங் + க் + கலம் = ஆயிரக்கலம்.*
*ஆயிரம் + சாடி = ஆயிரங் + ச் + சாடி = ஆயிரச்சாடி.*
*ஆயிரம் + தூதை = ஆயிரங் + த் + தூதை = ஆயிரத்தூதை.*
*ஆயிரம் + பானை = ஆயிரங் + ப் + பானை = ஆயிரப்பானை.*
*ஆயிரம் + கழஞ்சு = ஆயிரங் + க் + கழஞ்சு = ஆயிரக்கழஞ்சு.*
*ஆயிரம் + தொடி = ஆயிரங் + த் + தொடி = ஆயிரத்தொடி.*
*ஆயிரம் + பலம் = ஆயிரங் + ப் + பலம் = ஆயிரப்பலம்.*

### படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் வேற்றுமையில் தொடக்கம் குறுகுதல்

***321.*** **படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்**
**தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்**
**வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்**
**மெல்லெழுத்து மிகுத லாவயி னான.**

***பொருள்:*** *மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட, ''எல்லாரும்'' எனும் படர்க்கைப் பெயரும், ''எல்லீரும்'' எனும் முன்னிலைப் பெயரும், ''தம், நம், எம்'' என, தொடக்கம் குறுகும் ''தாம், நாம், யாம்'' எனும் பெயர்ச் சொற்களும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமைப் பொருளில் புணர்ந்தால், உருபியல் விதிப்படி நடக்கும். அவ்விடத்தில், மெல்லின எழுத்து கூடும்.*

***விளக்கம்:*** *(நூற்பா 192) ''எல்லாரும்'' என்னும் படர்க்கைச் சொல்லின் இறுதியான, ''ம்'' எனும் ஒற்றும், ''எல்லீரும்'' என்னும் முன்னிலைச் சொல்லின் இறுதியான, ''ம்'' எனும் ஒற்றும், உகரமுடன் கழியும்.*

*''ர்'' என்பது நிற்க வேண்டும். (எல்லாரும் –> எல்லார். எல்லீரும் –> எல்லீர்)*

*''உம்'' மும் நிலைக்கும், வேற்றுமை உருபு வந்துச் சேர்ந்தப் பிறகு.*

*படர்க்கைச் சொல்லாகிய, ''எல்லார்'' என்பதற்கும், வேற்றுமை உருபிற்கும் இடையில், ''தம்'' எனும் சாரியை வரும்.*

*முன்னிலைச் சொல்லாகிய, ''எல்லீர்'' என்பதற்கும், வேற்றுமை உருபிற்கும் இடையில், ''நும்'' எனும் சாரியை வரும்.*

*(நூற்பா 189) ''யாம்'' என்பதன் ''ஆ'', ''எ'' என மாறும், யாம் என்பதன் இறுதி, ''ம்'', இறுதியாகும். வேற்றுமை உருபுகள் சேரும் இடத்தில், ''ய்'' கழிய வேண்டும். மற்றைய இரண்டின் நெடிதான தன்மை குறுகும், அதாவது ''தா'', ''த'' எனவும், ''நா'', ''ந'' எனவும் மாறும்.*

*இங்கு, வேற்றுமை உருபிற்குப் பதில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல், வேற்றுமைப் பொருளில் வருகின்றது.*

*எடுத்துக்காட்டு:*

*எல்லாரும் + கை = எல்லார் + ~~உம்~~ + தம் + கை + உம் = எல்லார்தங்கையும்.*

*எல்லாரும் + செவி = எல்லார் + ~~உம்~~ + தம் + செவி + உம் =*

எல்லார்தஞ்செவியும்.

எல்லீரும் + தலை = எல்லீர் + ~~உம்~~ + நும் + தலை + உம் = எல்லீர்நுந்தலையும்.

எல்லீரும் + புலன் = எல்லீர் + ~~உம்~~ + நும் + புலன் + உம் = எல்லீர்நும்புலனும்.

யாம் + தலை = எம் + தலை = எந்தலை.

யாம் + புலன் = எம் + புலன் = எம்புலன்.

தாம் + கை = தம் + கை = தங்கை.

நாம் + செவி = நம் + செவி = நஞ்செவி.

### படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் அல்வழியில் இயல்பாதல்

**322. அல்லது கிளப்பின் இயற்கை யாகும்.**

**பொருள்:** மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட, "எல்லாரும்" எனும் படர்க்கைப் பெயரும், "எல்லீரும்" எனும் முன்னிலைப் பெயரும், "தம், நம், எம்" என, தொடக்கம் குறுகும் "தாம், நாம், யாம்" எனும் பெயர்ச் சொற்களும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், அல்வழியில், இயற்கையாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

எல்லாரும் + குறியர் = எல்லாருங்குறியர்.
எல்லீரும் + சிறியீர் = எல்லீருஞ்சிறியீர்.
தாம் + தீயர் = தாந்தீயர்.
நாம் + பெரியம் = நாம்பெரியம்.
யாம் + குறியேம் = யாம்குறியேம்.

### எல்லாம் என்பது இருவழியிலும் புணர்தல்

**323. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா மெனும்பெயர் உருபியல் நிலையும்**
**வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது.**

**பொருள்:** "எல்லாம்" எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், அல்வழியிலும், வேற்றுமைப் பொருளிலும் புணரும்

போது, உருபியலின் விதிப்படி நடக்கும். ஆனால், அல்வழியில், 'வற்று' எனும் சாரியை இடையிலும், 'உம்' எனும் சாரியை இறுதியிலும் வராது.

***விளக்கம்:*** *உருபியல் விதி நூற்பா 190 – ''எல்லாம்'' என்னும் சொல்லின் இறுதியான, ''ம்'' ஐ அடுத்து, ''வற்று'' எனும் சாரியை தவறாமல், எல்லா வேற்றுமை உருபுடன் சேரும்போதும் தோன் றும். ''உம்'' எனும் சாரியை, இறுதியில் வந்து நிலைக்கும்.*

*எடுத்துக்காட்டு:*

*அல்வழியில்:*

*எல்லாம் + குறிய = எல்லாக்குறிய.*
*எல்லாம் + சிறிய = எல்லாச்சிறிய.*
*எல்லாம் + தீய = எல்லாத்தீய.*
*எல்லாம் + பெரிய = எல்லாப்பெரிய.*

*வேற்றுமையில்:*

*எல்லாம் + வற்று + கோடும் = எல்லாவற்றுக்கோடும்.*
*எல்லாம் + வற்று + செவியும் = எல்லாவற்றுச்செவியும்.*
*எல்லாம் + வற்று + தலையும் = எல்லாவற்றுத்தலையும்.*
*எல்லாம் + வற்று + புறமும் = எல்லாவற்றுப்புறமும்.*

### 'எல்லாம்', அல்வழியில் மெல்லெழுத்தும் மிகுதல்

***324. மெல்லெழுத்து மிகினு மான மில்லை.***

***பொருள்:*** ''எல்லாம்'' எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக்– கொண்ட பெயர்ச்சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், அல்வழியில் புணரும்போது, மெல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

***எடுத்துக்காட்டு:***

*எல்லாம் + குறிய = எல்லாங்குறிய.*
*எல்லாம் + சிறிய = எல்லாஞ்சிறிய.*
*எல்லாம் + தீய = எல்லாந்தீய.*
*எல்லாம் + பெரிய = எல்லாம்பெரிய.*

### 'எல்லாம்', உயர்திணையிற் புணர்தல்

***325. உயர்திணை யாயின் உருபியல் நிலையும்.***

**பொருள்:** ‘‘எல்லாம்‘‘ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், உயர்திணையைக் குறித்தால், அது வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் வேற்றுமைப் பொருளில் புணரும்போது, உருபியல் விதிப்படி நடக்கும்.

*விளக்கம்: உருபியல் விதி நூற்பா 191–ன் படி, ‘‘எல்லாம்‘‘ எனும் பெயர், உயர்திணையாக விரவி வந்தால், ‘‘நம்‘‘ எனும் சாரியை இடையில் வரும்.*

**எடுத்துக்காட்டு:**

*எல்லாம் + கை = எல்லாம் + நம் + கை + உம் = எல்லாநங்கையும்.*
*எல்லாம் + செவி = எல்லாம் + நம் + செவி + உம் = எல்லாநஞ் செவியும்.*
*எல்லாம் + தலை = எல்லாம் + நம் + தலை + உம் = எல்லாநந் தலையும்.*
*எல்லாம் + புறம் = எல்லாம் + நம் + புறம் + உம் = எல்லாநம் புறமும்.*

### ‘நும்‘, வேற்றுமையில் மென்கணம் மிகுதல்

***326. நும்மெ னொருபெயர் மெல்லெழுத்து மிகுமே.***

**பொருள்:** ‘‘நும்‘‘ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் வேற்றுமைப் பொருளில் புணரும்போது, மெல்லின எழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*நும் + கை = நுஃ + **ங்** + கை = நுங்கை.*
*நும் + செவி = நுஃ + **ஞ்** + செவி = நுஞ்செவி.*
*நும் + தலை = நுஃ + **ந்** + தலை = நுந்தலை.*
*நும் + புறம் = நுஃ + **ம்** + புறம் = நும்புறம்.*

### அல்வழிக்கண் ‘நும்‘, ‘நீயிர்’ எனத் திரிந்து இயல்பாய் முடிதல்

***327. அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை***
***உக்கெட நின்ற மெய்வயின் ஈவர***
***இஇடை நிலைஇ ஈறுகெட்ட ரகரம்***

**நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே**
**அப்பான் மொழிவயி னியற்கை யாகும்.**

***பொருள்:*** *“நும்“ எனும் மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல்லை, அல்வழியில் புணர்த்தும்போது,*

*‘நு’ விலிருந்து ‘உ’ கழிய நின்ற மெய், ‘ந்’ உடன், ‘ஈ’ வர,*

*‘இ’ இடையில் நிலைத்து இருக்க,*

*‘ம்‘ எனும் இறுதி கழிந்த இடத்தில், ரகர ஒற்றெழுத்து வந்துக் கூட,*

*அதற்கடுத்து வரும் வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், இயல்பாய்ப் புணரும்.*

*எடுத்துக்காட்டு:*
*நும் + குறியீர் = (நு − உ + ஈ) + இ + ம் + ர் + குறியீர் = நீஇர் குறியீர்.*
*நும் + சிறியீர் = (நு − உ + ஈ) + இ + ம் + ர் + சிறியீர் = நீஇர் சிறியீர்.*
*நும் + தீயீர் = (நு − உ + ஈ) + இ + ம் + ர் + தீயீர் = நீஇர் தீயீர்.*
*நும் + பெரியீர் = (நு − உ + ஈ) + இ + ம் + ர் + பெரியீர் = நீஇர் பெரியீர்.*

## மகர வீற்றுத் தொழிற்பெயர் இருவழியும் உகரம் பெற்று முடிதல்

***328.*** **தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.**

***பொருள்:*** *மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைச்சொல் எல்லாம், ஏற்கனவே கூறிய ஞகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட வினைப்பெயரின் இயல்புடன் (நூற்பாக்கள் 297, 298) நடக்கும்.*

***விளக்கம்:*** *மகர ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட வினைப் பெயரை அடுத்து, அல்வழியிலோ (தன்னியல் பொருளிலோ), வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.*

**எடுத்துக்காட்டு:**

*அல்வழியில் வல்லினம்:*

*அம் = அழுக்கு. செம் = மூடு.*

*அம் + உ + க் + கடிது = அம்முக்கடிது.*

*அம் + உ + ச் + சிறிது = அம்முச்சிறிது.*

*செம் + உ + த் + தீது = செம்முத்தீது.*

*செம் + உ + ப் + பெரிது = செம்முப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*அம் + உ + க் + கடுமை = அம்முக்கடுமை.*

*அம் + உ + ச் + சிறுமை = அம்முச்சிறுமை.*

*செம் + உ + த் + தீமை = செம்முத்தீமை.*

*செம் + உ + ப் + பெருமை = செம்முப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*அம் + உ + ஞான்றது = அம்மு ஞான்றது.*

*அம் + உ + நீண்டது = அம்மு நீண்டது.*

*செம் + உ + மாண்டது = செம்மு மாண்டது.*

*செம் + உ + வலிது = செம்மு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*அம் + உ + ஞாற்சி = அம்மு ஞாற்சி.*

*அம் + உ + நீட்சி = அம்மு நீட்சி.*

*செம் + உ + மாட்சி = செம்மு மாட்சி.*

*செம் + உ + வன்மை = செம்மு வன்மை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*அம் + உ + ஞான்றது = அம்மு ஞான்றது.*

*அம் + உ + நீண்டது = அம்மு நீண்டது.*

*செம் + உ + மாண்டது = செம்மு மாண்டது.*

*செம் + உ + வலிது = செம்மு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*அம் + உ + ஞாற்சி = அம்மு ஞாற்சி.*

*அம் + உ + நீட்சி = அம்மு நீட்சி.*

*செம் + உ + மாட்சி = செம்மு மாட்சி.*

*செம் + உ + வன்மை = செம்மு வன்மை.*

**ஈம், கம், உரும் – இம்மூன்றும் தொழிற்பெயர்போல் புணர்தல்**

***329. ஈமுங் கம்மும் உருமென் கிளவியும்***
***ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன.***

***பொருள்:*** ''ஈம்'', ''கம்'', ''உரும்'' ஆகிய மூன்று பொருள் பெயர் களும், தொழிற்பெயர்கள் போன்றவை (நூற்பாக்கள் 297, 298).

***விளக்கம்:*** ''ஈம்'', ''கம்'', ''உரும்'' ஆகிய மகர ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட பொருட்பெயரை அடுத்து, அல்வழியிலோ (தன்மைப் பொருளிலோ), வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது.

***எடுத்துக்காட்டு:***

*அல்வழியில் வல்லினம்:*

*ஈம் + உ + க் + கடிது = ஈமுக்கடிது.*
*கம் + உ + ச் + சிறிது = கம்முச்சிறிது.*
*உரும் + உ + த் + தீது = உருமுத்தீது.*
*உரும் + உ + ப் + பெரிது = உருமுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*ஈம் + உ + க் + கடுமை = ஈமுக்கடுமை.*
*கம் + உ + ச் + சிறுமை = கம்முச்சிறுமை.*
*உரும் + உ + த் + தீமை = உருமுத்தீமை.*
*உரும் + உ + ப் + பெருமை = உருமுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*ஈம் + உ + ஞான்றது = ஈமு ஞான்றது.*
*கம் + உ + நீண்டது = கம்மு நீண்டது.*
*உரும் + உ + மாண்டது = உருமு மாண்டது.*
*உரும் + உ + வலிது = உருமு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*ஈம் + உ + ஞாற்சி = ஈமு ஞாற்சி.*

*கம் + உ + நீட்சி = கம்மு நீட்சி.*
*உரும் + உ + மாட்சி = உருமு மாட்சி.*
*உரும் + உ + வன்மை = உருமு வன்மை.*

### ஈமும் கம்மும் வேற்றுமைப் புணர்ச்சியில்

***330. வேற்றுமை யாயின் ஏனை யிரண்டும்***
***தோற்றம் வேண்டும் அக்கென் சாரியை.***

***பொருள்:*** வேற்றுமைப் பொருள் வந்தால், மற்றைய இரண்டும், 'அக்கு' எனும் சாரியையுடன் தோன்ற வேண்டும்.

***விளக்கம்:*** 'ஈம்', 'கம்' ஆகிய இரண்டுப் பெயர்களை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், 'அக்கு' எனும் சாரியை இடையில் வரும்.

***எடுத்துக்காட்டு:***

*ஈம் + குடம் = ஈம் + அக்கு + குடம் = ஈமக்குடம்.*
*கம் + குடம் = கம் + அக்கு + குடம் = கம்மக்குடம்.*

### மகரம் புணர்மொழியிற் குறுகுதல்

***331. வகார மிசையும் மகாரங் குறுகும்.***

***பொருள்:*** மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, வகரத்தை முதல் எழுத்தாய்க் கொண்ட வருமொழி வந்தாலும், மகரம் குறுகும்.

***விளக்கம்:*** "னகாரை முன்னர் மகரங் குறுகும்" (நூற்பா 52) என்பது போல், வகாரம் முன்னர் மகரம் குறுகுகின்றது.

***எடுத்துக்காட்டு:***

*நிலம் + வலிது = நிலம்வலிது.*

### மகர வீறு நாட்பெயரது வேற்றுமையில் மெய்கெடுதல்

***332. நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன***
***அத்தும் ஆன்மிசை வரைநிலை யின்றே***
***ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர்.***

***பொருள்:*** *முன்பு (நூற்பா 248), இகரத்தை இறுதியாகக் கொண்ட நாளின் பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இடையில் 'ஆன்' எனும் சாரியை வந்ததுபோல், மகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட நாளின் பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இடையில், 'அத்து' மற்றும் 'ஆன்' சாரியைகள் வருவதில் தடை–யில்லை என்றும், அவ்விடத்தில், மகர ஒற்றெழுத்து கழியும் என்றும், கருதுவர் அறிஞர்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*மகம் + அத்து + ஆன் + கொண்டான் = மகத்தாற் கொண்டான்.*
*பூரம் + அத்து + ஆன் + சென்றான் = பூரத்தாற் சென்றான்.*
*ஆயில்யம் + அத்து + ஆன் + தந்தான் = ஆயில்யத்தாற் தந்தான்.*
*அனுசம் + அத்து + ஆன் + பெற்றான் = அனுசத்தாற் பெற்றான்.*

### ***னகார வீற்றுப் பெயர் மகாரமாதல்***

***333. னகார இறுதி வல்லெழுத் தியையின்***
***றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.***

***பொருள்:*** *னகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல்லை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த 'ன்', 'ற்' ஆக மாறும்.*

***எடுத்துக்காட்டு:***

*பொன் + குடம் = பொற்குடம்*
*பொன் + சாடி = பொற்சாடி*
*பொன் + தேர் = பொற்தேர்.*
*பொன் + பானை = பொற்பானை.*

### ***மன் முதலிய ஏழும் அன்னவாய் முடிதல்***

***334. மன்னுஞ் சின்னும் ஆனும் ஈனும்***
***பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்***
***அன்ன இயல என்மனார் புலவர்.***

***பொருள்:*** *"மன்", "சின்", "ஆன்", "ஈன்", "பின்", "முன்" ஆகிய ஆறு, னகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொற்களை*

அடுத்தும், ''வரின்'' எனும் வினை எச்சச்சொல்லை அடுத்தும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், மேலே கூறியதைப்போல், அந்த 'ன்', 'ற்' ஆக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

மன் = மனம். சின் = சினம். ஆன் = எருமை. ஈன் = இவ்விடம். பின் = பின்பக்கம். முன் = முன்பக்கம். வரின் = வந்தால்.

மன் + போர் = மற்போர்.

சின் + குறை = சிற்குறை.

ஆன் + கொண்டான் = ஆற்கொண்டான்.

ஈன் + தந்தான் = ஈற்தந்தான்.

பின் + காலம் = பிற்காலம்.

முன் + செய்தி = முற்செய்தி.

வரின் + தரும் = வரிற்தரும்.

## 'வயின்', என்னும் சொல் வன்கணம் புணர்தல்

***335. சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்***
***அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப.***

**பொருள்:** 'அ', 'இ', 'உ' எனும் சுட்டு எழுத்தை முதலாகவும், னகர ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட, 'வயின்' எனும் பெயர்ச்சொல்லை அடுத்தும், 'எ' எனும் வினா எழுத்தை முதலாகவும், னகர ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட 'வயின்' எனும் பெயர்ச்சொல்லை அடுத்தும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வருமொழியாய் வந்தால், மேற்கூறிய, 'ன்', 'ற்' ஆக மாறும் இயல்புடையன.

**எடுத்துக்காட்டு:**

வயின் = இடம்.

அ + வயின் + கண்டான் = அவ்வயிற்கண்டான்.

இ + வயின் + சென்றான் = இவ்வயிற்சென்றான்.

உ + வயின் + தந்தான் = உவ்வயிற்தந்தான்.

எ + வயின் + போனான் = எவ்வயிற்போனான்?

அ, இ, உ, எ ஆகியன பெயருக்கு அடையாகின்றன.

**‘குயின்’, ஈறு இயல்பாய் முடிதல்**

***336. குயினென் கிளவி இயற்கை யாகும்.***

***பொருள்:*** *‘குயின்’ எனும் சொல்லை அடுத்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அது, இயல்பாய்ப் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*குயின் = க் + உய் + இன். மெய் (உயிர்) பிழைப்பதற்காக இருப்பது. மேகம்.*

*குயின் + கூட்டம் = குயின் கூட்டம்.*

*குயின் + சீற்றம் = குயின் சீற்றம்.*

*குயின் + தடம் = குயின் தடம்.*

*குயின் + பலம் = குயின் பலம்.*

**‘எகின்’, மரப்பெயர் ‘அம்‘முச் சாரியை பெறுதல்**

***337. எகின்மர மாயின் ஆண்மர இயற்றே.***

***பொருள்:*** *‘எகின்’ எனும் சொல், மரப்பெயர் என்றால், ‘ஆண்’ மரப்பெயரின் இயல்புடையது.*

***விளக்கம்:*** *(305) ‘‘ஆண்’’ எனும் மரப் பெயர்ச்சொல்லுடன் ‘‘அம்‘‘ எனும் சாரியை சேர்ந்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்வதைப் போலவே, ‘‘எகின்’’ எனும் மரப் பெயர்ச்சொல்லுடனும், ‘‘அம்‘‘ எனும் சாரியை சேர்ந்து, பின் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*எகின் + அம் + கிளை = எகினங்கிளை.*

*எகின் + அம் + சிலை = எகினஞ்சிலை.*

*எகின் + அம் + தோல் = எகினந்தோல்.*

*எகின் + அம் + பூ = எகினம்பூ.*

**‘எகின்’, என்னும் பிற உயிரின் பெயர்**

***338. ஏனை யெகினே அகரம் வருமே***
***வல்லெழுத்தியற்கை மிகுதல் வேண்டும்.***

**பொருள்:** மற்ற 'எகின்' எனும் சொல், பறவையைக் குறித்தால், அகரம் இடையில் வரும், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்து கூடுதல் வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

எகின் = எ + க் + இன் = உயரத்தில் மெய் இருத்தல். அன்னப் பறவை.

எகின் + கால் –> எகின் + அ + க் + கால் = எகினக்கால்.
எகின் + செவி –> எகின் + அ + ச் + செவி = எகினச்செவி.
எகின் + தலை –> எகின் + அ + த் + தலை = எகினத்தலை.
எகின் + பண்பு –> எகின் + அ + ப் + பண்பு = எகினப்பண்பு.

### கிளைப்பெயர் எல்லாம் இயல்பாய் முடிதல்

***339. கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல.***

**பொருள்:** னகாரத்தை இறுதியாய்க் கொண்ட இனப்பெய ரெல்லாம், ணகாரத்தை இறுதியாய்க் கொண்ட இனப்பெயரின் இயல்புடையது.

**விளக்கம்:** *(நூற்பா 308)* ணகார ஒற்றெழுத்தை இறுதியில் கொண்ட இனப்பெயர் எல்லாம், திரிபின்றி, இயல்பாய்ப் புணரும். னகாரத்தை இறுதியாய்க் கொண்ட இனப்பெயரும், திரிபின்றி, இயல்பாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

எய் + இன் = ஈட்டி, அம்பு எய்து இருப்பவர். வேடர்.
எயின் + கடிது = எயின் கடிது. (அல்வழி – வல்லினம்)
எயின் + கடுமை = எயின் கடுமை. (வேற்றுமை – வல்லினம்)
எயின் + நீண்டது = எயின் நீண்டது. (அல்வழி – மெல்லினம்)
எயின் + வலிது = எயின் வலிது (அல்வழி – இடையினம்)
எயின் + நீட்சி = எயின் நீட்சி (வேற்றுமை – மெல்லினம்)
எயின் + வன்மை = எயின் வன்மை (வேற்றுமை – இடையினம்)
எயின் + குடி = எயின் குடி. (வேற்றுமை – வல்லினம்)

### 'மீன்', ஈற்று னகரம் றகரத்தோடு உறழ்தல்

***340. மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே.***

***பொருள்:*** *'மீன்' எனும் சொல்லின், னகர ஒற்றெழுத்து இறுதி, வல்லின எழுத்தாய் திரிந்து புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*மீன் + கன் = மீன்ற் + கண் = மீற்கண்.*
*மீன் + சினை = மீன்ற் + சினை = மீற்சினை.*
*மீன் + தலை = மீன்ற் + தலை = மீற்தலை.*
*மீன் + படை = மீன்ற் + படை = மீற்படை.*

**'தேன்', வன்கணத்துடன் புணர்தல்**

***341.*** **தேனென் கிளவி வல்லெழுத் தியையின்**
**மேனிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்**
**ஆமுறை யிரண்டும் உரிமையு முடைத்தே**
**வல்லெழுத்து மிகுவழி இறுதி யில்லை.**

***பொருள்:*** 'தேன்' எனும் சொல்லுடன், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் புணர்ந்தால், மேலே கூறியதுபோல், னகர ஒற்றெழுத்து இறுதி, றகர ஒற்றாய் திரிதல், வல்லின ஒற்றெழுத்து கூடுதல் ஆகிய இரண்டும் நிகழும். இயல்புப் புணர்ச்சியும் நிகழும். வல்லின எழுத்து கூடும்போது, நிலைமொழியின் இறுதி எழுத்து மறையும்.

***எடுத்துக்காட்டு:***

தேன் + குடம் = தேற்குடம் / தேக்குடம் / தேன் குடம்.
தேன் + பானை = தேற்பானை / தேப்பானை / தேன் பானை.

**'தேன்', மென்கனம் மிகுதல்**

***342.*** **மெல்லெழுத்து மிகினு மான மில்லை.**

***பொருள்:*** மெல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

***விளக்கம்:*** 'தேன்' எனும் சொல்லுடன், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் புணர்ந்தால், வல்லின ஒற்றெழுத்து கூடுவதற்குப் பதிலாக, மெல்லின எழுத்து கூடினாலும் தவறில்லை.

**எடுத்துக்காட்டு:**

தேன் + குடம் = தேங்குடம்
தேன் + பானை = தேம்பானை.

### தேன் – உடன் மென்கணம் புணர்தல்

***343.* மெல்லெழுத் தியையின் இறுதியோ டுறழும்.**

**பொருள்:** மெல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் புணர்ந்தால், னகர ஒற்றெழுத்து இறுதி இருந்தும் அல்லது மறைந்தும் புணரும்.

**விளக்கம்:** 'தேன்' எனும் சொல்லுடன், வேற்றுமைப் பொருளில், மெல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் புணர்ந்தால், னகர ஒற்றெழுத்து இறுதி இருந்தும் அல்லது மறைந்தும் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

தேன் + ஞெரி = தேன்ஞெரி / தேஞெரி.
தேன் + நுனி = தேன்நுனி / தேநுனி.
தேன் + முரி = தேன்முரி / தேமுரி.

### 'தேன்', இறாலோடு இயல்பாய் முடிதல்

***344.* இறாஅல் தோற்றம் இயற்கை யாகும்.**

**பொருள்:** 'தேன்' எனும் சொல்லுடன், இறால் எனும் சொல் இயல்பாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

தேன் + இறால் = தேனிறால்.

### தேன் – தகரத்தோடு புணர்தல்

***345.* ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே.**

ஒற்று மிகுதல் + தகரம் நிற்றல் = த் + த்.

**பொருள்:** 'தேன்' எனும் சொல்லுடன், இறால் எனும் சொல் புணரும்போது, தகர ஒற்றெழுத்துகள் இடையில் கூடுதலும்

*உள்ளது. (341) வல்லின எழுத்து கூடும்போது, நிலைமொழியின் னகர ஒற்றெழுத்து இறுதி மறையும்.*

**எடுத்துக்காட்டு:**

*தேன் + இறால் –> தேண் + த் + த் + இறால் = தேத்திறால்.*

*இறாலைச் சுவைக்கையில், ஓர் இனிப்புச்சுவை இயல்பாகவே இருக்கும்.*

*அந்தக் காலத்தில், ஒரு வேளை, தேனின் சுவையைப் போல் அது மிகவும் இனிப்பாக இருந்திருக்கலாம்.*

**மின், பின், பன், கன் நான்கும் இருவழியும் வன்கணப் புணர்ச்சியில் உகரம் பெறுதல்**

**346. மின்னும் பின்னும் பன்னுங் கன்னும்**
**அந்நாற் சொல்லும் தொழிற்பெய ரியல.**

**பொருள்:** *'மின்', 'பின்', 'பன்', 'கன்' ஆகிய நான்கு சொற்களும், ஏற்கனவே கூறிய, வினைப்பெயரின் இயல்பை உடையன.*

**விளக்கம்:** *னகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட, 'மின்', 'பின்', 'பன்', 'கன்' ஆகிய நான்கு சொற்களை அடுத்து, அல்வழி–யிலோ (தன்னியல் பொருளிலோ), வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது. (நூற்பாக்கள் 297, 298).*

**எடுத்துக்காட்டு:**

*அல்வழியில் வல்லினம்:*

*மின் = ஒளி. பின் = பின்னு. பன் = செய். கன் = கல்போல் செம்பை ஆக்கு.*

*மின் + உ + க் + கடிது = மின்னுக்கடிது.*
*பின் + உ + ச் + சிறிது = பின்னுச்சிறிது.*
*பன் + உ + த் + தீது = பன்னுத்தீது.*
*கன் + உ + ப் + பெரிது = கன்னுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*மின் + உ + க் + கடுமை = மின்னுக்கடுமை.*
*பின் + உ + ச் + சிறுமை = பின்னுச்சிறுமை.*
*பன் + உ + த் + தீமை = பன்னுத்தீமை.*
*கன் + உ + ப் + பெருமை = கன்னுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*மின் + உ + ஞான்றது = மின்னு ஞான்றது.*
*பின் + உ + நீண்டது = பின்னு நீண்டது.*
*பன் + உ + மாண்டது = பன்னு மாண்டது.*
*கன் + உ + வலிது = கன்னு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*மின் + உ + ஞாற்சி = மின்னு ஞாற்சி.*
*பின் + உ + நீட்சி = பின்னு நீட்சி.*
*பன் + உ + மாட்சி = பன்னு மாட்சி.*
*கன் + உ + வன்மை = கன்னு வன்மை.*

### ***‘கன்’, வேற்றுமைப் புணர்ச்சியில் எகினோடு ஒத்தல்***

***347. வேற்றுமை யாயின் ஏனை யெகினொடு***
***தோற்ற மொக்குங் கன்னென் கிளவி.***

**பொருள்:** *‘கன்’ எனும் னகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்ந்தால், மற்றைய ‘எகின்’ (நூற்பா 338. அன்னம்) – இன் வடிவம் கொள்ளும்.*

***விளக்கம்:*** *அகரம் இடையில் வரும், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்து கூடுதல் வேண்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*கல் + ன் = கன். செம்பு. கல் போன்று நெருக்கமாகி வலிமையானது. கற்காலத்திலிருந்து செப்புக்காலத்தில் நுழைந்த மனிதன், செம்பைக் கல்லின் ஒரு மாற்றாகவே பார்த்திருப்பான். ‘கன்’ என்பது, ‘கல்’ என்பதின் உருமாற்றமே எனக் கருத இடமுண்டு.*

*கன் + குடம் = கன் + அ + க் + குடம் = கன்னக்குடம்.*

*கன் + சாடி = கன் + அ + ச் + சாடி = கன்னச்சாடி.*

*கன் + தகடு = கன் + அ + த் + தகடு = கன்னத்தகடு.*

*கன் + பானை = கன் + அ + ப் + பானை = கன்னப்பானை.*

### னகர ஈற்று இயற்பெயர் முன்னர்த் 'தந்தை' வருவழிப் புணர்தல்

***348.*** **இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்**
**முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்**
**மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே.**

***பொருள்:*** *னகர ஈற்று இயற்பெயரை அடுத்து, 'தந்தை' எனும் உறவுமுறைப் பெயர் வந்தால், முதலில் வருமொழியின் (தந்தை) தகர ஒற்றெழுத்து கழியும், அகரம் நிலைக்கும். நிலைமொழியில், மெய்யை விட்டு விட்டு, 'அன்' கழியும்.*

***எடுத்துக்காட்டு:***

*சாத்தன் + தந்தை = சாத்த் + ~~அன்~~ + ~~த்~~ + அந்தை = சாத்தந்தை. (சாத்தன் + தை)*

*கந்தன் + தந்தை = கந்த் + ~~அன்~~ + ~~த்~~ + அந்தை = கந்தந்தை. (கந்தன் + தை)*

*முருகன் + தந்தை = முருக் + ~~அன்~~ + ~~த்~~ + அந்தை = முருகந்தை (முருகன் + தை)*

*தன் + தை = தந்தை, தன்னுடைய தை. 'தை' என்பதே தகப்பனைக் குறிக்கும். தை = த் + அய் = த் + அ + இ. தேகத்தின் உயிராய் இருப்பவன். என் + தை = எந்தை, என் தகப்பன். நும் + தை = நுந்தை, உன் தகப்பன். முருகனின் தந்தை = முருகன் தை = முருகந்தை.*

*தாய் = த் + ஆய் = த் + ஆ + இ. தேகம் ஆகி இருப்பவள்.*

### ஆதன், பூதன் – இயற்பெயர்கள் புணர்தல்

***349.*** **ஆதனும் பூதனுங் கூறிய இயல்பொடு**
**பெயரொற் றகரந் துவரக் கெடுமே.**

***பொருள்:*** *'ஆதன்', 'பூதன்' ஆகிய இரண்டிலும், மேலே கூறிய திரிபுகளுடன், நிலைமொழிப் பெயரை ஒட்டி நிற்கும்*

ஒற்றெழுத்தும், வருமொழியின் முதலாகிவிட்ட அகரமும் கழியும்.

**விளக்கம்:** 'ஆதன்', 'பூதன்' ஆகிய னகர ஈற்று இயற்பெயர்களை அடுத்து, 'தந்தை' எனும் உறவுமுறைப் பெயர் வந்தால், வருமொழியின் (தந்தை) தகர ஒற்றெழுத்து கழியும், அகரம் நிலைக்கும். நிலைமொழியில், மெய்யை விட்டு விட்டு, 'அன்' கழியும்.

பின்பு, நிலைமொழிப் பெயரை ஒட்டி நிற்கும் ஒற்றெழுத்தும், வருமொழியின் முதலாகிவிட்ட அகரமும் கழியும்.

**எடுத்துக்காட்டு:**

*ஆதன் + தந்தை = ஆத் + ~~அன்~~ + ~~த்~~ + அந்தை = ஆந்தை. (ஆன் + தை)*

*பூதன் + தந்தை = பூத் + ~~அன்~~ + ~~த்~~ + அந்தை = பூந்தை. (பூன் + தை)*

### மேலதற்கு வேறொரு முடிபு

***350. சிறப்பொடு வருவழி யியற்கை யாகும்.***

**பொருள்:** மேற்கூறிய இயற்பெயர்கள், சிறப்பு அடைமொழியுடன் வந்தால், புணர்ச்சி இயல்பாகும்.

**எடுத்துக்காட்டு:**

பெருஞ்சாத்தன் + தந்தை = பெருஞ்சாத்தன்றந்தை.
மதுரைக்கந்தன் + தந்தை = மதுரைக்கந்தன்றந்தை.
பெரும்ஆதன் + தந்தை = பெருமாதன்றந்தை.
சிறும்பூதன் + தந்தை = சிறும்பூதன்றந்தை.

### அவ்வியற்பெயர் மக்கள் முறைப்பெயர்ப் புணர்ச்சியில் விகாரப்படுதல்

***351. அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியே***
***நிற்றலும் உரித்தே அம்மென் சாரியை***
***மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான.***

**பொருள்:** மேலே கூறப்பட்ட அந்த இயற்பெயர்கள், மக்கள், பிள்ளைகள் உறவுமுறையுடன் புணரும் இடத்தில், நிலை மொழியில், மெய்யை விட்டு விட்டு, 'அன்' கழியும்போது, 'அம்' எனும் சாரியை வந்துச் சேர்வதும் உடையன. இயல்பாயும் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

*சாத்தன் + கந்தன் = சாத்த் + ~~அன்~~ + **அம்** + கந்தன் = சாத்தம் கந்தன் (‘அம்‘ சாரியையுடன்)*

*சாத்தன் + கந்தன் = சாத்தங்கந்தன். (இயல்புப் புணர்ச்சி)*

### ‘தான்’, ‘பேன்’, ‘கோன்’ – என்னும் உறவுமுறைகள் மேலை இயற்பெயர்களோடு புணர்தல்

***352. தானும் பேனும் கோனும் என்னும்***
***ஆமுறை இயற்பெயர் திரிபிட னிலவே.***

**பொருள்:** *‘தான்’, ‘பேன்’, ‘கோன்’ என்று ஆகின்ற உறவுமுறை களுடன், இயற்பெயர் புணரும்போது, திரியாமல், இயல்புடன் புணரும்.*

**எடுத்துக்காட்டு:**

*சாத்தன் + தான் = சாத்தன்தான். சாத்தம்தான் என்றோ, சாத்தந்தான் என்றோ வராது.*

*கந்தன் + பேன் = கந்தன்பேன். கந்தம்பேன் என்று வராது.*

*சாத்தன் + கோன் = சாத்தன்கோன். சாத்தம்கோன் என்றோ, சாத்தங்கோன் என்றோ வராது.*

### ‘தான்’, ‘யான்’ என்னும் பெயர்கள் வேற்றுமையில் தன், என் ஆதல்

***353. தான்யா னெனும்பெயர் உருபியல் நிலையும்.***

**பொருள்:** *‘தான்’, ‘யான்’ என்னும் பெயர்கள், வேற்றுமைப் பொருளில் புணரும்போது, உருபியலின் விதிப்படி நடக்கும்.*

**விளக்கம்:** *‘தான்’ என்பது ‘தன்’ எனவும், ‘யான்’ என்பது ‘என்’ எனவும் திரிந்து புணரும். (நுற்பாக்கள் 193, 189)*

**எடுத்துக்காட்டு:**

*தான் + கை = தன்கை.*
*யான் + செவி = என்செவி.*

**'தான்', 'யான்', அல்வழியில் இயல்பாய் முடிதல்**

***354.*** **வேற்றுமை யல்வழிக் குறுகலுந் திரிதலும்**
**தோற்றம் இல்லை யென்மனார் புலவர்.**

***பொருள்:*** *அல்வழியில் (தன்னியல் பொருளில்), புணரும்போது, குறுகுவதும், திரிவதும் இன்றி, இயல்பாய்ப் புணரும், என்னும் கருத்துடையவர்கள் அறிஞர்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*தான் + குறியன் = தான்குறியன்.*
*யான் + சிறியேன் = யான்சிறியேன்.*
*தான் + தீயன் = தான்தீயன்.*
*யான் + பெரியன் = யான்பெரியன்.*

**'அழன்' ஈறுகெட வன்கணம் மிகுதல்**

***355.*** **அழனென் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே.**

***பொருள்:*** *'அழன்' எனும் சொல், வேற்றுமைப் பொருளில் புணரும்போது, அதன் இறுதியான னகர ஒற்றெழுத்து கழிய, வல்லின ஒற்றெழுத்து கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*அழன் = பிணம்.*
*அழன் + குடம் = அழன் + க் + குடம் = அழக்குடம்.*
*அழன் + சாடி = அழன் + ச் + சாடி = அழச்சாடி.*
*அழன் + தலை = அழன் + த் + தலை = அழத்தலை.*
*அழன் + பானை = அழன் + ப் + பானை = அழப்பானை.*

**'முன்' என் கிளவி இல்லொடு முடிதல்**

***356.*** **முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்**
**இல்லென் கிளவிமிசை றகர மொற்றல்**
**தொல்லியன் மருங்கின் மரீஇய மரபே.**

***பொருள்:*** *'முன்' எனும் சொல்லை அடுத்து, 'இல்' எனும் சொல் வந்தால், றகர ஒற்றெழுத்து இடையில் வருவது, நெடுங்காலமாய்*

*மருவிய வழக்கம்.*

***எடுத்துக்காட்டு:***

*முன் + இல் = முன் + ற் + இல் = முன்றில்.*

*திரியாமல், இயல்பாய்ப் புணர்ந்தால், முன் + இல் = முன்னில் என வரும். அது, 'முன்பைக்காட்டிலும்' என வேறு ஒரு பொருள் தந்து விடலாம்.*

*இல் + முன்று என்பதன் (மொழி) மாற்று அமைப்பாக, முன்று + இல் எனவந்து, முன்றில் என மருவி இருக்கலாம்.*

### *'பொன்', செய்யுளில் 'பொலம்' என முடிதல்*

***357. பொன்னென் கிளவி யீறுகெட முறையின்***
***முன்னர்த் தோன்றும் லகார மகாரம்***
***செய்யுள் மருங்கின் தொடரிய லான.***

***பொருள்:*** *செய்யுளில் தொடர்மொழியாக வரும்போது, 'பொன்' எனும் சொல்லின் இறுதி கழிந்ததை அடுத்து, முறையே லகாரமும் மகாரமும் வரும்.*

***எடுத்துக்காட்டு:***

*"பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி".*

*'கன்' என்பது 'கல்' – இல் இருந்து வந்தது போல், பொன் எனும் சொல்லே, பொல் எனும் சொல்லில் இருந்து உருவம் கொண்டிருக்கும் போலும். எனவே, பொல் + அம் = பொலம், ஒளிரும் தன்மை என ஆவதில் வியப்பில்லை.*

### *யகர வீற்றுப் பெயர் வேற்றுமையில் வன்கனம் மிகுதல்*

***358. யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்***
***வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே.***

***பொருள்:*** *யகர ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்துடன் புணரும்போது, அவ்வல்லின ஒற்றெழுத்து மிகும்.*

***எடுத்துக்காட்டு:***

*நோய் + குறி = நோய்க்குறி.*

காய் + சுவை = காய்ச்சுவை.
நாய் + செவி = நாய்ச்செவி.
நொய் + பானை = நொய்ப்பானை.

### தாய் – இயல்பாய் முடிதல்

***359. தாயென் கிளவி யியற்கை யாகும்.***

**பொருள்:** 'தாய்' எனும் யகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்துடன், இயல்பாய்ப் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

தாய் + கை = தாய் கை.
தாய் + சொல் = தாய் சொல்.
தாய் + திட்டம் = தாய் திட்டம்.
தாய் + பாட்டு = தாய் பாட்டு.

### மகன்வினை வருமொழியில் வலிமிகுதல்

***360. மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே.***

**பொருள்:** மகனைக் குறிக்கும் 'சேய்' எனும் யகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல், வினைப்பெயருடன் புணரும்போது, முதலில் கூறிய வல்லெழுத்து கூடும் இயல்பாகும்.

**எடுத்துக்காட்டு:**

சேய் + கொலை = சேய்க்கொலை.
சேய் + செய்கை = சேய்ச்செய்கை.
சேய் + திருட்டு = சேய்த்திருட்டு.
சேய் + புரட்டு = சேய்ப்புரட்டு.

### மெல்லெழுத்து உறழ்தல்

***361. மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே.***

**பொருள்:** மெல்லின எழுத்து திரிய வரும் சொற்தொடரும் உள்ளது.

***விளக்கம்:*** *மகனைக் குறிக்கும் 'சேய்' எனும் யகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட சொல், வினைப்பெயருடன் புணரும்போது, வல்லின எழுத்து கூடுவதோடு அன்றி, மெல்லின எழுத்து கூடுவதும் உண்டு.*

***எடுத்துக்காட்டு:***

*சேய் + கொலை = சேய்ங்கொலை.*
*சேய் + செய்கை = சேய்ஞ்செய்கை.*
*சேய் + திருட்டு = சேய்ந்திருட்டு.*
*சேய் + புரட்டு = சேய்ம்புரட்டு.*

## *இவ்வீற்றுப்பெயர் அல்வழியில் இயல்பாதல்*

***362. அல்வழி யெல்லாம் இயல்பென மொழிப.***

***பொருள்:*** *யகர ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச் சொல், அல்வழியில் புணரும்போது, இயல்பாய்ப் புணரும் என்பர், அறிஞர்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*நாய் + கடிது = நாய் கடிது.*
*வாய் + சிறிது = வாய் சிறிது.*
*காய் + தீது = காய் தீது.*
*நோய் + பெரிது = நோய் பெரிது.*

## *ரகார வீற்றுப்பெயர் வேற்றுமையில் வன்கணம் மிகுதல்*

***363. ரகார இறுதி யகார இயற்றே.***

***பொருள்:*** *ரகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், யகரஒற்றெழுத்தைஇறுதியாகக்கொண்டபெயர்ச்சொல்லின் இயல்புடையது.*

***விளக்கம்:*** *ரகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்டச்சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, அவ்வல்லின ஒற்றெழுத்து மிகும்.*

***எடுத்துக்காட்டு:***

*கார் = எலி, வெள்ளாடு, கருங்குரங்கு.*

*தேர் + கால் = தேர்க்கால்.*
*கார் + செவி = கார்ச்செவி.*
*சீர் + தலை = சீர்த்தலை.*
*சூர் + படை = சூர்ப்படை.*

### ஆர், வெதிர், சார், பீர் ஆகிய நான்கும் மென்கணம் மிகுதல்

***364.*** **ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்**
**மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்.**

***பொருள்:*** ‘ஆர்’, ‘வெதிர்’, ‘சார்’, ‘பீர்’ ஆகிய சொற்கள், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, மெல்லின எழுத்து இடையில் கூடும். அதனால், பிறப்பெயர்கள் அல்ல, இவை மரப்பெயர்கள் என்பது, தெளிவாகும்.

***எடுத்துக்காட்டு:***

*ஆர் + கோடு = ஆர்ங்கோடு.*
*வெதிர் + சாறு = வெதிர்ஞ்சாறு.*
*சார் + தோல் = சார்ந்தோல்.*
*பீர் + பூ = பீர்ம்பூ.*

### ‘சார்’, காழ் வருவழி வன்கணம் மிகுதல்

***365.*** **சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும்.**

***பொருள்:*** ‘சார்’ எனும் சொல்லை அடுத்து, ‘காழ்’ எனும் சொல் வந்து புணர்ந்தால், இடையில், வல்லின ஒற்றெழுத்து கூடும்.

***எடுத்துக்காட்டு:***

*காழ் = விதை, வைரம்.*

*சார் + காழ் –> சார் + க் + காழ் = சார்க்காழ்.*

*அல்வழி என்பது எதிர்மறையாக, வேற்றுமைப் பொருள் இல்லாதது எனப் பொருள்படும். பகுக்க முடியாத பண்புத் தன்மையைக் குறிப்பதே அல்வழியில் புணரும். எடுத்துக்காட்டாக, ‘சார் குறிது’ என்பது அம்மரம் முழுவதன் குறுகியத் தன்மையைக் குறிக்கும். அப்பண்பை, அம்மரத்திலிருந்து பிரிக்க முடியாது.*

*தனியாகப் பிரிக்கக்கூடிய பகுதிகள், வேற்றுமைப் பொருளில் புணரும். எடுத்துக்காட்டாக, 'சார்ங்கோடு'. 'சார்' எனும் மரத்தின் பிரிக்கக்கூடிய அல்லது வேறுபடுத்திப் பார்க்கக்கூடிய கிளையைக் குறிக்கின்றது.*

*அதைப் போல், காழ் என்பதை விதையாகக் கொண்டாலும், வைரமாகக் கொண்டாலும், பிரிக்கக்கூடிய காரணத்தால், வேற்றுமைப் பொருளில் கூடி, வல்லின ஒற்றெழுத்தை இடையில் பெறுகின்றது எனலாம்.*

**'பீர்', வன்கணம் வருவழி, 'அம்'முச் சாரியை பெறுதல்**

**366. பீரென் கிளவி அம்மொடுஞ் சிவணும்.**

**பொருள்:** *'பீர்' எனும் பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும் போது, 'அம்' எனும் சாரியை வந்தும் புணரும்.*

**எடுத்துக்காட்டு:**

*பீர் = மர வகை.*
*பீர் + கோடு –> பீர் + அம் + கோடு = பீரங்கோடு.*
*பீர் + சாறு –> பீர் + அம் + சாறு = பீரஞ்சாறு.*
*பீர் + தோல் –> பீர் + அம் + தோல் = பீரந்தோல்.*
*பீர் + பூ –> பீர் + அம் + பூ = பீரம்பூ.*

**லகார வீற்றுப் பெயர் வேற்றுமையில் திரிதல்**

**367. லகார இறுதி னகார இயற்றே.**

**பொருள்:** *லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், னகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லின் இயல்புடையது.*

**விளக்கம்:** *னகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, அன்னகர ஒற்றெழுத்து றகர ஒற்றெழுத்தாய் மாறுவதுபோல், லகார ஒற்றெழுத்தும் றகர ஒற்றெழுத்தாய் மாறும்.*

***எடுத்துக்காட்டு:***

*கல் + காலம் = கற்காலம்.*
*கால் + சட்டை = காற்சட்டை.*
*புல் + தரை = புற்தரை.*
*சொல் + போர் = சொற்போர்.*

### *லகார வீற்றுப் பெயர் மென்கணம் வருவழி லகரம் னகரமாதல்*

***368. மெல்லெழுத் தியையின் னகார மாகும்.***

***பொருள்:*** லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருளில், மெல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, லகார ஒற்றெழுத்து னகார ஒற்றெழுத்தாகும்.

***எடுத்துக்காட்டு:***

*கல் + ஞானம் = கன்ஞானம்.*
*புல் + நுனி = புன்நுனி.*
*சொல் + முறி = சொன்முறி.*

### *அல்வழியில் வன்கணம் வர, லகரம் உறழ்ந்து முடிதல்*

***369. அல்வழி யெல்லாம் உறழென மொழிப.***

***பொருள்:*** லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல், அல்வழியில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, திரியும் எனக் கூறுவர், அறிஞர்.

***எடுத்துக்காட்டு:***

*கல் + குறிது = கற்குறிது.*
*கல் + சிறிது = கற்சிறிது.*
*கல் + தீது = கற்றீது.*
*கல் + பெரிது = கற்பெரிது.*

### *தகரம் வருவழி லகரம் ஆய்தமாகத் திரிதல்*

***370. தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்***

**புகரின் றென்மனார் புலமை யோரே.**

*புகர் = ப் + உக் + அர். வெளியில் பொருண்மை இருத்தல். குற்றம்.*

***பொருள்:*** *லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, அல்வழியில், தகரம் வந்தால், (றகர ஒற்றெழுத் துக்குப் பதில்) ஆய்த எழுத்து வருவதிலும் குற்றம் இல்லை என்னும் கருத்துடையவர்கள், மொழி ஞானிகள்.*

***எடுத்துக்காட்டு:***

*கல் + தீது = கஃறீது.*

### *தனிநெடிலை அடுத்த லகார ஈறு இயல்பாய் முடிதல்*

***371. நெடியதன் இறுதி இயல்புமா ருளவே.***

***பொருள்:*** *நெட்டெழுத்தை அடுத்து லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்டச் சொல், அல்வழியில், இயல்பாய்ப் புணர்வதும் உண்டு.*

***விளக்கம்:*** *இது, நுற்பா 161 – ன் 'நெடியதன் முன்னர் ஒற்று மெய் கெடுதலு'க்கான விலக்கு.*

***எடுத்துக்காட்டு:***

*பால் + கடிது = பால்கடிது.*

### *நெல், செல், கொல், சொல் ஆகிய நான்கும் அல்வழியில் லகரம் றகரமாதல்*

***372. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்***
***அல்லது கிளப்பினும் வேற்றுமை யியல.***

***பொருள்:*** *'நெல்', 'செல்', 'கொல்', 'சொல்' ஆகிய நான்கு சொற்களும், அல்வழியில் புணர்ந்தாலும், வேற்றுமைப் புணர்ச்சி இயல்புடையது. லகார ஒற்றெழுத்து, றகார ஒற்றெழுத்தாகும்.*

***எடுத்துக்காட்டு:***

*நெல் + கடிது = நெற்கடிது.*
*செல் + சிறிது = செற்சிறிது.*

*கொல் + தீது = கொற்றீது.*
*சொல் + பெரிது = சொற்பெரிது.*

### ‘இல்’, எனும் சொல் வன்கணம் வருவழி முடிதல்

***373. இல்லென் கிளவி யின்மை செப்பின்***
***வல்லெழுத்து மிகுதலும் ஐயிடை வருதலும்***
***இயற்கை யாதலும் ஆகாரம் வருதலும்***
***கொளத்தகு மரபின் ஆகிட னுடைத்தே.***

***பொருள்:*** ‘இல்’ எனும் சொல், ‘இல்லாமை’ எனும் பொருளில் வந்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல்லுடன் புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து கூடியும், ‘ஐ’ இடையில் வந்தும், இயல்பாகவும், ஆகாரம் வந்தும், ஏற்றுக்கொள்ளும் வழக்கங்கள்படி, புணரும் இடங்கள் உள்ளன.

***எடுத்துக்காட்டு:***

*இல் + கல் –> இல் + ஐ + க் + கல் = இல்லைக்கல்.*
*இல் + கல் –> இல் + ஐ + கல் = இல்லைகல்.*
*இல் + கல் –> இல் + ஐ + க் + கல் = இலைக்கல்.*
*இல் + கல் –> இல் + ஐ + கல் = இலைகல்.*
*இல் + கல் –> இல்கல்.*
*இல் + கல் –> இல் + ஆ + க் + கல் = இல்லாக்கல்.*
*இல் + கல் –> இல் + ஆ + க் + கல் = இலாக்கல்.*
*இல் + கல் –> இல் + ஆ + கல் = இல்லாகல்.*
*இல் + கல் –> இல் + ஆ + கல் = இலாகல்.*

### ‘வல்’, இருவழியும் உகரச் சாரியை பெறுதல்

***374. வல்லென் கிளவி தொழிற்பெய ரியற்றே.***

***பொருள்:*** ‘வல்’ எனும் சொல், வினைப்பெயரின் இயல்புடையது.

***விளக்கம்:*** ‘வல்’ எனும் லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்டச் சொல்லை அடுத்து, அல்வழியிலோ (தன்னியல் பொருளிலோ), வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல்

*வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது. (நூற்பாக்கள் 297, 298).*

**எடுத்துக்காட்டு:**

*அல்வழியில் வல்லினம்:*

*வல் + உ + க் + கடிது = வல்லுக்கடிது.*
*வல் + உ + ச் + சிறிது = வல்லுச்சிறிது.*
*வல் + உ + த் + தீது = வல்லுத்தீது.*
*வல் + உ + ப் + பெரிது = வல்லுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*வல் + உ + க் + கடுமை = வல்லுக்கடுமை.*
*வல் + உ + ச் + சிறுமை = வல்லுச்சிறுமை.*
*வல் + உ + த் + தீமை = வல்லுத்தீமை.*
*வல் + உ + ப் + பெருமை = வல்லுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*வல் + உ + ஞான்றது = வல்லு ஞான்றது.*
*வல் + உ + நீண்டது = வல்லு நீண்டது.*
*வல் + உ + மாண்டது = வல்லு மாண்டது.*
*வல் + உ + வலிது = வல்லு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*வல் + உ + ஞாற்சி = வல்லு ஞாற்சி.*
*வல் + உ + நீட்சி = வல்லு நீட்சி.*
*வல் + உ + மாட்சி = வல்லு மாட்சி.*
*வல் + உ + வன்மை = வல்லு வன்மை.*

### ‘வல்’, நாய், பலகை – எனும் வருமொழியொடு புணர்தல்

***375.** **நாயும் பலகையும் வரூஉங் காலை***
***ஆவயின் உகரங் கெடுதலும் உரித்தே***
***உகரங் கெடுவழி அகரம் நிலையும்.***

***பொருள்:*** *‘வல்’ எனும் லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்டச் சொல்லை அடுத்து, ‘நாய்’, ‘பலகை’ எனும் சொற்கள் புணர வந்தால், அவ்விடத்தில், உகரம் கழிதலும் உடையது. உகரம் கழிந்த இடத்தில் அகரம் கூடும்.*

**எடுத்துக்காட்டு:**

*வல் + நாய் –> வல் + ஊ + **அ** + நாய் = வல்ல நாய்.*

*வல் + பலகை –> வல் + ஊ + **அ** + பலகை = வல்லப்பலகை.*

'வல்லு நாய்' என்பது 'வள்' என குரைக்கும் நாய் என்றும், 'வல்லுப் பலகை' என்பது 'இயல்கின்றப் பலகை' என்றும், கேட்பவர்க்கு, வேறு பொருள் தரலாம். பொருளைத் தெளிவாக்க, இம்மாற்றுப் புணர்ச்சி உதவும்.

### பூல், வேல், ஆல் மூன்றும் 'அம்' முச் சாரியை பெற்றுப் புணர்தல்

**376. பூல்வே லென்றா ஆலென் கிளவியொடு**
**ஆமுப் பெயர்க்கும் அம்மிடை வருமே.**

**பொருள்:** 'பூல்', 'வேல்', 'ஆல்' ஆகிய மூன்று மரப்பெயர்ச் சொற்கள், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல்லுடன் புணரும்போது, இடையில், 'அம்' எனும் சாரியை வரும்.

**எடுத்துக்காட்டு:**

*பூல் + கிளை –> பூல் + அம் + கிளை = பூலங்கிளை.*
*வேல் + சாறு –> வேல் + அம் + சாறு = வேலஞ்சாறு.*
*ஆல் + பூ –> ஆல் + அம் + பூ = ஆலம்பூ.*

### லகார ஈற்றுத் தொழிற்பெயர் உகரம் பெறுதல்

**377. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெயர் இயல.**

**பொருள்:** லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப்பெயர்கள் எல்லாம், வினைப்பெயரின் இயல்புடையது.

**விளக்கம்:** லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப்பெயர் எல்லாம், அல்வழியிலோ வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்டச் சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து

கூடாது. (நூற்பாக்கள் 297, 298).

எடுத்துக்காட்டு:

அல்வழியில் வல்லினம்:

கல் + உ + க் + கடிது = கல்லுக்கடிது.
கல் + உ + ச் + சிறிது = கல்லுச்சிறிது.
கல் + உ + த் + தீது = கல்லுத்தீது.
கல் + உ + ப் + பெரிது = கல்லுப்பெரிது.

வேற்றுமையில் வல்லினம்:

கல் + உ + க் + கடுமை = கல்லுக்கடுமை.
கல் + உ + ச் + சிறுமை = கல்லுச்சிறுமை.
கல் + உ + த் + தீமை = கல்லுத்தீமை.
கல் + உ + ப் + பெருமை = கல்லுப்பெருமை.

அல்வழியில் மெல்லினம், இடையினம்:

கல் + உ + ஞான்றது = கல்லு ஞான்றது.
கல் + உ + நீண்டது = கல்லு நீண்டது.
கல் + உ + மாண்டது = கல்லு மாண்டது.
கல் + உ + வலிது = கல்லு வலிது.

வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:

கல் + உ + ஞாற்சி = கல்லு ஞாற்சி.
கல் + உ + நீட்சி = கல்லு நீட்சி.
கல் + உ + மாட்சி = கல்லு மாட்சி.
கல் + உ + வன்மை = கல்லு வன்மை.

### வெயில், 'அத்' தும் 'இன்' னும் பெறுதல்

***378. வெயிலென் கிளவி மழையியைல் நிலையும்.***

**பொருள்:** 'வெயில்' எனும் சொல், 'மழை' எனும் சொல்லின் இயல்புப்படி நடக்கும்.

**விளக்கம்:** 'வெயில்' எனும் லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல், 'மழை' எனும் சொல்லின் புணர்ச்சி இயல்புப்படி நடக்கும். அதாவது, புணரும் சொற்களுக்கு இடையில், 'அத்து' , 'இன்' சாரியைப் பெறும்.

**எடுத்துக்காட்டு:**

*வெயில் + அத்து + கொண்டான் = வெயிலத்துக் கொண்டான்.*
*வெயில் + இன் + செத்தான் = வெயிலிற் செத்தான்.*

### சுட்டு முதல் வகர வீற்றுச் சொல் வற்றுப் பெறுதல்

**379. சுட்டுமுத லாகிய வகர விறுதி**
**முற்படக் கிளந்த உருபியல் நிலையும்.**

**பொருள்:** சுட்டெழுத்தை முதலாகவும், வகார ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், முன்பு கூறிய உருபியல் (நுற்பா 184) விதிப்படி, 'வற்று' எனும் சாரியை பெற்றுப் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

*அவ் + வற்று + கிளை = அவற்றுக்கிளை.*
*இவ் + அற்று + சாறு = இவற்றுச்சாறு.*
*உவ் + அற்று + தோல் = உவற்றுத்தோல்.*

### சுட்டு முதல் வகார வீற்றுச் சொல் வன்கணம் வருவழி அல்வழியில் வகரம் ஆய்தமாகத் திரிந்து முடிதல்

**380. வேற்றுமை அல்வழி ஆய்த மாகும்.**

**பொருள்:** சுட்டெழுத்தை முதலாகவும், வகார ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், அல்வழியில் புணரும்போது, வகார ஒற்றெழுத்து ஆய்தமாகத் திரியும்.

**எடுத்துக்காட்டு:**

*அவ் + கடிய –> அ~~வ்~~ஃ + கடிய = அஃகடிய.*
*இவ் + சிறிய –> இ~~வ்~~ஃ + சிறிய = இஃசிறிய.*
*உவ் + தீய –> உ~~வ்~~ஃ + தீய = உஃதீய.*

### வகர வீறு மென்கணத்துடன் புணர்தல்

**381. மெல்லெழுத் தியையின் அவ்வெழுத் தாகும்.**

**பொருள்:** சுட்டெழுத்தை முதலாகவும், வகார ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், மெல்லின எழுத்தை முதலாய்க்

கொண்ட சொற்களுடன் புணரும்போது, அவ்வகார ஒற்றெழுத்து மெல்லின எழுத்தாக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

*ஞாண் = கயிறு, (வில்லின்) நாண்.*
*அவ் + ஞாண் –> அ**வ்ஞ்** + ஞாண் = அஞ்ஞாண்.*
*இவ் + நூல் –> இ**வ்ந்** + நூல் = இந்நூல்.*
*உவ் + மணி –> உ**வ்ம்** + மணி = உம்மணி.*

### வகர வீறு, இடைக்கணம் உயிர்க்கணங்களுடன் புணர்தல்

***382.*** **ஏனவை புணரின் இயல்பென மொழிப.**

***பொருள்:*** *சுட்டெழுத்தை முதலாகவும், வகார ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட சொற்கள், இடை எழுத்து மற்றும் உயிர் எழுத்தை முதலாய்க் கொண்ட சொற்களுடன், இயல்பாய்ப் புணரும் என்பர், அறிஞர்.*

**எடுத்துக்காட்டு:**

*அவ் + யாழ் = அவ்யாழ்.*
***இவ் + வட்டு = இவ்வட்டு.***
***உவ் + அடை = உவ்வடை.***

### வகர வீற்றுத் தொழிற்பெயர் இயல்பாதல்

***383.*** **ஏனை வகரந் தொழிற்பெய ரியற்றே.**

***பொருள்:*** *மற்றைய வகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொற்கள் (வினைப்பெயர்கள்), வினைப்பெயரின் இயல்புடையது. அதாவது, அல்வழியிலோ வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது. (நுற்பாக்கள் 297, 298).*

**எடுத்துக்காட்டு:**

*அல்வழியில் வல்லினம்:*

*தெவ் = பறி, கொள்.*
*தெவ் + உ + க் + கடிது = தெவ்வுக்கடிது.*
*தெவ் + உ + ச் + சிறிது = தெவ்வுச்சிறிது.*
*தெவ் + உ + த் + தீது = தெவ்வுத்தீது.*
*தெவ் + உ + ப் + பெரிது = தெவ்வுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*தெவ் + உ + க் + கடுமை = தெவ்வுக்கடுமை.*
*தெவ் + உ + ச் + சிறுமை = தெவ்வுச்சிறுமை.*
*தெவ் + உ + த் + தீமை = தெவ்வுத்தீமை.*
*தெவ் + உ + ப் + பெருமை = தெவ்வுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*தெவ் + உ + ஞான்றது = தெவ்வு ஞான்றது.*
*தெவ் + உ + நீண்டது = தெவ்வு நீண்டது.*
*தெவ் + உ + மாண்டது = தெவ்வு மாண்டது.*
*தெவ் + உ + வலிது = தெவ்வு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*தெவ் + உ + ஞாற்சி = தெவ்வு ஞாற்சி.*
*தெவ் + உ + நீட்சி = தெவ்வு நீட்சி.*
*தெவ் + உ + மாட்சி = தெவ்வு மாட்சி.*
*தெவ் + உ + வன்மை = தெவ்வு வன்மை.*

### ழகார வீற்றுப் பெயர் வேற்றுமையில் வன்கணம் மிகுதல்

***384. ழகார இறுதி ரகார இயற்றே.***

**பொருள்:** *ழகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல், ரகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லின் இயல்புடையது. அதாவது, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, அவ்வல்லின ஒற்றெழுத்து மிகும்.*

**எடுத்துக்காட்டு:**

*பூழ் = காடை. கௌதாரி. காழ் = மர வைரம்.*

*பூழ் + கால் = பூழ்க்கால்.*
*பூழ் + சிறகு = பூழ்ச்சிறகு.*
*காழ் + திடம் = காழ்த்திடம்.*

### தாழ் – கோல் என்னும் வருமொழியொடு புணர்தல்

**385. தாழென் கிளவி கோலொடு புணரின்**
**அக்கிடை வருதல் உரித்து மாகும்.**

**பொருள்:** 'தாழ்' எனும் சொல், 'கோல்' எனும் சொல்லுடன் புணர்ந்தால், 'அக்கு' எனும் சாரியை இடையில் வருவதும் உண்டு.

**எடுத்துக்காட்டு:**

*தாழ் + கோல் –> தாழ் + அக்கு + கோல் = தாழக்கோல்.*

பொது விதிப்படி, தாழ் + கோல் = தாழ்க்கோல் என வரும். ஆனால், அது, 'தாழ்ந்தக் கோல்' எனப் பொருள் தரலாம். பொருளை வேறுபடுத்தித் தெளிவாக்க, 'அக்கு' எனும் சாரியை வருகின்றது.

### தமிழ் எனும் சொல் 'அக்'குப் பெறுதல்

**386. தமிழென் கிளவியும் அதனோ ரற்றே.**

**பொருள்:** 'தமிழ்' எனும் சொல்லும் மேலே சொன்னதைப் போன்றதே. அதாவது, 'அக்கு' எனும் சாரியை இடையில் வருவதும் உண்டு.

**எடுத்துக்காட்டு:**

*தமிழ் + கோல் –> தமிழ் + அக்கு + கோல் = தமிழக்கோல். தமிழர் ஆட்சி.*

பொது விதிப்படி, தமிழ் + கோல் = தமிழ்க்கோல் என வரும். ஆனால், அது, 'தமிழர் அளவுகோல்' எனப் பொருள் தரலாம். பொருளை வேறுபடுத்தித் தெளிவாக்க, 'அக்கு' எனும் சாரியை வருகின்றது போலும்.

### குமிழ் எனும் மரப்பெயர் 'அம்'முச் சாரியை பெறுதல்

**387. குமிழென் கிளவி மரப்பெய ராயின்**

**பீரென் கிளவியோ டோரியற் றாகும்.**

**பொருள்:** *'குமிழ்' எனும் சொல், மரப்பெயரைக் குறித்தால், 'பீர்' எனும் சொல்லோடு ஓர் இயல்புடையதாகும். அதாவது, (நூற்பா 364) வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, மெல்லின எழுத்து இடையில் கூடும்; 'அம்' எனும் சாரியை வந்தும் புணரும் (நூற்பா 366).*

**எடுத்துக்காட்டு:**

*குமிழ் + கிளை –> குமிழ் + ங் + கிளை = குமிழ்ங்கிளை.*
*குமிழ் + கிளை –> குமிழ் + அம் + கிளை = குமிழங்கிளை.*

### பாழ் வன்கணத்தொடு மென்கணம் உறழ்ந்து முடிதல்

***388. பாழெென் கிளவி மெல்லெழுத் துறழ்வே.***

**பொருள்:** *'பாழ்' எனும் சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும் போது, மெல்லின எழுத்து இடையில் கூடும்.*

**எடுத்துக்காட்டு:**

*பாழ் + கிணறு –> பாழ் + ங் + கிணறு = பாழ்ங்கிணறு.*
*பாழ் + சேரி –> பாழ் + ஞ் + சேரி = பாழ்ஞ்சேரி.*
*பாழ் + தோட்டம் –> பாழ் + ந் + தோட்டம் = பாழ்ந்தோட்டம்.*
*பாழ் + பாடி –> பாழ் + ம் + பாடி = பாழ்ம்பாடி.*

### ஏழ், 'அன்' சாரியை பெறுதல்

***389. ஏழெென் கிளவி உருபியல் நிலையும்.***

**பொருள்:** *'ஏழ்' எனும் சொல், உருபியல் (நூற்பா 195) விதிப்படி நடக்கும். அதாவது, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, "அன்" எனும் சாரியை, இடையில் தோன்றும்.*

**எடுத்துக்காட்டு:**

*ஏழ் + காயம் –> ஏழ் + அன் + காயம் = ஏழன் காயம்.*
*ஏழ் + சுக்கு –> ஏழ் + அன் + சுக்கு = ஏழன் சுக்கு.*

*ஏழ் + தினை –> ஏழ் + அன் + தினை = ஏழன் தினை.*
*ஏழ் + பருப்பு –> ஏழ் + அன் + பருப்பு = ஏழன் பருப்பு.*

### அளவு நிறைப் பெயர்கள் வருவழி 'ஏழ்' எழுவாதல்

***390. அளவும் நிறையும் எண்ணும் வருவழி***
***நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்***
***கடிநிலை யின்றே ஆசிரி யர்க்க.***

***பொருள்:*** *'ஏழ்' எனும் சொல், முகத்தல் அளவு, நிறுத்தல் (எடுத்தல்) நிறை, எண்ணிக்கை எண், நீட்டல் எண் ஆகியவற்றைக் குறிக்கும் சொல்லுடன் புணரும்போது, 'ஏழ்' இன் முதல் நெடிய எழுத்தான,'ஏ', 'எ' என குறுகுவதும், உகரம் 'ழ்' உடன் கூடுவதும், ஆசிரியர்கள் கண்டிப்பவை அல்ல.*

***எடுத்துக்காட்டு:***

*முகத்தல் அளவு:*

*ஏழ் + கலம் –> ~~ஏ~~எ + ழ் + உ + கலம் = எழுகலம்.*
*ஏழ் + உழக்கு –> ~~ஏ~~எ + ழ் + உ + உழக்கு = எழுஉழக்கு.*

*நிறுத்தல் நிறை:*

*ஏழ் + கழஞ்சு –> ~~ஏ~~எ + ழ் + உ + கழஞ்சு = எழுகழஞ்சு.*
*ஏழ் + தொடி –> ~~ஏ~~எ + ழ் + உ + தொடி = எழுதொடி.*

*எண்ணிக்கை எண்:*

*ஏழ் + பத்து –> ~~ஏ~~எ + ழ் + உ + பத்து = எழுபத்து.*
*ஏழ் + நூறு –> ~~ஏ~~எ + ழ் + உ + நூறு = எழுநூறு.*

*நீட்டல் எண்:*

*ஏழ் + காணி = ~~ஏ~~எ + ழ் + உ + காணி = எழுகாணி.*
*ஏழ் + குழி = ~~ஏ~~எ + ழ் + உ + குழி = எழுகுழி.*

### எழுபத்து – எழுபஃது என முடிதல்

***391. பத்தென் கிளவி ஒற்றிடை கெடுவழி***
***நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி.***

***பொருள்:*** *'எழு' எனும் சொல்லை அடுத்து வரும், 'பத்து'*

எனும் சொல்லில், இடையில் உள்ள 'த்' எனும் ஒற்றெழுத்து கழியும்போது, அங்கு, ஆய்த எழுத்து வந்து நிற்க வேண்டும்.

***எடுத்துக்காட்டு:***

*எழு + பத்து –> எழு + பத் + ஃ + து = எழுபஃது.*

### எழு – ஆயிரம் வருவழி உகரம் பெறாது முடிதல்

***392. ஆயிரம் வருவழி உகரங் கெடுமே.***

**பொருள்:** 'எழு' எனும் சொல்லை அடுத்து, 'ஆயிரம்' எனும் சொல் வந்தால், உகரம் கழியும்.

***எடுத்துக்காட்டு:***

*எழு + ஆயிரம் –> எழு – உ + ஆயிரம் = எழ் + ஆயிரம் = எழா–யிரம்.*

உகரம் கெடும் என்பதால், எடுத்துக் கொண்ட சொல், 'எழு' என்றாகின்றது. மேலும், இதற்கடுத்த நூற்பாவில், 'ஆயிரம்' எனும் சொல், 'நூறு' எனும் அடைமொழியுடன் வந்தால், நெடுமுதல் குறுகாது எனச் சொல்கின்றது. எனவே, இந்நூற்பாவில், அது குறுகும் என்பது மறுதலையாகக் கொள்ளலாம். தமிழின் இயல்போட்டம் கருதி, 'எழாயிரம்' என்பதை ஏற்கலாமா?

### ஏழ் எனும் பெயர் நூறாயிரம் வருவழி இயல்பாகவே முடிதல்

***393. நூறூர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்கு***
***கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே.***

**பொருள்:** 'நூறு' வை அடைமொழியாய்க் கொண்டு 'ஆயிரம்' எனும் சொல் வந்தால், மேலே கூறப்பட்ட 'ஏழ்' எனும் சொல்லில், நெடிய எழுத்தான,'ஏ', 'எ' எனக் குறுகுவது இல்லை.

***எடுத்துக்காட்டு:***

*ஏழ் + நூறாயிரம் = ஏழ்நூறாயிரம்.*

இன்றைய வழக்கில், எழுநூறாயிரம் என்பதும் உண்டு.

**பேரெண்ணுப் பெயர் வருவழியும், 'ஏழ்', மேலைமுடிபே பெறுதல்**

***394. ஐஅம் பல்லென வரூஉம் இறுதி***
***அல்பெய ரெண்ணு மாயியல் நிலையும்.***

***பொருள்:*** *'ஐ', 'அம்', 'பல்' எனும் இறுதியைக் கொண்ட பொருட் பெயரல்லாத எண்ணுப் பெயர்களும், மேற்கூறிய இயல்பில் நிற்கும்.*

***விளக்கம்:*** *'ஐ', 'அம்', 'பல்' எனும் இறுதியைக் கொண்ட பொருட் பெயரல்லாத எண்ணுப் பெயர்கள், 'தாமரை', 'வெள்ளம்', 'ஆம்பல்' ஆகியவை. இவை வருமொழியாய் வரும்பொழுதும், 'ஏழ்' எனும் நிலைமொழியில், நெடிய எழுத்தான, 'ஏ', 'எ' எனக் குறுகுவது இல்லை.*

***எடுத்துக்காட்டு:***

*ஏழ் + தாமரை = ஏழ்தாமரை.*
*ஏழ் + வெள்ளம் = ஏழ்வெள்ளம்.*
*ஏழ் + ஆம்பல் = ஏழ்ஆம்பல்.*

**'ஏழ்', உயிர்க்கணம் வருவழியும் அற்றாதல்**

***395. உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.***

***பொருள்:*** *'ஏழ்' எனும் சொல்லை அடுத்து உயிர் எழுத்தை முதலாய்க் கொண்ட சொற்கள் வந்தாலும், அந்த இயல்பு மாறாது. அதாவது, 'ஏழ்' எனும் நிலைமொழியில், நெடிய எழுத்தான, 'ஏ', 'எ' எனக் குறுகுவது இல்லை.*

***எடுத்துக்காட்டு:***

*ஏழ் + அலகு = ஏழலகு.*
*ஏழ் + ஆடை = ஏழாடை.*
*ஏழ் + இலை = ஏழிலை.*
*ஏழ் + ஈ = ஏழீ.*
*ஏழ் + உயிர் = ஏழுயிர்.*
*ஏழ் + ஊசல் = ஏழூசல்.*
*ஏழ் + எட்டு = ஏழெட்டு.*
*ஏழ் + ஏணி = ஏழேணி.*
*ஏழ் + ஐந்து = ஏழைந்து.*

*ஏழ் + ஒட்டகம் = ஏழொட்டகம்.*
*ஏழ் + ஓணான் = ஏழோணான்.*
*ஏழ் + ஔவை = ஏழௌவை.*

### கீழ் வேற்றுமையில் உறழ்தல்

***396. கீழென் கிளவி உறழத் தோன்றும்.***

**பொருள்:** *'கீழ்'* எனும் சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, திரிந்து வரும்.

**எடுத்துக்காட்டு:**

*கீழ் + காற்று = கீழ் + க் + காற்று = கீழ்க்காற்று.*
*கீழ் + காற்று = கீழ் + அ + க் + காற்று = கீழக்காற்று.*
*கீழ் + காற்று = கீழ் + ஐ + க் + காற்று = கீழைக்காற்று.*
*கீழ் + சேரி = கீழ் + ச் + சேரி = கீழ்ச்சேரி.*
*கீழ் + சேரி = கீழ் + அ + ச் + சேரி = கீழச்சேரி.*
*கீழ் + சேரி = கீழ் + ஐ + ச் + சேரி = கீழைச்சேரி.*
*கீழ் + தோட்டம் = கீழ் + த் + தோட்டம் = கீழ்த்தோட்டம்.*
*கீழ் + தோட்டம் = கீழ் + அ + த் + தோட்டம் = கீழத்தோட்டம்.*
*கீழ் + தோட்டம் = கீழ் + ஐ + த் + தோட்டம் = கீழைத்தோட்டம்.*
*கீழ் + பாடி = கீழ் + ப் + பாடி = கீழ்ப்பாடி.*
*கீழ் + பாடி = கீழ் + அ + ப் + பாடி = கீழப்பாடி.*
*கீழ் + பாடி = கீழ் + ஐ + ப் + பாடி = கீழைப்பாடி.*
*கீழ் + அம் / அன் + கரை = கீழங்கரை.*
*கீழ் + ஆம் / ஆன் + கரை = கீழாங்கரை.*
*கீழ் + அம் / அன் + சேரி = கீழஞ்சேரி.*
*கீழ் + ஆம் / ஆன் + சேரி = கீழாஞ்சேரி.*
*கீழ் + அம் / அன் + தோட்டம் = கீழந்தோட்டம்.*
*கீழ் + ஆம் / ஆன் + தோட்டம் = கீழாந்தோட்டம்.*
*கீழ் + அம் / அன் + பாடி = கீழம்பாடி.*
*கீழ் + ஆம் / ஆன் + பாடி = கீழாம்பாடி.*

### ளகார வீற்றுப் பெயர் வேற்றுமையில் மிகுதல்

***397. ளகார இறுதி ணகார இயற்றே.***

**பொருள்:** ளகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச்சொல், ணகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச்சொல்லின் இயல்புடையது. அதாவது, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வருமொழியாய் வந்தால், நிலைமொழியின் அந்த "ள்", "ட்" ஆக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

*கள் + கலம் –> **க~~ள்~~ட்** + கலம் = கட்கலம்.*
*எள் + சட்டி –> **எ~~ள்~~ட்** + சட்டி = எட்சட்டி.*
*முள் + தலை –> **மு~~ள்~~ட்** + தலை = முட்தலை.*
*உள் + பக்கம் –> **உ~~ள்~~ட்** + பக்கம் = உட்பக்கம்.*

## மென்கணம் வருவழி ளகாரம் ணகாரமாதல்

**398. மெல்லெழுத் தியையின் ணகார மாகும்.**

**பொருள்:** ளகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து வேற்றுமைப் பொருளில், மெல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வருமொழியாய் வந்தால், நிலை மொழியின் அந்த "ள்", "ண்" ஆக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

*கள் + ஞாலம் –> **க~~ள்~~ண்** + ஞாலம் = கண்ஞாலம்.*
*எள் + நுனி –> **எ~~ள்~~ண்** + நுனி = எண்நுனி.*
*முள் + முரி –> **மு~~ள்~~ண்** + முரி = முண்முரி.*

## ளகார வீற்றுப் பெயர் அல்வழியில் உறழ்தல்

**399. அல்வழி யெல்லாம் உறழெென மொழிப.**

**பொருள்:** ளகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச்சொல்லை அடுத்து, அல்வழியில், வல்லின, மெல்லின, இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வருமொழியாய் வந்தால், நிலைமொழியின் அந்த "ள்" திரியும், எனச் சொல்லுவர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

*கள் + கடிது = கட்கடிது.*
*எள் + சிறிது = எட்சிறிது.*

*முள் + தீது = முட்தீது.*
*முள் + பெரிது = முட்பெரிது.*
*கள் + ஞான்றது = கண்ஞான்றது.*
*எள் + நீண்டது = எண்நீண்டது*
*முள் + மாண்டது = முண்மாண்டது.*
*முள் + வலிது = முண்வலிது.*

**தகரம் வருவழி ளகரம் ஆய்தமாகவும் திரிதல்**

***400. ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே***
***தகரம் வரூஉங் காலை யான.***

**பொருள்:** ளகார ஒற்றெழுத்தை இறுதியாய்க் கொண்ட பெயர்ச் சொல்லை அடுத்து, தகரத்தை முதலாய்க் கொண்ட சொல் வரு மொழியாய் வந்தால், ஆய்தம் வந்து நிற்பதிலும் தடையில்லை.

***எடுத்துக்காட்டு:***

*கள் + தீது -> ~~கள்~~ஃ + தீது = கஃதீது.*
*எள் + திரவம் -> ~~எள்~~ஃ+ திரவம் = எஃதிரவம்.*
*முள் + தோட்டம் -> ~~முள்~~ஃ + தோட்டம் = முஃதோட்டம்.*

**தனிநெடில் இறுதி ளகரம் இயல்பாதலும் அல்வழியில் வேற்றுமை முடிபு பெறுதலும்**

***401. நெடியத னிறுதி இயல்பா குநவும்***
***வேற்றுமை யல்வழி வேற்றுமை நிலையலும்***
***போற்றல் வேண்டும் மொழியுமா ருளவே.***

*போற்றல் = கடைப்பிடித்தல். பின்பற்றுதல்.*

**பொருள்:** நெட்டெழுத்தை முதலாகவும், ளகார ஒற்றெழுத்தை இறுதியாகவும் கொண்ட சில சொற்கள், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், வேற்றுமைப் பொருளில் (நூற்பா 397–க்கு விலக்காக) இயல்பாயும், அல்வழியில் திரிந்தும் புணர்வதாய் உள்ளன, என்பதைக் கண்டு பின்பற்ற வேண்டும்.

***எடுத்துக்காட்டு:***

*வேற்றுமையில்:*

*காள் + சின்மை = காள்சின்மை. (‘காட்சின்மை’ என்று வந்தால்,*

*'காட்சி இன்மை' எனப் பொருள் மாறி வரலாம்)*

*கோள் + பெருமை = கோள்பெருமை. ('கோட்பெருமை' என்று வந்தால், 'கோட்பு எருமை' எனப் பொருள் மாறி வரலாம்)*

*எனவே, புணர்ச்சி இயல்பானது போலும்.*

*அல்வழியில்:*

*நாள் + கடிது = நாட்கடிது.*
*தோள் + சிறிது = தோட்சிறிது.*

**ளகர வீற்றுத் தொழிற்பெயர் உகரம் பெறுதல்**

***402. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.***

***பொருள்:*** *ளகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட வினைப்பெயர்கள், வினைப்பெயரின் இயல்புடையது. அதாவது, அல்வழியிலோ வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது. (நூற்பாக்கள் 297, 298).*

***எடுத்துக்காட்டு:***

*அல்வழியில் வல்லினம்:*

*துள் = குதி.*

*துள் + உ + க் + கடிது = துள்ளுக்கடிது.*
*துள் + உ + ச் + சிறிது = துள்ளுச்சிறிது.*
*துள் + உ + த் + தீது = துள்ளுத்தீது.*
*துள் + உ + ப் + பெரிது = துள்ளுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*துள் + உ + க் + கடுமை = துள்ளுக்கடுமை.*
*துள் + உ + ச் + சிறுமை = துள்ளுச்சிறுமை.*
*துள் + உ + த் + தீமை = துள்ளுத்தீமை.*
*துள் + உ + ப் + பெருமை = துள்ளுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*துள் + உ + ஞான்றது = துள்ளு ஞான்றது.*
*துள் + உ + நீண்டது = துள்ளு நீண்டது.*
*துள் + உ + மாண்டது = துள்ளு மாண்டது.*
*துள் + உ + வலிது = துள்ளு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*துள் + உ + ஞாற்சி = துள்ளு ஞாற்சி.*
*துள் + உ + நீட்சி = துள்ளு நீட்சி.*
*துள் + உ + மாட்சி = துள்ளு மாட்சி.*
*துள் + உ + வன்மை = துள்ளு வன்மை.*

## இருள், 'அத்'தும் 'இன்'னும் பெறுதல்

***403. இருளென் கிளவி வெயிலியல் நிலையும்.***

**பொருள்:** *'இருள்' எனும் சொல், 'வெயில்' எனும் சொல்லின் (நூற்பா 378) இயல்புப்படி நடக்கும். அதாவது, புணரும் சொற்களுக்கு இடையில், 'அத்து' , 'இன்' சாரியை பெறும்.*

**எடுத்துக்காட்டு:**

*இருள் + கொண்டான் –> இருள் + அத்து + கொண்டான் = இருளத்துக்கொண்டான்.*
*இருள் + சென்றான் –> இருள் + இன் + சென்றான் = இருளிற்சென்றான்*
*இருள் + தந்தான் –> இருள் + அத்து + தந்தான் = இருளத்துத்தந்தான்.*
*இருள் + போனான் –> இருள் + இன் + போனான் = இருளிற்போனான்.*

## புள்ளும் வள்ளும் உகரம் பெறுதல்

***404. புள்ளும் வள்ளும் தொழிற்பெய ரியல.***

**பொருள்:** *'புள்', 'வள்' எனும் சொற்கள் வினைப்பெயரின் இயல்புடையன. அதாவது, அல்வழியிலோ வேற்றுமைப் பொருளிலோ, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த வல்லின எழுத்தின் ஒற்றெழுத்து கூடும், அந்த இடத்தில், உகரமும் கூடும்; மெல்லினம் அல்லது இடையின*

எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அந்த இடத்தில், உகரம் கூடும். ஆனால், மெல்லின அல்லது இடையின ஒற்றெழுத்து கூடாது. *(நூற்பாக்கள் 297, 298).*

**எடுத்துக்காட்டு:**

*புள் = இறுக்கு.*
*வள் = வளமாக்கு, கூர்மையாக்கு, வலிமையாக்கு.*

*அல்வழியில் வல்லினம்:*

*புள் + உ + க் + கடிது = புள்ளுக்கடிது.*
*புள் + உ + ச் + சிறிது = புள்ளுச்சிறிது.*
*வள் + உ + த் + தீது = வள்ளுத்தீது.*
*வள் + உ + ப் + பெரிது = வள்ளுப்பெரிது.*

*வேற்றுமையில் வல்லினம்:*

*புள் + உ + க் + கடுமை = புள்ளுக்கடுமை.*
*புள் + உ + ச் + சிறுமை = புள்ளுச்சிறுமை.*
*வள் + உ + த் + தீமை = வள்ளுத்தீமை.*
*வள் + உ + ப் + பெருமை = வள்ளுப்பெருமை.*

*அல்வழியில் மெல்லினம், இடையினம்:*

*புள் + உ + ஞான்றது = புள்ளு ஞான்றது.*
*புள் + உ + நீண்டது = புள்ளு நீண்டது.*
*வள் + உ + மாண்டது = வள்ளு மாண்டது.*
*வள் + உ + வலிது = வள்ளு வலிது.*

*வேற்றுமையில் மெல்லினம், இடையினம்:*

*புள் + உ + ஞாற்சி = புள்ளு ஞாற்சி.*
*புள் + உ + நீட்சி = புள்ளு நீட்சி.*
*வள் + உ + மாட்சி = வள்ளு மாட்சி.*
*வள் + உ + வன்மை = வள்ளு வன்மை.*

இவை, பொருட்பெயராய் இருந்து வினைப்பெயராய்த் திரிந்தன போலும்.

### மக்கள் இறுதி ளகரம் இயல்பாதலன்றி டகரமாய்த் திரிந்தும் முடிதல்

***405.*** **மக்க ளென்னும் பெயர்நிலைக் கிளவியும்**
**தக்கவழி அறிந்து வலித்தலு முரித்தே.**

வலித்தல் = மெல்லின / இடையின ஒற்றெழுத்து வல்லின ஒற்றெழுத்தாய் மாறுதல்.

**பொருள்:** 'மக்கள்' எனும் ளகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல்லும், பொருந்துகின்ற இடங்களில், இடை–யின ஒற்றெழுத்தை வல்லின ஒற்றெழுத்தாய் மாற்றுவதையும் உடையது.

எடுத்துக்காட்டு:

மக்க~~ள்~~ட் + குறை = மக்கட்குறை. ('மக்கள்குறை' என்பது 'மக்கள்குறைவு' என வேறு பொருள் தந்துவிடலாம். 'மக்கட்குறை' என்பது 'மக்களின் குறை' எனத் தெளிவாகலாம்.)

மக்க~~ள்~~ட் + சிறை = மக்கட்சிறை. ('மக்கள்சிறை' என்பது 'மக்கள் சிறைப்பட்டனர்' என வேறு பொருள் தந்துவிடலாம். 'மக்கட்சிறை' என்பது 'மக்களே சிறைவைத்தனர்' எனத் தெளிவாகலாம்.)

மக்க~~ள்~~ட் + திரை = மக்கட்திரை. ('மக்கள்திரை' என்பது 'மக்கள் முதிர்ந்தவர்' என வேறு பொருள் தந்துவிடலாம். 'மக்கட்திரை' என்பது 'மக்களாலான அலை' எனத் தெளிவாகலாம்.)

மக்க~~ள்~~ட் + பறை = மக்கட்பறை. ('மக்கள்பறை' என்பது 'மக்கள் பறை இனத்தவர்' என வேறு பொருள் தந்துவிடலாம். 'மக்கட்பறை' என்பது 'மக்களின் சொல், முரசு' எனத் தெளிவாகலாம்.)

**புறனடை**

***406. உணரக் கூறிய புணரியன் மருங்கின்***
***கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே.***

கண்ணினர் = கண் + இனர். கண்ணைப் போன்றவர்.

**பொருள்:** புணரியல் பகுதியில், உணர்கின்ற வகையில் கூறப்பட்ட, விதிகளுக்கான காரணங்களையும் அடிப்படைகளையும் அறிந்து, புதிய சொற்கள் மற்றும் இங்கு கூறப்படாத பிற சொற்களின் புணர்ச்சி வழிமுறைகளைச் சுட்டிக் காட்டும் பணி–யினை, மொழியின் கண்களைப் போன்ற அறிஞர்கள், மேற்கொள்ள வேண்டும்.

# 9. குற்றியலுகரப் புணரியல்

**குற்றியலுகரம் அறுவகைப்படுதல்**

***407. ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்***
***ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்***
***ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்.***

***பொருள்:***

*1. ஈரெழுத்து ஒருமொழி:* இரண்டு எழுத்துகளால் ஆன, குற்றியலுகரமெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்,

*2. உயிர்த்தொடர்:* ஒற்றெழுத்து இன்றி உயிர், உயிர்மெய் மற்றும் குற்றியலுகரமெய் எழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்

*3. இடைத்தொடர்:* இடையின ஒற்றெழுத்தை, உயிர் அல்லது உயிர்மெய் எழுத்துக்கும் குற்றியலுகரமெய் எழுத்துக்கும், இடையில், கொண்ட சொல்,

*4. ஆய்தத் தொடர்:* ஆய்த எழுத்தை, உயிர் அல்லது உயிர்மெய் எழுத்துக்கும் குற்றியலுகரமெய் எழுத்துக்கும், இடையில், கொண்ட சொல்,

*5. வன்றொடர்:* வல்லின ஒற்றெழுத்தை, உயிர் அல்லது உயிர்மெய் எழுத்து அல்லது இடையின ஒற்றெழுத்துக்கும் குற்றியலுகரமெய் எழுத்துக்கும், இடையில், கொண்ட சொல்,

*6. மென்றொடர்:* மெல்லின ஒற்றெழுத்தை, உயிர் அல்லது உயிர்மெய் எழுத்து அல்லது இடையின ஒற்றெழுத்துக்கும் குற்றியலுகரமெய் எழுத்துக்கும் இடையில், கொண்ட சொல்,

ஆகிய ஆறு இடங்களில்தான், உகரம் குறுகும்.

**எடுத்துக்காட்டு:**

*1.* ஆடு. ஏடு. ஒடு.

*2.* அடகு. தகடு. வயிறு. எயிறு. முயிறு.

*3.* அல்கு. தெள்கு.

*4.* அஃகு. அஃது. இஃது. உஃது. எஃகு. எஃது. கஃசு.

*5.* பத்து. கட்டு. கொக்கு. தொக்கு. சுக்கு. திக்கு. நாக்கு. பக்கு. பிக்கு. மொக்கு. வக்கு. வாக்கு. காய்ப்பு.

*6.* குன்று. உண்டு. அங்கு. அஞ்சு. ஆங்கு. ஈங்கு. ஊங்கு. கொங்கு. கோங்கு. மொய்ம்பு.

### ஈரொற்றுத் தொடர்மொழி வன்தொடரும் மென்தொடரும் ஆதல்

***408.* அவற்றுள்**
**ஈரொற்றுத் தொடர்மொழி யிடைத்தொட ராகா.**

**பொருள்:** மேலே கூறிய சொல்வகைகளில், இரண்டு அடுத் தடுத்த ஒற்றெழுத்துகளைக் கொண்ட சொற்களில், இடையின ஒற்றெழுத்து இரண்டாவது ஒற்றெழுத்தாகாது, அதாவது, இடை– யின ஒற்றெழுத்து இறுதி உகர மெய்யெழுத்தாகத் தொடராது. வல்லின அல்லது மெல்லின ஒற்றெழுத்துகள் இரண்டாவது ஒற்றெழுத்தாகி, இறுதி உகர மெய்யெழுத்தாகத் தொடரும்.

**எடுத்துக்காட்டு:**

காய்ப்பு. ஈர்க்கு. காழ்ப்பு. மொய்ம்பு. மொய்ப்பு.

### இருவழியிலும் குற்றியலுகரம் புணர்தல்

***409.* அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா இறுதியும் உகர நிறையும்.**

**பொருள்:** அல்வழியிலும் வேற்றுமைப் பொருளிலும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, மேற்கூறிய ஆறு குற்றியலுகர இறுதியும் முற்றியலுகரமாகி, ஒரு மாத்திரை அளவுடனும், அதன் எடை அல்லது அழுத்தமுடனும் இருக்கும்.

***எடுத்துக்காட்டு:***

*அல்வழி:*

*ஆடு + கடிது = ஆடுகடிது.*
*அடகு + கடிது = அடகுகடிது.*
*அல்கு + கடிது = அல்குகடிது.*
*எஃகு + கடிது = எஃகுகடிது*
*சுக்கு + கடிது = சுக்குகடிது.*
*குன்று + கடிது = குன்றுகடிது.*

*வேற்றுமை:*

*ஆடு + கடுமை = ஆட்டுக்கடுமை.*
*அடகு + கடுமை = அடகுக்கடுமை.*
*அல்கு + கடுமை = அல்குக்கடுமை.*
*எஃகு +கடுமை = எஃகுக்கடுமை.*
*சுக்கு + கடுமை = சுக்குக்கடுமை.*
*குன்று + கடுமை = குன்றுக்கடுமை.*

### குற்றியலுகரம் மேலும் ஒரு முடிபு

***410.** **வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்***
***தொல்லை இயற்கை நிலையலு முரித்தே.***

*தொல்லை = த் + ஒல்லை. த் = தேகம் / வடிவம். ஒல்லை = ஒல் + ஐ. ஒல் = எல்லை. ஐ = தன்மை. தொல்லை = தேகம் அல்லது வடிவத்தின் எல்லைத் தன்மை. குற்றியலுகரம் அரை மாத்திரை–யிலிருந்து கால் மாத்திரையாய்க் குறைதல். அதுவே அதன் எல்லை. மகரக் குறுக்கம்போல் மென்மேலும் குறுகாது.*

*தொல்லை = தொல் + ஐ. பழமை. முன்பு கூறிய.*

***பொருள்:*** *குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, வல் லொற்றுத் தொடர்மொழியை (வல்லின ஒற்றெழுத்தை, உயிர் அல்லது உயிர்மெய் எழுத்து அல்லது இடையின ஒற்றெழுத்துக்கும் உகரமெய் எழுத்துக்கும், இடையில், கொண்ட சொல்லை) அடுத்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், குற்றியலுகரம் அரை மாத்திரையிலிருந்து கால் மாத்திரையாய்க் குறைதலும் உடையது.*

*பேச்சின் வேகத்தால், குற்றியலுகரம் அரை மாத்திரையிலிருந்து*

கால் மாத்திரையாய்க் குறையும்.

பேச்சின் நிதானத்தால், குற்றியலுகரம் அரை மாத்திரையாக நிற்கும்.

எடுத்துக்காட்டு:

சுக்கு + கடிது = சுக்குக்கடிது.
சுக்கு + கடுமை = சுக்குக்கடுமை.

## குற்றியலிகரம் புணர்மொழியுள் வருமாறு

**411. யகரம் வருவழி இகரங் குறுகும்**
**உகரக் கிளவி துவரத் தோன்றாது.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, வல்லொற் றுத் தொடர்மொழியை அடுத்து, யகர எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், இகரம் தோன்றிக் குறுகும். குற்றியலுகரத்தை இறுதியாய்க் கொண்ட சொல் அல்லது குற்றியலுகரம் முழுமை யாய்க் தோன்றாது.

**எடுத்துக்காட்டு:**

கட்டு + யாது –> கட் + ட் + உ + **இ** + யாது = கட்டியாது.
சுக்கு + யாது –> சுக் + க் + உ + **இ** + யாது = சுக்கியாது.

## ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும், வேற்றுமையில் (ட, ற) ஒற்றிரட்டித்தல்

**412. ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்**
**வேற்றுமை யாயின் ஒற்றிடை இனமிகத்**
**தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, இரண்டு எழுத்துகளால் ஆனச் சொல்லும், உயிர்த்தொடர் சொல்லும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்ந்தால், நிலைமொழியின் இடையில் இனமான ஒற்றெழுத்து கூட வேண்டும், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்தும் கூட வேண்டும்.

**எடுத்துக்காட்டு:**

*இரண்டு எழுத்துச் சொல்:*

*ஆடு + கால் –> ஆட் + ட் + உ + க் + கால் = ஆட்டுக்கால்.*

*உயிர்த்தொடர்ச் சொல்:*

*வயிறு + கடுப்பு –> வயிற் + ற் + உ + க் + கடுப்பு = வயிற்றுக்கடுப்பு.*

## இனவொற்று இடைமிகா இடங்கள்

**413. ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, இரண்டு எழுத்துகளால் ஆன சொல்லும், உயிர்த்தொடர் சொல்லும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, நிலைமொழியின் இடையில், இனமான ஒற்றெழுத்து கூடாத இடமும் உள்ளது. அப்படிப்பட்ட இடங்களில், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்தும் கூடாது.

**எடுத்துக்காட்டு:**

*நாகு = எருமை. நாக்கு = வாயின் உறுப்பு. வரகு = சாமை. வர்க்கு = கஞ்சி.*

*ஈரெழுத்து ஒருமொழி:*

*நாகு + கால் –> நாகுகால். (நிலைமொழியின் இடையில் ஒற்றெழுத்தும், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்தும் கூடினால், ''நாக்குக்கால்'' என வந்து, பொருள் மாறிவிடும்)*

*உயிர்த்தொடர்:*

*வரகு + கதிர் –> வரகுகதிர். (நிலைமொழியின் இடையில் ஒற்றெழுத்தும், வருமொழியின் வல்லின ஒற்றெழுத்தும் கூடினால், ''வரக்குக்கதிர்'' என வந்து, பேச்சு வழக்கில், 'வர்க்குக்கதிர்' எனப் பொருள் மயக்கம் ஏற்படலாம்)*

## இடைத்தொடரும் ஆய்தத்தொடரும் இயல்பாதல்

**414. இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்
நடைஆ இயல என்மனார் புலவர்.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, இடைத் தொடர் சொல்லும், ஆய்தத் தொடர் சொல்லும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, மேற்கூறிய இயல்புடையன, என்னும் கருத்துடை யவர்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

இடைத்தொடர்ச் சொல்:

தெள்கு + கால் = தெள்குகால் (தெள்க்குக்கால் என கடினம் கருதி வராது)

ஆய்தத்தொடர்ச் சொல்:

எஃகு + கால் = எஃகுகால். (எஃக்குக்கால் எனக் கடினம் கருதி வராது. 'எஃகு + உக்கால்' என வந்து பொருள் மாற்றமும் வந்துவிடலாம்)

**வன்றொடரும் மென்றொடரும் மிகுதல், திரிதல்.**

***415.* வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்**
**வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே**
**மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்றெல்லாம்**
**வல்லொற் றிறுதி கிளையொற் றாகும்.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, வல்லின ஒற்றெழுத்தை இடையில் கொண்ட சொல்லும், மெல்லின ஒற்றெழுத்தை இடையில் கொண்ட சொல்லும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, இடையில், அவ்வல்லின ஒற்றெழுத்து கூடும். மென்தொடரின் மெல்லின ஒற்றெழுத்து, தனக்கு இனமான வல்லின ஒற்றெழுத்தாய் முடியும்.

**எடுத்துக்காட்டு:**

கொக்கு + கால் –> கொக்கு + க் + கால் = கொக்குக்கால்.
குரங்கு + கால் –> குரங் + **க்** + கு + **க்** + கால் = குரக்குக்கால்.

**மரப்பெயர்க் கிளவி, 'அம்'முச் சாரியை பெறுதல்**

***416.* மரபெயர்க் கிளவிக் கம்மே சாரியை.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட மரப்பெயர்ச் சொல்லிற்கு, 'அம்' தான், சாரியையாய் வரும்.

**விளக்கம்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட மரப்பெயர்ச் சொல், வன்றொடராயினும், மென்றொடராயினும், 'அம்' சாரியை இடையில் வந்துப் பின், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

தேக்கு + கோடு = தேக்கு + அம் + கோடு = தேக்கங்கோடு.

வேம்பு + கோடு = வேஃ + ப் + பு + **அம்** + கோடு = வேப்பங்கோடு.

### மென்றொடர் வன்றொடராகத் திரியா மரப்பெயர்

**417. மெல்லொற்று வலியா மரப்பெயரு முளவே.**

**பொருள்:** மெல்லின ஒற்றெழுத்து, வல்லின ஒற்றெழுத்தாய் மாறாத, குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, மரப்பெயரும் உள்ளது.

**எடுத்துக்காட்டு:**

குருந்து = மரவகை. குருத்து = கொழுந்து. புன்கு = புங்க மரம். புக்கு = புங்கம் அல்லாத வேறு ஒரு மரவகை.

குருந்து + கோடு –> குருந்து + அம் + கோடு = குருந்தங்கோடு. (மெல்லின ஒற்றெழுத்து, வல்லின ஒற்றெழுத்தாய் மாறினால், 'குருத்தக்கோடு' என வரும். அது வேறுபொருள் தந்துவிடும்.)

புன்கு + கோடு –> புன்கு + அம் + கோடு = புங்கங்கோடு. (மெல்லின ஒற்றெழுத்து, வல்லின ஒற்றெழுத்தாய் மாறினால், 'புக்கக்கோடு' என வரும். அது வேறுபொருள் தந்துவிடும்.)

### நெடிற்றொடரும் வன்றொடரும் 'அம்' முச் சாரியையும் பெறுதல்

**418. ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்**
**அம்மிடை வரற்கும் உரியவை உளவே**
**அம்மர பொழுகு மொழிவயி னான.**

**பொருள்:** 'அம்' எனும் சாரியை வரக்கூடிய, குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட, (மரப்பெயர் அல்லாத) இரண்டு எழுத்துகளைக் கொண்ட சொற்களும், வல்லின ஒற்றெழுத்தை இடையில் கொண்ட சொற்களும், வழக்கத்தைக் கடைப்பிடிக்கின்ற சில சொற்களின் இடத்தில் உள்ளன.

**எடுத்துக்காட்டு:**

ஏறு = மாடு. உயரம். ஆண். கோள் = நட்சத்திரம். பாம்பு. பொய். வட்டு = சூதாட்டக்கருவி. விளையாட்டுக்கருவி. போர்க்கருவி.

ஏறு + கோள் –> ஏறு + அம் + கோள் = ஏறங்கோள். ('ஏறுக்கோள்' என வந்தால், பொருள் மாறிவிடும்)

வட்டு + போர் –> வட்டு + அம் + போர் = வட்டம்போர். ('வட்டுப்போர்' என வந்தால், பொருள் மாறிவிடும்)

### மெல்லொற்றுத் திரியாது 'அக்' குப் பெறுதல்

**419. ஒற்றுநிலை திரியா தக்கொடு வரூஉம்
அக்கிளை மொழியும் உளவென மொழிப.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொற்களில், மெல்லின ஒற்றெழுத்து, வல்லின ஒற்றெழுத்தாய் மாறாமல், 'அக்' எனும் சாரியையுடன் வந்து புணர்கின்ற, ஒரு வகைச் சொற்களும் உள்ளன, எனச் சொல்லுவர், அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

குன்று = சிறுமலை. குற்று = இடி. தாக்கு.

குன்று + கூகை –> குன்று + அக் + கூகை = குன்றக்கூகை. (நூற்பா 415 பொது விதிப்படி, 'குற்றுக்கூகை' என வந்தால், பொருள் மாறுபடும்)

### எண்ணுப் பெயர்க் கிளவி, 'அன்' சாரியை பெறுதல்

**420. எண்ணுப் பெயர்க்கிளவி உருபியல் நிலையும்.**

**பொருள்:** குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட எண்ணுப் பெயர்கள், நூற்பா 199– ன் உருபியல் விதிப்படி நடக்கும். அதாவது, 'அன்' எனும் சாரியையுடன் சேர்ந்து, வேற்றுமைப் பொருளில்,

வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்.

எடுத்துக்காட்டு:

ஒன்று = எண். சேர்தல். இரண்டு = எண். மலமுடன் சிறுநீர்.

ஒன்று + காயம் –> ஒன்று + அன் + காயம் = ஒன்றன்காயம். ('ஒன்றுக்காயம்' என்றால், ஒன்று சேர்கின்ற காயம் எனப் பொருள் மாறிவிடும்)

இரண்டு + சுக்கு –> இரண்டு + அன் + சுக்கு = இரண்டன்சுக்கு ('இரண்டுச்சுக்கு' என வந்தால், பொருள் மாறிவிடலாம்)

**வண்டும் பெண்டும், 'இன்' சாரியை பெறுதல்**

***421. வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்.***

***பொருள்:*** 'வண்டு', 'பெண்டு' எனும், குற்றியலுகரத்தை இறுதி யாகக் கொண்ட பெயர்ச்சொற்கள், 'இன்' எனும் சாரியையுடன் சேர்ந்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்.

***எடுத்துக்காட்டு:***

வண்டு = சிறுபறவை. மறவர். அம்பு. சங்கு. பெண்டு = மனைவி. பெண்.

வண்டு + கால் –> வண்டு + இன் + கால் = வண்டின்கால். ('வண்டுக்கால்' என்றால், 'அம்பின் அடிப்பகுதி' என, பொருள் குழப்பம் வரலாம்)

பெண்டு + கால் –> பெண்டு + இன் + கால் = பெண்டின்கால். ('பெண்டுக்கால்' என்றால், 'பெண்தன்மையுள்ளக்கால்' என, பொருள் குழப்பம் வரலாம்)

**பெண்டு 'அன்' னும் பெறுதல்**

***422. பெண்டென் கிளவிக் கன்னும் வரையார்.***

***பொருள்:*** 'பெண்டு' எனும் குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், 'அன்' எனும் சாரியையுடனும் சேர்ந்து, வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணர்வதற்கு, தடைவிதிக்க மாட்டார்கள், அறிஞர்கள்.

**எடுத்துக்காட்டு:**

*பெண்டு + கை –> பெண்டு + அன் + கை = பெண்டன்கை. (‘பெண்டின்கை’ என நிதானமாய் சொல்லும் போது, ‘பெண்டின் இனிமையான கை’ எனப் பொருள் வருவதைத் தவிர்க்க, ‘அன்’ எனும் சாரியை வருகின்றது போலும்)*

## வினாப்பெயரும் சுட்டுப் பெயரும் அன்னொடு பொருந்துதல்

***423. யாதென் இறுதியுஞ் சுட்டுமுத லாகிய***
***ஆய்த இறுதியும் உருபியல் நிலையும்.***

**பொருள்:** *‘யாது’, எனும் குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும், சுட்டெழுத்தை முதலாகவும் ஆய்த எழுத்தை இடையிலும் இறுதியில் குற்றியலுகரத்தைக் கொண்ட சொல்லும், நூற்பா 201–ன் உருபியல் விதிப்படி நடக்கும். அதாவது, ‘அன்’ எனும் சாரியை பெற்றும், ஆய்த எழுத்து கழிந்தும், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்.*

**எடுத்துக்காட்டு:**

*யாது + கோடு –> யாது + அன் + கோடு = யாதன்கோடு.*
*அஃது + கோடு –> ~~அஃது~~ + **அன்** + கோடு = அதன்கோடு.*
*இஃது + சுவடு –> ~~இஃது~~ + **அன்** + சுவடு = இதன்சுவடு.*

## அல்வழியில் ஆய்தம் கெடாமை

***424. முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி***
***மன்னல் வேண்டும் அல்வழி யான.***

*மன்னு = நிலைத்து இரு.*

**பொருள்:** *சுட்டெழுத்தை முதலாகவும் ஆய்த எழுத்தை இடையிலும் இறுதியில் குற்றியலுகரத்தையும் கொண்ட சொல்லை அடுத்து, அல்வழியில், உயிரெழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்துப் புணர்ந்தால், ஆய்த எழுத்து நிலைத்து நிற்கும்.*

**எடுத்துக்காட்டு:**

*அஃது + அடை = அஃதடை.*

*இஃது + ஆடை = இஃதாடை.*
*உஃது + இலை = உஃதிலை.*

### வன் – மென் – இடைக்கணங்கள் வருவழி ஆய்தம் கெடுதல்

***425. ஏனைமுன் வரினே தானிலை யின்றே.***

**பொருள்:** சுட்டெழுத்தை முதலாகவும் ஆய்த எழுத்தை இடையிலும் இறுதியில் குற்றியலுகரத்தையும் கொண்ட சொல்லை அடுத்து, அல்வழியில், வல்லின, மெல்லின, இடையின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்துப் புணர்ந்தால், ஆய்த எழுத்து நிலைத்து நிற்காது.

**எடுத்துக்காட்டு:**

*அஃது + கடிது = அதுகடிது.*
*இஃது + சிறிது = இதுசிறிது.*
*உஃது + தீது = உதுதீது.*
*அஃது + ஞான்றது = அது ஞான்றது.*
*இஃது + நீண்டது = இது நீண்டது.*
*உஃது + மாண்டது = உது மாண்டது.*
*அஃது + யாது = அது யாது.*
*இஃது + வலிது = இது வலிது.*

### குற்றியலுகரம் அல்வழியில் இயல்பாதல்

***426. அல்லது கிளப்பின் எல்லா மொழியும்***
***சொல்லிய பண்பின் இயற்கை யாகும்.***

**பொருள்:** அல்வழியில் புணரும்போது, எல்லா வகையான குற்றியலுகரச் சொற்களுக்கும், மேலே கூறிய தன்மையே இயல் பாகும். அதாவது, இயல்பாய்ப் புணரும்.

**விளக்கம்:** வன்தொடர்மொழி, அல்வழியில் புணர்வது, விதி விலக்காக, அடுத்த நூற்பாவில் வருகின்றது.

**எடுத்துக்காட்டு:**

*ஆடு + கடிது = ஆடுகடிது.*
*அடகு + கடிது = அடகுகடிது.*
*அல்கு + கடிது = அல்குகடிது.*

*எஃகு + கடிது = எஃகுகடிது*
*குன்று + கடிது = குன்றுகடிது.*

### வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரம் வன்கணம் வருவழி வன்கணம் மிகுதல்

***427. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.***

**பொருள்:** வல்லின ஒற்றெழுத்தை இடையில் கொண்ட, குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன், அல்வழியில், புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து கூடும்.

***விளக்கம்:*** *நூற்பா 415–ல், வன்தொடர்மொழி, வேற்றுமைப் பொருளில் வருகின்றது.*

**எடுத்துக்காட்டு:**

*சுக்கு + கடிது = சுக்குக்கடிது.*

### ஆங்கு, ஈங்கு, ஊங்கு, யாங்கு ஆகியவை அன்னவாதல்

***428. சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்***
***யாவினா முதலிய மென்றொடர் மொழியும்***
***ஆயியல் திரியா வல்லெழுத் தியற்கை.***

**பொருள்:** *'ஆங்கு', 'ஈங்கு', 'ஊங்கு' என நீண்ட, சுட்டு மென்றொடர் சொல்லும், 'யா' எனும் வினா எழுத்தை முதலாய்க் கொண்ட, 'யாங்கு' எனும் மென்றொடர்ச் சொல்லும், மேற்கூறிய, வல்லின ஒற்றெழுத்து கூடும் இயல்பிலிருந்து, மாறாது.*

**எடுத்துக்காட்டு:**

*ஆங்கு + கண்டான் = ஆங்குக்கண்டான்.*
*ஈங்கு + சென்றான் = ஈங்குச்சென்றான்.*
*ஊங்கு + தந்தான் = ஊங்குத்தந்தான்.*
*யாங்கு + போனான் = யாங்குப்போனான்?.*

### 'யாங்கு', இயல்பும் ஆதல்

***429. யாவினா மொழியே இயல்பு மாகும்.***

***பொருள்:*** ‘யா’ எனும் வினா எழுத்தை முதலாய்க் கொண்ட, ‘யாங்கு’ எனும் மென்றொடர்ச் சொல், வல்லின ஒற்றெழுத்து கூடாமல், இயல்பாயும் புணரும்.

***எடுத்துக்காட்டு:***

*யாங்கு + கண்டான் = யாங்கு கண்டான்?*

*அழுத்தம், ‘யாங்கு’ வில் இருந்தால், வல்லின ஒற்றெழுத்து கூடும். அழுத்தம், ‘போனான்’ அல்லது ‘கண்டான்’ இல் நின்றால், வல்லின ஒற்றெழுத்து கூடாது.*

### நான்மொழியும் மென்கணம் திரியாமை

***430. அந்நான் மொழியுந் தந்நிலை திரியா.***

***பொருள்:*** அந்த நான்கு சொற்களும் தம்நிலையிலிருந்து மாறாது.

விளக்கம்: ‘அங்கு’, ‘இங்கு’, ‘உங்கு’, ‘எங்கு’ அல்லது ‘ஆங்கு’, ‘ஈங்கு’, ‘ஊங்கு’, ‘யாங்கு’ ஆகிய, அந்த நான்கு மென்றொடர்ச் சொற்களின் ஒற்றெழுத்துகள், வல்லின ஒற்றெழுத்துகளாக மாறாது.

***எடுத்துக்காட்டு:***

*அங்கு + கண்டான் = அங்குக்கண்டான்.*
*இங்கு + சென்றான் = இங்குச்சென்றான்.*
*உங்கு + தந்தான் = உங்குத்தந்தான்.*
*எங்கு + போனான் = எங்குப்போனான்?*

*‘அங்குக்கண்டான்’, ‘ஆங்குச்சென்றான்’ என வல்லின ஒற்றெழுத்து, புணரும் சொற்களுக்கு இடையில் கூடினாலும், 415 நூற்பாவில் கூறியபடி, ‘ங்’ எனும் மெல்லின ஒற்றெழுத்து, ‘க்‘ எனும் வல்லின ஒற்றெழுத்தாக மாறாது. ஏனெனில், அப்படி மாறினால், ‘அக்குக்கண்டான்’, ‘ஆக்குச்சென்றான்’ என வந்து, பொருள் மாற்றங்களைத் தந்து விடும்.*

### ‘உண்டு’ எனும் மென்றொடர் மொழி வல்லின முதன்மொழி வருவழி முடியுமாறு

***431. உண்டென் கிளவி உண்மை செப்பின்***
***முந்தை இறுதி மெய்யொடுங் கெடுதலும்***

**மேனிலை யொற்றே ளகாராம் ஆதலும்**
**ஆமுறை யிரண்டும் உரிமையும் உடைத்தே**
**வல்லெழுத்து வரூஉங் காலை யான.**

உண்மை = உள் + மை. அகத்தின் வண்ணம்.

**பொருள்:** வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வருமொழியாக வந்தால், 'உண்டு' எனும் குற்றியலுகரத்தை இறுதியாய்க் கொண்ட சொல், 'இருத்தல்' அல்லது 'உள்ளது' எனும் பொருளைக் குறித்தால், முதலில் உள்ள நிலைமொழியின், ''உ'' எனும் குற்றியலுகர இறுதி, ''ட்'' எனும் மெய்யுடன் கழியும். அதற்கு மேல் நின்றிருந்த ''ண்'' எனும் ஒற்றெழுத்து, ''ள்'' ஆகும்.

'உண்டு' என்பது, 'உண்' என்றும், 'உள்' என்றும், ஆகிய இரண்டு வகைகளிலும் திரிந்து, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரக்கூடியது. 'உண்டு', எனும் சொல், இயல்பாயும் புணரும்.

**எடுத்துக்காட்டு:**

உண்~~டு~~ + காலம் = உண்காலம்.
உண்~~டு~~ + சத்தியம் = உண்சத்தியம்.
உண்~~டு~~ + தொண்டு = உண்தொண்டு.
உண்~~டு~~ + பொருள் = உண்பொருள்.

உண்டு + காலம் –> உ~~ண்~~**ள்**~~டு~~ + காலம் = உள்காலம்.
உண்டு + சத்தியம் –> உ~~ண்~~**ள்**~~டு~~ + சத்தியம் = உள்சத்தியம்.
உண்டு + தொண்டு –> உ~~ண்~~**ள்**~~டு~~ + தொண்டு = உள்தொண்டு.
உண்டு + பொருள் –> உ~~ண்~~**ள்**~~டு~~ + பொருள் = உள்பொருள்.

உண்டு + காலம் = உண்டு காலம்.
உண்டு + சத்தியம் = உண்டு சத்தியம்.
உண்டு + தொண்டு = உண்டு தொண்டு.
உண்டு + பொருள் = உண்டு பொருள்.

## இரு திசைப்பெயர்ப் புனர்ச்சியில் ஏகாரச் சாரியை பெறுதல்

**432. இருதிசை புணரின் ஏயிடை வருமே.**

**பொருள்:** இரண்டு திசைகள் புணர்ந்தால், இடையில் ஏகாரம் வரும்.

**விளக்கம்:** இரண்டு திசைகளும், பகுதிகளும், மக்களும் ஒத்த

தன்மை உடையினர் எனப் பொருள். இத்திசையைப் போன்றதே மற்ற திசையும்.

எடுத்துக்காட்டு:

கிழக்கு + மேற்கு = கிழக்கே மேற்கு.
கிழக்கு + வடக்கு = கிழக்கே வடக்கு.
கிழக்கு + தெற்கு = கிழக்கே தெற்கு.

கிழக்கே கிழக்கு என்பதற்குப் பதில், கிழக்கு கிழக்குதான் என்பது, 'கிழக்கைப் போன்று வேறுதிசை, பகுதி, மக்கள் இல்லை', எனும் வேறு ஒரு பொருளைத் தெளிவாக்குகின்றது.

மேற்கு + கிழக்கு = மேற்கே கிழக்கு.
மேற்கு + வடக்கு = மேற்கே வடக்கு.
மேற்கு + தெற்கு = மேற்கே தெற்கு.
வடக்கு + கிழக்கு = வடக்கே கிழக்கு.
வடக்கு + மேற்கு = வடக்கே மேற்கு.
வடக்கு + தெற்கு = வடக்கே தெற்கு.
தெற்கு + கிழக்கு = தெற்கே கிழக்கு.
தெற்கு + மேற்கு = தெற்கே மேற்கு.
தெற்கு + வடக்கு = தெற்கே வடக்கு.

### அத்திசைப் பெயரொடு கோணத்திசை புணர்தல்

**433. திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் இறுதியும்**
**கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்**
**ஒற்றுமெய் திரிந்து னகார மாகும்**
**தெற்கொடு புணருங் காலை யான.**

**பொருள்:** இரண்டு திசைகளையும் தவிர்த்து, வேறு ஒரு திசையை அல்லது பொருளைக் குறித்தால், ஒற்றெழுத்தும் (க்), இறுதி எழுத்தான குற்றியலுகர மெய்யும் (கு) கழியும் திரிபுடையது, எனும் கருத்துடையவர்கள், அறிஞர்கள். 'தெற்கு' எனும் திசையுடன் புணரும்போது, றகர ஒற்றெழுத்து திரிந்து னகர ஒற்றெழுத்தாகும். இறுதி எழுத்தான குற்றியலுகர மெய் (கு), இங்கும் கழியும்.

**விளக்கம்:** மேற்கூறிய நூற்பாவில், இரண்டு திசைகளும் ஒரு தன்மையைக் குறித்தன. இந்நூற்பாவில், இரண்டு திசைத் தன்மைகளும் அற்ற வேறு ஒரு தன்மை, திசை, பகுதி, மக்கள் குறிக்கப்படுகின்றனர்.

எடுத்துக்காட்டு:

வட~~க்கு~~ + கிழக்கு –> வடகிழக்கு.
வட~~க்கு~~ + மேற்கு –> வடமேற்கு.
தெற்~~கு~~ + கிழக்கு –> தெ~~ற்~~**ன்** + கிழக்கு = தென்கிழக்கு.
தெற்~~கு~~ + மேற்கு –> தெ~~ற்~~**ன்** + மேற்கு = தென்மேற்கு.

### பத்து என்னும் எண்ணுப் பெயரொடு ஒன்று முதல் எட்டு வரை புணர்தல்

**434. ஒன்றுமுத லாக எட்ட னிறுதி**
**எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்**
**குற்றியலுகரம் மெய்யொடுங் கெடுமே**
**முற்றஇன் வரூஉம் இரண்டலங் கடையே.**

**பொருள்:** ‘இரண்டு’ வைத் தவிர, ஒன்று முதல் எட்டு வரையில் உள்ள எல்லா எண்ணும், ‘பத்து’ எனும் சொல்லை அடுத்து வந்தால், ‘பத்து’ எனும் நிலைமொழியின் குற்றியலுகரம் (உ), ‘த்’ எனும் மெய்யுடன், அதாவது, (து) கழியும். புணர்ச்சி முழுமை பெற, ‘இன்’ எனும் சாரியை, இடையில், வந்து சேரும்.

**எடுத்துக்காட்டு:**

பத்து + ஒன்று –> பத்~~து~~ + **இன்** + ஒன்று = பதினொன்று.
பத்து + மூன்று –> பத்~~து~~ + **இன்** + மூன்று = பதின்மூன்று.
பத்து + நான்கு –> பத்~~து~~ + **இன்** + நான்கு = பதினான்கு.
பத்து + ஐந்து –> பத்~~து~~ + **இன்** + ஐந்து = பதினைந்து.
பத்து + ஆறு –> பத்~~து~~ + **இன்** + ஆறு = பதினாறு.
பத்து + ஏழு –> பத்~~து~~ + **இன்** + ஏழு = பதினேழு.
பத்து + எட்டு –> பத்~~து~~ + **இன்** + எட்டு = பதினெட்டு.

‘ப்’ என்பது ‘10’ ஐக் குறிக்கும் போலும். மெய் தனித்து இயங்காது என்பதால், (அது) வேற்றுமை உருபும், (அத்து) சாரியையும் சேர்கின்றது போலும்.

ப் + அஃது = பஃது என வருகின்றது. ‘அஃது’ என்றால், ‘அது’ எனப் பொருள். எனவே, ப் + அது = ‘பது’ என்பதும் ‘10’ ஐக் குறிக்க வேண்டும். இங்கு, ‘அது’ என்பது வேற்றுமை உருபு.

பத்து என்பதில், ‘ப்’ உடன், ‘அத்து’ எனும் சாரியை, சேர்ந்தது.

‘பன்னிரண்டு’ என்பதிலும், ‘ப்’ உடன், ‘அன்’ எனும் சாரியை,

சேரும் போலும்.

**'பத்து', 'இரண்டு' வருவழி, திரிதல்**

***435. பத்தனொற் றுக்கெட னகாரம் இரட்டல்***
***ஒத்த தென்ப இரண்டுவரு காலை.***

***பொருள்:*** *'பத்து' எனும் குற்றியலுகர இறுதியைக் கொண்ட சொல்லை அடுத்து, 'இரண்டு' எனும் சொல் வரும்போது, மேலே கூறியவாறு, 'பத்து' எனும் நிலைமொழியின் குற்றியலுகரம் (உ), 'த்' எனும் மெய்யுடன், அதாவது, (து) கழிந்ததோடு அல்லாமல், தகர ஒற்றெழுத்தும் கழிந்து, னகார ஒற்றெழுத்து இரட்டிப்பது, பொருத்தமானது என்பர், அறிஞர்கள்.*

***எடுத்துக்காட்டு:***

*பத்து + இரண்டு –> ~~பத்து~~ +* ***ன்ன்*** *+ இரண்டு = பன்னிரண்டு.*

*'ப்' உடன், 'அன்' எனும் சாரியை சேர்ந்தப்பின், இரண்டு வந்தால், 'பன்னிரண்டு' என்பது இயல்பாய் வரும்.*

**பத்தன் முன்னர், ஆயிரம் வருவழியும் 'இன்' சாரியை பெறுதல்**

***436. ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது.***

***பொருள்:*** *'பத்து' எனும் குற்றியலுகர இறுதியைக் கொண்ட சொல்லை அடுத்து, 'ஆயிரம்' எனும் சொல் வந்தாலும், மேற்கூறிய, 'பத்து' எனும் நிலைமொழியின் குற்றியலுகரம் (உ), 'த்' எனும் மெய்யுடன், அதாவது, (து) கழிந்து, 'இன்' எனும் சாரியை பெறும் இயல்பு, மாறாது.*

***எடுத்துக்காட்டு:***

*பத்து + ஆயிரம் –> ~~பத்து~~ +* ***இன்*** *+ ஆயிரம் = பதினாயிரம்.*

*'பத்தாயிரம்', என்பது இன்றைய வழக்கில் உள்ளது. புரிதல், சமுதாயத்தில், தெளிவாக இருப்பின், இத்தகைய மாற்றங்கள் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். இன்றைய நாளில், 'பதினா–யிரம்' என்பதே கூட தெளிவில்லாமல் போகலாம். தொல் காப்பியத்தின்படி, 'பதினாயிரம்' என்றுதான் கூற வேண்டும் எனக் கட்டாயப் படுத்தினால், வெறுப்பும், புறக்கணிப்பும் மிஞ்சி நிற்கும்.*

***நிறைப்பெயரும் அளவுப்பெயரும் 'இன்' சாரியை பெறுதல்***

***437.** **நிறையு மளவும் வரூஉங் காலையும்***
***குறையா தாகும் இன்னென் சாரியை.***

***பொருள்:*** *'பத்து' எனும் குற்றியலுகர இறுதியைக் கொண்ட சொல்லை அடுத்து, நிறைப்பெயரும், அளவுப்பெயரும் வரும்போதும், 'இன்' எனும் சாரியை, போய்விடாமல், வந்து சேரும்.*

***விளக்கம்:*** *'பத்து' எனும் நிலைமொழியின் குற்றியலுகரம் (உ), 'த்' எனும் மெய்யுடன், அதாவது, (து) கழியும். பின், 'இன்' எனும் சாரியை சேர்ந்து, வருமொழியுடன் புணரும்.*

***எடுத்துக்காட்டு:***

*பத்து + கழஞ்சு –> பத்* + **இன்** *+ கழஞ்சு = பதின்கழஞ்சு.*

*பத்து + உழக்கு –> பத்* + **இன்** *+ உழக்கு = பதினுழக்கு.*

***'பத்து', இடையொற்றுக்கெட ஆய்தமாதல்***

***438.** **ஒன்றுமுத லொன்பான் இறுதி முன்னர்***
***நின்ற பத்த னொற்றுக்கெட ஆய்தம்***
***வந்திடை நிலையும் இயற்கைத் தென்ப***
***கூறிய இயற்கைக் குற்றிய லுகரம்***
***ஆற னிறுதி அல்வழி யான.***

*ஒன்பான் = ஒன் + ப் + ஆன். ஒன்று சேர்ந்தால் பத்து ஆகும். ஒன்பது.*

*ஆறனிறுதி அல்வழியான = ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, எட்டு ஆகிய ஆறு எண்களின் இறுதி (குற்றியலுகரம்) இல்லாமல் போனால்.*

***பொருள்:*** *ஒன்று முதல் ஒன்பது வரை உள்ள குற்றியலுகர இறுதியைக் கொண்ட எண்ணுப் பெயரை அடுத்து, 'பத்து' எனும் எண்ணுப் பெயர் வந்தால், அந்த 'பத்து' வின் ஒற்றெழுத்து கழிய, அங்கு, ஆய்த எழுத்து இடையில் வந்து நிற்கும் இயல்பை உடையது என்பர், அறிஞர்கள். கூறிய இயல்பிற்கு, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, எட்டு ஆகிய ஆறு எண்களின், இறுதிக் குற்றியலுகரம்*

இல்லாமல் போக வேண்டும்.

**விளக்கம்:** ‘ஆறு’ என்பதன் குற்றியலுகர இறுதி கழிவதில்லை. ‘ஏழ்’ என்பது ‘எழு’ வாதல், 390வது நூற்பாவில் கண்டோம். ‘ஒன்பது + பத்து’ விற்கு, வேறு விதி உள்ளதால், மேற்கூறிய ஆறு எண்களுக்கு மட்டுமே, குற்றியலுகர இறுதி இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

பத்து –> பஃது.

‘பஃது’ (ப் + அஃது) என்பதும், ‘பது’ (ப் + அது) என்பதும், அடிப்படையில் ஒன்றாயினும், ‘பது’, எனக் கூறுகையில், ‘ப்’ என்பதில் அழுத்தம் மிகுவதில்லை. ஆனால், ‘பஃது’, எனக் கூறுகையில், ‘ப்’ என்பதில் அழுத்தம் மிகுகின்றது. ஏற்கனவே கூறியப்படி, ‘ப்’ என்பதே, ‘10’ ஐக் குறிப்பதால், ‘ப்’ இல், அழுத்தம் வேண்டி, ‘பஃது’ எனும் பெயருக்கு, முக்கியத்துவம் தரப்பட்டிருக்கலாம்.

இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது என்பன, இன்று, ஏற்றுக் கொள்ளப்பட்ட வழக்காய் உள்ளது.

**ஒன்று இரண்டு என்பன ஒரு இரு எனத் திரிதல்**

**439 & 440.** **முதலீ ரெண்ணினொற்று ரகரம் ஆகும்
உகரம் வருதல் ஆவயி னான.
இடைநிலை ரகரம் இரண்டென் எண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான.**

**பொருள்:** முதல் இரண்டு எண்களான, ‘ஒன்று’, ‘இரண்டு’ ஆகியவற்றின் ஒற்றெழுத்துகளான ‘ன்’ மற்றும் ‘ண்’, ரகர ஒற்றெ ழுத்தாக மாறும். அவ்விடத்தில் உகரம் வரும்.

‘இரண்டு’ எனும் எண்ணின் இடையில், ஏற்கனவே உள்ள ரகரம், பொருள் வரும் இடத்தில், அவசியம் இன்றி, போய்விடும்.

‘ஒன்று’ வின் குற்றியலுகர ‘று’ வும், ‘இரண்டு’ வின் குற்றியலுகர ‘டு’ வும், நூற்பா 438– ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

ஒன்று + பஃது –> ஒ~~ன்~~ர் + உ + பஃது = ஒருபஃது.

*இரண்டு + பஃது -> இ~~ரண்~~**ர்** + **உ** + பஃது = இருபஃது.*
*பத்து, இருபது என்றே பொது வழக்கில் உள்ளது.*

### மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகுதலும், மூன்றன் னகரம் பகரம் ஆதலும்

***441.*** **மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்**
**மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும்.**

**பொருள்:** *'மூன்று' வின் மற்றும் 'ஆறு' வின் முதல் எழுத்தான 'மூ', 'ஆ' எனும் நெட்டெழுத்துகள் முறையே 'மு' என்றும் 'அ' என்றும் குறுகும். மேலும், 'மூன்று' வின் ஒற்றெழுத்தான 'ன்', 'ப்' ஆகும்.*

**விளக்கம்:** *'மூன்று' வின் குற்றியலுகர 'று', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.*

*எடுத்துக்காட்டு:*

*மூன்று + பஃது -> ~~மூ~~**மு** + ~~ன்~~**ப்** + பஃது = முப்பஃது.*
*ஆறு + பஃது -> ~~ஆ~~**அ**று + பஃது = அறுபஃது.*
*முப்பது, அறுபது என்றே பொது வழக்கில் உள்ளது.*

### நான்கன் னகரம் றகரம் ஆதல்

***442.*** **நான்க னொற்றே றகாரம் ஆகும்.**

**பொருள்:** *'நான்கு' வின் 'ன்' எனும் ஒற்றெழுத்து, 'ற்' என மாறும்.*

**விளக்கம்:** *'நான்கு' வின் குற்றியலுகர 'கு', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.*

**எடுத்துக்காட்டு:**

*நான்~~கு~~ + பஃது -> நா~~ன்~~**ற்** + பஃது = நாற்பஃது.*
*நாற்பது என்றே பொது வழக்கில் உள்ளது.*

### ஐந்தன் ஒற்று மகரம் ஆதல்

***443.*** **ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும்.**

**பொருள்:** 'ஐந்து' வின் 'ந்' எனும் ஒற்றெழுத்து, 'ம்' என மாறும்.

விளக்கம்: 'ஐந்து' வின் குற்றியலுகர 'து', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

ஐந்து + பஃது –> ஐந்ம் + பஃது = ஐம்பஃது.

ஐம்பது என்றே பொது வழக்கில் உள்ளது.

**எட்டன் ஒற்று ணகரம் ஆதல்**

**444. எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும்.**

**பொருள்:** 'எட்டு' வின் 'ட்' எனும் ஒற்றெழுத்து, 'ண்' என மாறும்.

**விளக்கம்:** 'எட்டு' வின் குற்றியலுகர 'டு', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

எட்டு + பஃது –> எட்ண் + பஃது = எண்பஃது.

எண்பது என்றே பொது வழக்கில் உள்ளது.

**ஒன்பது பத்து, தொண்ணூறு ஆதல்**

**445. ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்**
**முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்**
**பஃதென் கிளவி யாய்தபக ரங்கெட**
**நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி**
**ஒற்றிய தகரம் றகாரம் ஆகும்.**

**பொருள்:** 'ஒன்பது' வின் ஒகரத்திற்கு முன்பு தகர ஒற்றெழுத்தான 'த்' ஒட்டும். முன்பிருந்த ஒற்றெழுத்தான 'ன்', 'ண்ண்' என இரட்டிக்கும். பஃது எனும் சொல்லின் ஆய்த எழுத்தும், பகர எழுத்தும் கழிய, அவ்விடத்தில், 'ஊ' எனும் சொல், நிற்க வேண்டும். தனித்து நின்ற 'து', 'று' என மாறும்.

**எடுத்துக்காட்டு:**

ஒன்பது + பஃது –> **த்ஒ** + **~~ன்~~ண்ண்** + **~~பஃ~~ஊ** + **~~து~~று** = தொண்ணூறு.

‘ஒன்பது பத்து’ என்பது, எப்படி ‘தொண்ணூறு’ என ஆக்கப்படுகின்றது என்று காட்டினாரே தவிர, ஏன் அப்படி ஆக்கப்பட்டது என்பதற்கான காரணம் கூறவில்லை. மேலும், ‘ஒன்பது’ வில், ‘பது’ எப்படிக் கழிந்தது எனும் தெளிவில்லை.

ஒரு வேளை, ‘ஒன்’ என்பதே ‘ஒன்பதை’க் குறித்ததா? அப்படி இருந்தால் மட்டுமே, இந்நூற்பா முழுமை அடையும். ‘ஒன்பான்’ என்பதை ‘ஒன் + ப் + ஆன்’ எனப்பிரித்து, ‘ஒன்றால் பத்தாவது’ எனப் பொருள் கூறுவது ஏற்புடையதா?

‘ஒன்பது’, ‘தொண்ணூறு’, ‘தொள்ளாயிரம்‘ போன்றவை, ஏன் அப்படி ஆக்கப்பட்டன என்று, புலவர் சுந்தர சண்முகனார், ‘தமிழ் இலத்தீன் பாலம்‘ எனும் நூலில் எழுதியுள்ளார். அந்தக் கட்டுரை, ‘தொண்ணூறும் தொள்ளாயிரமும்‘ எனும் தலைப்பில், முனைவர். பொற்கோ அவர்கள் பதிப்பிக்கும் தமிழியல் ஆராய்ச்சி, தொகுதி – 28 ல், முக்கியத்துவம் கருதியும், மூல ஆய்வு நோக்கிலும், மீண்டும் வெளிவந்துள்ளது.

இலத்தீன் எண்களான மி, நீ, சி , வி ஆகியவை, முறையே ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் ஆகியவற்றைக் குறிக்கின்றன. ஒன்பது என்பதை மிநீ என்றும், ‘தொண்ணூறு’ என்பதை நீசி என்றும், ‘தொள்ளாயிரம்‘ என்பதை சிவி என்றும் எழுதப்படுகின்றது.

அதே அளவை அடிப்படையில், ‘ஒன்று குறைந்த பத்து’, ஒன்று + பத்து = ஒன்பது என ஆனதென்றும், ‘ஒரு பகுதி குறைந்த நூறு’ என்னும் பொருள்பட, தொள் + நூறு = ‘தொண்ணூறு’ என வருகின்றது என்றும், ‘ஒரு பகுதி குறைந்த ஆயிரம்‘ என்னும் பொருள்பட, தொள் + ஆயிரம் = ‘தொள்ளாயிரம்‘ என வருகின்றது என்றும் நிறுவியுள்ளார். ‘தொள்’ என்றால், துளைக்கப்பட்டது மற்றும் குறைவுபட்டது என்றும் பொருள் நாட்டுகின்றார்.

## ஒன்று முதல் ஒன்பதுவரை நிலைமொழியாக நிற்ப, அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு

**446. அளந்தறி கிளவியும் நிறையென் கிளவியும்**
**கிளந்த இயல தோன்றும் காலை.**

***பொருள்:*** ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்ணுப் பெயரை அடுத்து, அளவுப்பெயர்ச் சொல்லும், நிறைப்பெயர்ச் சொல்லும் வந்தால், மேலே (நூற்பா 445–ல்) கூறிய இயல்பின்படி நடக்கும்.

**எடுத்துக்காட்டு:**

*ஒன்று + கலம் = ஒருகலம்.*
*இரண்டு + சாடி = இருசாடி.*
*மூன்று + தூதை = முத்தூதை (முப்பஃது என்பதற்கு பகர ஒற்றைப்போல், தகர ஒற்று. 447 வது நூற்பாவைக் காண்க.)*
*நான்கு + பானை = நாற்பானை.*
*ஐந்து + நாழி = ஐந்நாழி (451 வது நூற்பாவைக் காண்க.)*
*ஆறு + மண்டை = அறுமண்டை.*
*ஏழ் + வட்டி = எழுவட்டி.*
*எட்டு + கழஞ்சு = எண்கழஞ்சு.*
*ஒன்பது + தொடி = ஒன்பதுதொடி.*

### மூன்றன் னகரம் வந்த ஒற்றாய்த் திரிதல்

***447. மூன்றன் ஒற்றே வந்த தொக்கும்.***

***பொருள்:*** ‘மூன்று’ என்பதன் ஒற்றெழுத்து, வருமொழியின் முதல் எழுத்திற்கு ஏற்றாற்போல் மாறும்.

***விளக்கம்:*** ‘மூன்று’ வின் குற்றியலுகர ‘று’, நூற்பா 438–ன் படி இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

*மூன்~~று~~ + கலம் –> மு~~ன்~~**க்** + கலம் = முக்கலம்.*
*மூன்~~று~~ + சாடி –> மு~~ன்~~**ச்** + சாடி = முச்சாடி.*
*மூன்~~று~~ + தூதை –> மு~~ன்~~**த்** + தூதை = முத்தூதை.*
*மூன்~~று~~ + பலம் –> மு~~ன்~~**ப்** + பலம் = முப்பலம்.*

### ஐந்தன் நகரம் வன்கணத்திற்கு ஏற்ற மென்கணமாய் திரிதல்

***448. ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும்***
***449. கசதப முதன்மொழி வரூஉங் காலை.***

***பொருள்:*** ‘ஐந்து’ என்பதன் ஒற்றெழுத்து, வருமொழி க, ச, த, ப எனும் வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லாக வந்தால், அவ்வல்லினத்திற்கு ஏற்ற மெல்லின ஒற்றெழுத்தாக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

*ஐந்~~து~~ + கலம் –> ஐ~~ந்~~**ங்** + கலம் = ஐங்கலம்.*
*ஐந்~~து~~ + சாடி –> ஐ~~ந்~~**ஞ்** + சாடி = ஐஞ்சாடி.*

*ஐந்து + தொடி –> ஐந்ந் + தொடி = ஐந்தொடி.*
*ஐந்து + பானை –> ஐந்**ம்** + பானை = ஐம்பானை.*

*நூற்பா 447–இன் பொருள், 'மூன்று' எனும் எண்ணுப்பெயரை அடுத்து வரும், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட அளவு / நிறைப்பெயருக்குப் பொருந்தும்.*

*நூற்பா 449–இன் பொருள், 'ஐந்து' எனும் எண்ணுப்பெயருக்கு மட்டுமே பொருந்தும், 'மூன்று' விற்கு அல்ல.*

*விளக்கம்: 'ஐந்து' வின் குற்றியலுகர 'து', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.*

**மென்கணமும் உயிர்க்கணமும் வருவழி எட்டு, எண் எனவே நிற்றல்**

***450. நமவ என்னும் மூன்றொடு சிவணி***
***அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே.***

*சிவணி = சேர்ந்து.*

***பொருள்:*** *'எட்டு' எனும் எண்ணுப்பெயரை அடுத்து, ந, ம, வ ஆகிய மூன்று மெல்லின, இடையின எழுத்துடன், 'அ' எனும் உயிரெழுத்தும், வருமொழியின் முதலில் வந்தால், முன்பு கூறிய இயல்பான, 'ட்' எனும் ஒற்றெழுத்து, 'ண்' எனும் ஒற்றெழுத்தாய் மாறும்.*

***விளக்கம்:*** *'எட்டு' வின் குற்றியலுகர 'டு', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.*

***எடுத்துக்காட்டு:***

*எட்~~டு~~ + நாழி –> எ~~ட்~~**ண்** + நாழி = எண்நாழி.*
*எட்~~டு~~ + மண்டை –> எ~~ட்~~**ண்** + மண்டை = எண்மண்டை.*
*எட்~~டு~~ + வட்டி –> எ~~ட்~~**ண்** + வட்டி = எண்வட்டி.*
*எட்~~டு~~ + அகல் –> எ~~ட்~~**ண்** + அகல் = எண்அகல் –> எண்ணகல்.*

**ஐந்து, மூன்று – இவற்றின் இடையொற்று ந ம வருவழி , அவ்வந்த ஒற்றாகவே திரிதல்**

***451. ஐந்தும் மூன்றும் நமவருங் காலை***
***வந்த தொக்கும் ஒற்றியல் நிலையே.***

**பொருள்:** 'ஐந்து' எனும் எண்ணையும், 'மூன்று' எனும் எண்ணையும் அடுத்து, நகார, மகார எழுத்தை முதலாய்க் கொண்ட சொல் வந்தால், அவ்வெண்களின் 'ந்' மற்றும் 'ன்' எனும் ஒற்றெழுத்துகள், வந்த எழுத்தின் ஒற்றெழுத்தாய் மாறும்.

**விளக்கம்:** 'ஐந்து', 'மூன்று' வின் குற்றியலுகர 'து', 'று', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

நூற்பா 441–ன் படி, 'மூன்று' வின் முதல் நெட்டெழுத்து 'மூ', 'மு'வாகக் குறுகும்.

**எடுத்துக்காட்டு:**

ஐந்~~து~~ + நாழி –> **ஐந்ந்** + நாழி = ஐந்நாழி.
ஐந்~~து~~ + மண்டை –> **ஐ~~ந்~~ம்** + மண்டை = ஐம்மண்டை.
மூன்~~று~~ + நாழி –> **மு~~ன்~~ந்** + நாழி = முந்நாழி.
மூன்~~று~~ + மண்டை –> **மு~~ன்~~ம்** + மண்டை = மும்மண்டை.

### மூன்றன் ஒற்று வகரம் வருவழி அவ்வகரமாகத் திரிதல்

**452. மூன்றனொற்றே வகாரம் வருவழித்**
**தோன்றிய வகாரத் துருவா கும்மே.**

**பொருள்:** வகாரத்தை முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'மூன்று' எனும் எண்ணின் ஒற்றெழுத்தான 'ன்', வகார ஒற்றெழுத்தான 'வ்' ஆக மாறும்.

**எடுத்துக்காட்டு:**

மூன்~~று~~ + வட்டி –> **மு~~ன்~~வ்** + வட்டி = முவ்வட்டி.

விளக்கம்: 'மூன்று' வின் குற்றியலுகர 'று', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

### நான்கன் ஒற்று வகரம் வருவழி லகரமாதல்

**453. நான்க னொற்றே லகார மாகும்.**

**பொருள்:** வகாரத்தை முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'நான்கு' எனும் எண்ணின் ஒற்றெழுத்தான 'ன்', 'ல்' ஆக மாறும்.

**விளக்கம்:** 'நான்கு' வின் குற்றியலுகர 'கு', நூற்பா 438–ன் படி,

ஏற்கனவே, இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

நான்கு + வட்டி = நான்ல் + வட்டி = நால்வட்டி.

**வகரம் வருவழி, ஐந்தன் நகரவொற்றுக் கெடுதல்**

**454. ஐந்தனொற்றே முந்தையது கெடுமே.**

**பொருள்:** வகாரத்தை முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'ஐந்து' எனும் எண்ணின், கடைசியில் (நூற்பா 438–ன் படி, இறுதிக் குற்றியலுகர 'து', இல்லாமல் போகின்றது), நிற்கும் ஒற்றெழுத்தான 'ந்', கழியும்.

**எடுத்துக்காட்டு:**

ஐந்து + வட்டி –> ஐந் + வட்டி = ஐவட்டி.

**ஒன்று இரண்டு, உயிர்க்கணம் வருவழி, ஓர் ஈர் ஆதல்**

**455. முதலீ ரெண்ணின் உயிர்வரு காலைத்**
**தவலென மொழிப உகரக் கிளவி**
**முதனிலை நீடல் ஆவயி னான.**

**பொருள்:** உயிர் எழுத்தை, முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், முதல் இரண்டு எண்களான, 'ஒன்று', 'இரண்டு' ஆகியவற்றின் (நூற்பாக்கள் 439 & 440–ன் படி) உகரச் சொற்களான, 'ஒரு', 'இரு' , 'ஒர்', 'இர்' எனக் குறையும், அவ்விடத்தில், முதல் எழுத்தான, 'ஒ', 'இ' என்பன 'ஓ', 'ஈ' என நீளும், என்பர் அறிஞர்.

**எடுத்துக்காட்டு:**

ஒரு + அகல் –> ஒரு**ர்** + அகல் –> ஒஓர் + அகல் = ஓரகல்.
ஒரு + உழக்கு –> ஒரு**ர்** + உழக்கு –>ஒஓர் + உழக்கு = ஒருழக்கு
இரு + அகல் –> இரு**ர்** + அகல் –> இஈர் + அகல் = ஈரகல்.
இரு + உழக்கு –> இரு**ர்** + உழக்கு –>இஈர் + உழக்கு = ஈருழக்கு.

**உயிர்வருவழி மூன்று நான்கு ஐந்து என்பன வகரம் வருவழிப்போல் திரிதல்**

**456. மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்**
**தோன்றிய வகரத் தியற்கை யாகும்.**

***பொருள்:*** *உயிர் எழுத்தை, முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'மூன்று', 'நான்கு', 'ஐந்து' எனும் சொற்கள், வகரத்தை முதல் எழுத்தாய்க் கொண்ட சொல் வந்ததைப் போன்ற இயல்புடன் நடக்கும்.*

*அதாவது,*

*1. 'மூன்று' எனும் எண்ணின் ஒற்றெழுத்தான 'ன்', வகார ஒற்றெழுத்தான 'வ்' ஆக மாறும். (நூற்பா 452)*

*2. 'நான்கு' எனும் எண்ணின் ஒற்றெழுத்தான 'ன்', 'ல்' ஆக மாறும். (நூற்பா 453)*

*3. 'ஐந்து' எனும் எண்ணின் , ஒற்றெழுத்தான 'ந்', கழியும். (நூற்பா 454)*

**எடுத்துக்காட்டு:**

*மூன்~~று~~ + அகல் –> மு~~ன்~~**வ்** + அகல் = முவ்வகல்.*
*மூன்~~று~~ + உழக்கு –>மு~~ன்~~**வ்** + உழக்கு = முவ்வுழக்கு.*
*நான்~~கு~~ + அகல் –> நா~~ன்~~**ல்** + அகல் = நாலகல்.*
*நான்~~கு~~ + உழக்கு –> நா~~ன்~~**ல்** + உழக்கு = நாலுழக்கு.*
*ஐந்~~து~~ + அகல் –> ஐ~~ந்~~ + அகல் = ஐயகல்.*
*ஐந்~~து~~ + உழக்கு –> ஐ~~ந்~~ + உழக்கு = ஐயுழக்கு.*

**உழக்கு வருவழி, பொது விதியான் குறுகிநின்ற மூன்று நீண்டு முடிதலும் உரித்து**

**457. மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே**
**உழக்கென் கிளவி வழக்கத் தான.**

***பொருள்:*** *'உழக்கு' எனும் சொல் வருமொழியாய் வரும்போது, 'மூன்று' எனும் எண்ணின் குறுகிய வடிவமான முதல் எழுத்து, 'மு', மீண்டும் 'மூ' என நீள்வதும், வழக்கில் உள்ளது.*

**எடுத்துக்காட்டு:**

*மூன்~~று~~ + உழக்கு –> ~~மு~~**மூ**~~ன்~~**வ்** + உழக்கு = மூவுழக்கு.*

### *குறுகி நின்ற ஆறு நீண்டு முடிதல்*

***458. ஆறென் கிளவி முதல்நீ டும்மே.***

**பொருள்:** *உயிர் எழுத்தை, முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'ஆறு' எனும் சொல்லின் குறுகிய வடிவமான முதல் எழுத்து, 'அ', மீண்டும் 'ஆ' என நீளும்.*

**எடுத்துக்காட்டு:**

*ஆறு + அகல் –> ~~அ~~**ஆ**று + அகல் = ஆறகல்.*
*ஆறு + உழக்கு –> ~~அ~~**ஆ**று + உழக்கு = ஆறுழக்கு.*

### 'ஒன்பது', நாற்கணமும் வருவழி, 'இன்' பெற்று முடிதல்

***459. ஒன்பானிறுதி உருவுநிலை திரியாது***
***இன்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே.***

**பொருள்:** *வல்லின, மெல்லின, இடையின, உயிர் எழுத்தை, முதல் எழுத்தாய்க் கொண்ட சொல், வருமொழியாய் வந்தால், 'ஒன்பது' எனும் எண்ணின் உருவம், நிலை மாறாமல், 'இன்' எனும் சாரியை சொல்லைப் பெறவேண்டும்.*

**எடுத்துக்காட்டு:**

*ஒன்பது + கலம் –> ஒன்பது + இன் + கலம் = ஒன்பதின்கலம்.*
*ஒன்பது + சாடி –> ஒன்பது + இன் + சாடி = ஒன்பதின்சாடி.*
*ஒன்பது + தூதை –> ஒன்பது + இன் + தூதை = ஒன்பதின்தூதை.*
*ஒன்பது + பானை –> ஒன்பது + இன் + பானை = ஒன்பதின்பானை.*
*ஒன்பது + நாழி –> ஒன்பது + இன் + நாழி = ஒன்பதின்நாழி.*
*ஒன்பது + மண்டை –> ஒன்பது + இன் + மண்டை = ஒன்பதின்மண்டை.*
*ஒன்பது + வட்டி –> ஒன்பது + இன் + வட்டி = ஒன்பதின்வட்டி.*
*ஒன்பது + அகல் –> ஒன்பது + இன் + அகல் = ஒன்பதினகல் = ஒன்பதிற்றகல்.*
*ஒன்பது + உழக்கு –> ஒன்பது + இன் + உழக்கு = ஒன்பதினுழக்கு = ஒன்பதிற்றுழக்கு.*

**_'நூறு' வருவழி, ஒன்று முதல் ஒன்பான்கள், முற்கூறிய தன்மையவாதல்_**

**_460. நூறுமுன் வரினுங் கூறிய இயல்பே._**

**_பொருள்:_** _'ஒன்று' முதல் 'ஒன்பது' வரையிலான எண்ணுப் பெயர்களை அடுத்து, 'நூறு' எனும் சொல் வந்தாலும், மேலே கூறிய இயல்புப்படி நடக்கும். அதாவது, 'ஒன்று', 'ஒரு' என்றும், 'இரண்டு', 'இரு' என்றும், 'ஆறு', 'அறு' என்றும், 'ஏழ்', 'எழு' என்றும், 'எட்டு', 'எண்' என்றும் மாறும்._

**_எடுத்துக்காட்டு:_**

_ஒன்று + நூறு = ஒருநூறு._
_இரண்டு + நூறு = இருநூறு._
_ஆறு + நூறு = அறுநூறு._
_ஏழ் + நூறு = எழுநூறு._
_எட்டு + நூறு = எண்ணூறு._

**_மூன்றன் ஒற்று நகாரம் ஆதல்_**

**_461. மூன்ற னொற்றே நகாரம் ஆகும்._**

**_பொருள்:_** _'மூன்று' எனும் எண்ணுப்பெயரை அடுத்து, 'நூறு' எனும் சொல் வந்தால், 'ன்' எனும் ஒற்றெழுத்து, 'ந்' என மாறும்._

_விளக்கம்: 'மூன்று' வின் குற்றியலுகர 'று', நூற்பா 438–ன் படி, ஏற்கனவே, இல்லாமல் போகின்றது._

_நூற்பா 441–ன் படி, 'மூன்று' வின், முதல் எழுத்தான 'மூ' எனும் நெட்டெழுத்து, 'மு' என்று குறுகும்._

**_எடுத்துக்காட்டு:_**

_மூன்~~று~~ + நூறு = மு~~ன்~~ந் + நூறு = முந்நூறு._

**_நான்கும் ஐந்தும் ஒற்றுத் திரியாமை_**

**_462. நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா._**

**_பொருள்:_** _'நான்கு', 'ஐந்து' எனும் எண்ணுப்பெயரை அடுத்து, 'நூறு' எனும் சொல் வந்தால், முறையே 'ன்', 'ந்' எனும் ஒற்றெழுத்தின் வடிவம் மாறாது._

***விளக்கம்:*** *'நான்கு' வின் குற்றியலுகர 'கு'வும், 'ஐந்து' வின் குற்றியலுகர 'து' வும், நூற்பா 438–ன் படி இல்லாமல் போகின்றது.*

***எடுத்துக்காட்டு:***

*நான்கு + நூறு = நான் + நூறு = நானூறு.*
*ஐந்து + நூறு = ஐந் + நூறு = ஐந்நூறு.*

### ஒன்பதன் முன்னர் நூறு புணர்தல்

***463. ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே***
***முந்தை யொற்றே ளகாரம் இரட்டும்***
***நூறென் கிளவி நகார மெய்கெட***
***ஊஆ வாகும் இயற்கைத் தென்ப***
***ஆயிடை வருதல் இகார ரகாரம்***
***ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒற்றும்.***

***பொருள்:*** *'ஒன்பது'– வின், முன்னால் நிற்கும் எழுத்து, முன்பு கூறியதைப் போன்றதே, அதாவது, 'ஒன்பது' வின் ஒகரத்திற்கு முன்பு தகர ஒற்றெழுத்தான 'த்' ஒட்டும். முன்பிருந்த ஒற்றெழுத்தான 'ன்', 'ள்ள்' என இரட்டிக்கும். 'நூறு' எனும் சொல்லின் நகார ஒற்றெழுத்து கழிய, 'ஊ' என்பது 'ஆ' ஆக மாறும் இயல்புடையது என்பர் அறிஞர். அவ்விடத்தில், 'இர' வர வேண்டும். இறுதி மெய்யெழுத்தான 'று' வைக் கழித்து, 'ம்' ஒட்டும்.*

***எடுத்துக்காட்டு:***

*ஒன்பது + நூறு –> **த்ஒ** + **~~ன்~~ள்ள்** + **~~ந்ஊ~~ஆ** + **இர** + **~~று~~ம்** = தொள்ளாயிரம்.*

*இங்கும், 'ஒன்பது' வின் 'பது' எப்படி கழிந்தது எனும் தெளி வில்லை.*

*'தொண்ணூறு' மற்றும் 'தொள்ளாயிரம்' என்பதற்கான விளக்கங் களை, நூற்பா 445–ன் எடுத்துக்காட்டு உரையில் காணவும்.*

### ஒன்று இரண்டு முன் ஆயிரம்

***464. ஆயிரக் கிளவி வரூஉங் காலை***
***முதலீ ரெண்ணின் உகரங் கெடுமே.***

***பொருள்:*** *முதல் இரண்டு எண்ணுப் பெயர்களை அடுத்து*

‘ஆயிரம்‘ எனும் சொல் வந்தால், ‘ஒரு’, ‘இரு’ என்பனவற்றின், உகரம் கழியும்.

**எடுத்துக்காட்டு:**

*ஒரு + ஆயிரம் –> ஒரு – உ + ஆயிரம் = ஓர் + ஆயிரம் = ஓரா–யிரம்.*

*இரு + ஆயிரம் –> இரு – உ + ஆயிரம் = இர் + ஆயிரம் = இராயிரம்.*

*இயல்பாய் புணர்ந்தால், ஒரு + ஆயிரம் = ஒருவாயிரம் என ஆகும். அது, ஒருவு + ஆயிரம் என வந்து, பொருள் மாறி விடும். எனவே, இத்திரிபு.*

**ஒகர இகரங்கள் நீடலும் உண்டு.**

***465. முதனிலை நீடினும் மான மில்லை.***

***பொருள்:*** முதல் இரண்டு எண்ணுப் பெயர்களை அடுத்து ‘ஆயிரம்‘ எனும் சொல் வந்தால், ‘ஒர்’, ‘இர்’ என்பதன் முதல் எழுத்து, ‘ஓ’, ‘ஈ’ என நெட்டெழுத்தாய் ஆனாலும் தவறில்லை.

**எடுத்துக்காட்டு:**

*ஒரு + ஆயிரம் –> ~~ஒ~~ஓர் + ஆயிரம் = ஓராயிரம்.*
*இரு + ஆயிரம் –> ~~இ~~ஈர் + ஆயிரம் = ஈராயிரம்.*

**மூன்றன் ஒற்று வகாரமாதல்**

***466. மூன்றனொற்றே வகாரம் ஆகும்.***

***‘பொருள்:*** ‘மூன்று’ எனும் எண்ணுப்பெயரை அடுத்து ‘ஆயிரம்‘ எனும் சொல் வந்தால், ‘மூன்று’ வின் ஒற்றெழுத்தான ‘ன்’, ‘வ்’ ஆக மாறும்.

***விளக்கம்:*** ‘மூன்று’ வின் குற்றியலுகர ‘று’, நூற்பா 438–ன் படி இல்லாமல் போகின்றது.

*நூற்பா 441–ன் படி, ‘மூன்று’ வின், முதல் எழுத்தான ‘மூ’ எனும் நெட்டெழுத்து, ‘மு’ என்று குறுகும்.*

**எடுத்துக்காட்டு:**

*மூன்~~று~~ + ஆயிரம் –> ~~மூ~~மு~~ன்~~**வ்** + ஆயிரம் = முவ்வாயிரம்.*

‘மூவாயிரம்‘ என்பதும், ‘மூனாயிரம்‘ என்பதும், இன்றைய வழக்கில் உள்ளன.

### நான்கன் ஒற்று லகாரமாதல்

**467. நான்க னொற்றே லகாரம் ஆகும்.**

**பொருள்:** ‘நான்கு’ எனும் எண்ணுப்பெயரை அடுத்து ‘ஆயிரம்‘ எனும் சொல் வந்தால், ‘நான்கு’ வின் ஒற்றெழுத்தான ‘ன்’, ‘ல்’ ஆக மாறும்.

**விளக்கம்:** ‘நான்கு’ வின் குற்றியலுகர ‘கு’, நூற்பா 438–ன் படி இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

*நான்~~கு~~ + ஆயிரம் –> நா~~ன்~~**ல்** + ஆயிரம் = நாலாயிரம்.*

### ஐந்தன் ஒற்று யகாரமாதல்

**468. ஐந்த னொற்றே யகாரம் ஆகும்.**

**பொருள்:** ‘ஐந்து’ எனும் எண்ணுப்பெயரை அடுத்து ‘ஆயிரம்‘ எனும் சொல் வந்தால், ‘ஐந்து’ வின் ஒற்றெழுத்தான ‘ந்’, ‘ய்’ ஆக மாறும்.

**விளக்கம்:** ‘ஐந்து’ வின் குற்றியலுகர ‘து’, நூற்பா 438–ன் படி இல்லாமல் போகின்றது.

**எடுத்துக்காட்டு:**

*ஐந்~~து~~ + ஆயிரம் –> ஐ~~ந்~~**ய்** + ஆயிரம் = ஐயாயிரம்.*

### ஆறு, ‘அறு’ எனக் குறுகி நிற்றல், ஈற்று உகரம் கெட்டு முடிதல்

**469. ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்**
**ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்.**

**பொருள்:** ‘ஆறு’ எனும் எண்ணுப்பெயரை அடுத்து ‘ஆயிரம்‘

எனும் சொல் வந்தால், ‘அறு’ வில் உள்ள குற்றியலுகரம், இறுதி மெய்யான ‘ற்’ ஐ விட்டு விட்டு, கழிய வேண்டும்.

விளக்கம்: நூற்பா 441–ன் படி, ‘ஆறு’ வின், முதல் எழுத்தான ‘ஆ’ எனும் நெட்டெழுத்து, ‘அ’ என்று குறுகும்.

**எடுத்துக்காட்டு:**

ஆறு + ஆயிரம் –> அறு – உ + ஆயிரம் –> அற் + ஆயிரம் = அறாயிரம்.

ஆறாயிரம் என்பதும் வழக்கில் உள்ளது.

### ஒன்பது, ‘இன்’ சாரியை பெற்று முடிதல்

**470. ஒன்பா னிறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே.**

**பொருள்:** ‘ஒன்பது’ எனும் எண்ணுப்பெயரை அடுத்து ‘ஆயிரம்’ எனும் சொல் வந்தால், ‘ஒன்பது’ வின் இறுதியான குற்றியலுகரம் மாறாமல், ‘இன்’ எனும் சாரியை, இடையில் வர வேண்டும், என்பது மரபு.

**எடுத்துக்காட்டு:**

ஒன்பது + ஆயிரம் = ஒன்பது + இன் + ஆயிரம் = ஒன்பதினா–யிரம்.

‘ஒன்பதாயிரம்’ என்றும், இன்று வழங்குகின்றது.

### ஒன்று முதல் ஒன்பான்கள் முன்னர் நூறாயிரம் முடியுமாறு

**471. நூறா யிரமுன் வரூஉங் காலை**
**நூறெனியற்கை முதனிலைக் கிளவி.**

**பொருள்:** ‘நூறாயிரம்’ எனும் சொல் வருமொழியாய் வந்தால், ‘நூறு’ என்பதற்கு முன்பு உள்ள, நிலைமொழியான ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்ணுப் பெயர்கள், திரியாமல், இயல்பாய்ப் புணரும்.

‘ஒன்று’ என்பது, ‘ஒரு’ என ஆவதும், ‘இரண்டு’ என்பது, ‘இரு’ என ஆவதும், 439, 440 வது நூற்பாக்களில், கண்டுத் தெளிக.

*எடுத்துக்காட்டு:*

*ஒன்று + நூறாயிரம் = ஒருநூறாயிரம். (ஒன்றுநூறாயிரம் என வருமா?)*

*இரண்டு + நூறாயிரம் = இருநூறாயிரம். (இரண்டுநூறாயிரம் எனவும் வரும்.)*

*மூன்று + நூறாயிரம் = மூன்றுநூறாயிரம்.*
*நான்கு + நூறாயிரம் = நான்குநூறாயிரம்.*
*ஐந்து + நூறாயிரம் = ஐந்துநூறாயிரம்.*
*ஆறு + நூறாயிரம் = ஆறுநூறாயிரம்.*
*ஏழ் + நூறாயிரம் = ஏழ்நூறாயிரம்.*
*எட்டு + நூறாயிரம் = எட்டுநூறாயிரம்.*
*ஒன்பது + நூறாயிரம் = ஒன்பதுநூறாயிரம்.*

*('ஒன்பதினூறு ஆயிரம்', 'தொள்ளாயிரம் ஆயிரம்' என்பது பொருள்படி சரியாய் இருப்பினும், கருத்தாக்கச் சிக்கல் கருதி, தவிர்க்கப்பட்டன போலும்.)*

**நூறு என்பதனோடு, ஒன்று முதல் ஒன்பான்கள்**

***472. நூறென் கிளவி ஒன்றுமுத லொன்பாற்(கு)***
***ஈறுசினை யொழிய இனவொற்று மிகுமே.***

*சினை = உறுப்பு.*

**பொருள்:** *'நூறு', எனும் சொல்லை அடுத்து, ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்ணுப் பெயர்ச்சொல் வந்தால், 'நூறு' எனும் சொல்லின், கடைசி உறுப்பான "று" நீங்காது, அதன் இன ஒற்றான 'ற்', கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*நூறு + ஒன்று –> நூற்று + ஒன்று = நூற்றொன்று.*
*நூறு + இரண்டு –> நூற்று + இரண்டு = நூற்றிரண்டு.*
*நூறு + மூன்று –> நூற்று + மூன்று = நூற்று மூன்று.*
*நூறு + நான்கு –> நூற்று + நான்கு = நூற்று நான்கு.*
*நூறு + ஐந்து –> நூற்று + ஐந்து = நூற்றைந்து.*
*நூறு + ஆறு –> நூற்று + ஆறு = நூற்றாறு.*
*நூறு + ஏழு –> நூற்று + ஏழு = நூற்றேழு.*
*நூறு + எட்டு –> நூற்று + எட்டு = நூற்றெட்டு.*
*நூறு + ஒன்பது –> நூற்று + ஒன்பது = நூற்றொன்பது.*

**நூறுமுன் ஒருபஃது முதலியன**

***473. அவையூர் பத்தினும் அத்தொழிற் றாகும்.***

***பொருள்:*** *'நூறு', எனும் சொல்லை அடுத்து, ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்ணுப் பெயர்ச்சொல்லுடன், 'பத்து' எனும் சொல் தொடர்ந்து வந்தாலும், மேற்கண்ட செயல் நிகழும். அதாவது, 'நூறு' எனும் சொல்லின், கடைசி உறுப்பான ''று'' நீங்காது, அதன் இன ஒற்றான 'ற்', கூடும்.*

***எடுத்துக்காட்டு:***

*நூறு + ஒருபஃது –> நூற்று + ஒருபஃது = நூற்றொருபஃது. (நூற்றுப்பத்து என்பதும் வழக்கில் உள்ளது.)*

*நூறு + இருபஃது –> நூற்று + இருபஃது = நூற்றிருபஃது. (நூற்றிருபது என்றும் வழங்குகின்றது)*

*நூறு + முப்பஃது –> நூற்று + முப்பஃது = நூற்றுமுப்பஃது. (நூற்றுமுப்பது என்றும் வழங்குகின்றது)*

*நூறு + நாற்பஃது –> நூற்று + நாற்பஃது = நூற்றுநாற்பஃது. (நூற்றுநாற்பது எனவும் வழங்குகின்றது)*

*நூறு + ஐம்பஃது –> நூற்று + ஐம்பஃது = நூற்றைம்பஃது. (நூற்றைம்பது எனவும் வழங்குகின்றது)*

*நூறு + அறுபஃது –> நூற்று + அறுபஃது = நூற்றறுபஃது. ( நூற்றறுபது எனவும் வழங்குகின்றது)*

*நூறு + எழுபஃது –> நூற்று + எழுபஃது = நூற்றெழுபஃது. (நூற்றெழுபது எனவும் வழங்குகின்றது)*

*நூறு + எண்பஃது –> நூற்று + எண்பஃது = நூற்றெண்பஃது. (நூற்றெண்பது எனவும் வழங்குகின்றது)*

*நூறு + தொண்ணூறு –> நூற்று + தொண்ணூறு = நூற்றுத்தொண்ணூறு.*

**நூறுமுன் அளவுப்பெயர், நிறைப்பெயர்**

***474. அளவும் நிறையும் ஆயியல் திரியா***
***குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்***
***முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.***

***பொருள்:*** *'நூறு', எனும் சொல்லை அடுத்து, அளவுப் பெயர்ச்சொல்லும், நிறைப் பெயர்ச்சொல்லும் வந்தால், மேலே*

கூறிய இயல்பு மாறாது. அதாவது, 'நூறு' எனும் சொல்லின், கடைசி உறுப்பான "று" நீங்காது, அதன் இன ஒற்றான 'ற்', கூடும்.

அதனால், முன்புக் கூறிய நூற்பா 415– ன் விதிப்படி, வல்லின ஒற்றெழுத்தை இடையில் கொண்ட, குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட வன்தொடர்ச் சொல் (இங்கே, நூற்று), வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, வல்லின ஒற்றெழுத்து கூடும், என்னும் கருத்துடையவர்கள் அறிஞர்கள்.

எனவே, வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட அளவுப் பெயர்ச்சொல்லும்,நிறைப் பெயர்ச்சொல்லும் வருமொழியாய் வந்தால், புணரும் சொற்களுக்கு இடையில் வல்லின ஒற்றெழுத்து கூடும்.

**எடுத்துக்காட்டு:**

*நூறு + கலம் –> நூற்று + க் + கலம் = நூற்றுக்கலம்.*
*நூறு + சாடி –> நூற்று + ச் + சாடி = நூற்றுச்சாடி.*
*நூறு + தொடி –> நூற்று + த் + தொடி = நூற்றுத்தொடி.*
*நூறு + பலம் –> நூற்று + ப் + பலம் = நூற்றுப்பலம்.*
*நூறு + நாழி –> நூற்று + நாழி = நூற்றுநாழி.*
*நூறு + மண்டை –> நூற்று + மண்டை = நூற்றுமண்டை.*
*நூறு + வட்டி –> நூற்று + வட்டி = நூற்றுவட்டி.*
*நூறு + அகல் –> நூற்று + அகல் = நூற்றகல்.*
*நூறு + உழக்கு –> நூற்று + உழக்கு = நூற்றுழக்கு.*

### ஒருபஃது முதலியவற்றின் முன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்

**475. ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி**
**ஒன்றுமுத லொன்பாற் கொற்றிடை மிகுமே**
**நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும்.**

**பொருள்:** *ஒன்றை அடைமொழியாகக் கொண்டு தொடர்ந்தப் 'பஃது' எனும் நிலைமொழிச் சொல்லை (நூற்பா 439 – 444) அடுத்து, ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்ணுப் பெயர்கள் வருமொழியாக வந்தால், அவற்றின் இடையில் ஒற்றெழுத்து கூடும். அங்கு நின்ற ஆய்த எழுத்து கழியும்.*

**விளக்கம்:** *'ஒன்று முதல்' என்றதால், இவ்விதி, எட்டு வரை–யிலான எண்ணுக்கும் பொருந்தும். 'ஒன்பது பஃது' அதாவது, 'தொண்ணூறு'விற்கு இவ்விதி பொருந்தாது.*

*எடுத்துக்காட்டு:*

ஒருபஃது + ஒன்று –> ஒரு**பஃத்**து + ஒன்று = ஒருபத்தொன்று.
ஒருபஃது + இரண்டு –> ஒரு**பஃத்**து + இரண்டு = ஒருபத்திரண்டு
இருபஃது + மூன்று –> இரு**பஃத்**து + மூன்று = இருபத்துமூன்று.
முப்பஃது + நான்கு –> முப்**பஃத்**து + நான்கு = முப்பத்துநான்கு.
நாற்பஃது + ஐந்து –> நாற்**பஃத்**து + ஐந்து = நாற்பத்தைந்து.
ஐம்பஃது + ஆறு –> ஐம்**பஃத்**து + ஆறு = ஐம்பத்தாறு.
அறுபஃது + ஏழு –> அறு**பஃத்**து + ஏழு = அறுபத்தேழு.
எழுபஃது + எட்டு –> எழு**பஃத்**து + எட்டு = எழுபத்தெட்டு.
எண்பஃது + ஒன்பது –> எண்**பஃத்**து + ஒன்பது = எண்பத்தொன்பது.

**அடையடுத்த பத்தனொடு ஆயிரம் வந்து முடிதல்**

***476. ஆயிரம் வரினே இன்னென் சாரியை***
***ஆவயி னொற்றிடை மிகுத லில்லை.***

***பொருள்:*** ஒன்றை அடைமொழியாகக் கொண்டுத் தொடர்ந்த 'பஃது' எனும் நிலைமொழிச் சொல்லை அடுத்து, 'ஆயிரம்' எனும் சொல் வருமொழியாக வந்தால், 'இன்' எனும் சாரியை இடையில் வரும். அங்கு, மேலே கூறியது போல், தகர ஒற்றெழுத்து கூடாது. ஆனால், ஆய்த எழுத்து கழியும்.

***விளக்கம்:*** இவ்விதி, எட்டு வரையிலான பிற எண்கள், அடைமொழியாய் வந்தாலும் பொருந்தும். 'ஒன்பது பஃது' அதாவது, 'தொண்ணூறு'விற்கு இவ்விதி பொருந்தாது.

*எடுத்துக்காட்டு:*

ஒருபஃது + ஆயிரம் –> ஒரு**பஃ**து + **இன்** + ஆயிரம் = ஒருபதினாயிரம்.

இருபஃது + ஆயிரம் –> இரு**பஃ**து + **இன்** + ஆயிரம் = இருபதினாயிரம்.

எண்பஃது + ஆயிரம் –> எண்**பஃ**து + **இன்** + ஆயிரம் = எண்பதினாயிரம்.

'பத்தாயிரம்', 'இருபதாயிரம்' என்பதே பெருவழக்காய் உள்ளது. 'இன்' சாரியை இன்றி, வேறு பொருள் தருவதாய் இருப்பினும், பொதுவாக, குழப்பம் நேர்வதில்லை.

***அவற்றோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்து முடிதல்***

***477. அளவும் நிறையும் ஆயியல் திரியா.***

***பொருள்:*** *ஒன்றை அடைமொழியாகக் கொண்டு தொடர்ந்த 'பஃது' எனும் நிலைமொழிச் சொல்லை அடுத்து, அளவுப் பெயர்ச்சொல்லும் நிறைப்பெயர்ச்சொல்லும் வருமொழியாய் வந்தால், மேற்கூறிய இயல்பு மாறாது. அதாவது, 'இன்' எனும் சாரியை இடையில் வரும். தகர ஒற்றெழுத்து கூடாது. ஆய்த எழுத்து கழியும்.*

***விளக்கம்:*** *இவ்விதி, எட்டு வரையிலான பிற எண்கள், அடைமொழியாய் வந்தாலும் பொருந்தும். 'ஒன்பது பஃது' அதாவது, 'தொண்ணூறு'விற்கு இவ்விதி பொருந்தாது.*

***எடுத்துக்காட்டு:***

*ஒருபஃது + கலம் –> ஒருபஃது + **இன்** + கலம் = ஒருபதின்கலம்.*
*இருபஃது + சாடி –> இருபஃது + **இன்** + சாடி = இருபதின்சாடி.*
*முப்பஃது + தொடி –> முப்பஃது + **இன்** + தொடி = முப்பதின்தொடி.*
*நாற்பஃது + பலம் –> நாற்பஃது + **இன்** + பலம் = நாற்பதின்பலம்.*
*ஐம்பஃது + நாழி –> ஐம்பஃது + **இன்** + நாழி = ஐம்பதின்நாழி.*
*அறுபஃது + மண்டை –> அறுபஃது + **இன்** + மண்டை = அறுபதின்மண்டை.*
*எழுபஃது + வட்டி –> எழுபஃது + **இன்** + வட்டி = எழுபதின்வட்டி.*
*எண்பஃது + அகல் –> எண்பஃது + **இன்** + அகல் = எண்பதினகல்.*

***எண்முன் பொருட்பெயர்***

***478. முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்***
***ஞநமத் தோன்றினும் யவவந் தியையினும்***
***முதனிலை யியற்கை என்மனார் புலவர்.***

***பொருள்:*** *நிலைமொழியான எண்ணை அடுத்து, வல்லின, மெல்லின, இடையின எழுத்துகளை முதலாய்க் கொண்ட சொற்கள் வருமொழியாய் வந்தாலும், நிலைமொழி திரியாமல் இயல்பாய்ப் புணரும், என்னும் கருத்துடையவர்கள், அறிஞர்கள்.*

***விளக்கம்:*** *'ஒரு' வான 'ஒன்று'ம் 'இரு'வான 'இரண்டு'ம்*

இயல்பாகக் கருதப்படுகின்றன.

ஒன்று முதல் ஒன்பது வரை மட்டும் இல்லாது, எல்லா எண்களுக்கும் இது பொருந்தும் போலும்.

**எடுத்துக்காட்டு:**

*ஒன்று + கல் = ஒருகல்.*
*இரண்டு + சக்கரம் = இரண்டுசக்கரம். (‘இருசக்கரம்‘ எனவும் வரும்.)*
*மூன்று + தாமரை = மூன்றுதாமரை.*
*நான்கு + பாலம் = நான்குபாலம்.*
*ஐந்து + ஞாண் = ஐந்துஞாண்.*
*ஆறு + நூல் = ஆறுநூல்.*
*ஏழு + மணி = ஏழுமணி.*
*எட்டு + யாழ் = எட்டுயாழ்.*
*ஒன்பது + வாள் = ஒன்பதுவாள்.*
*பத்து + கல் = பத்துகல்.*
*பதினைந்து + சக்கரம் = பதினைந்துசக்கரம்.*

**ஒன்றின்முன், உயிரெழுத்து வருவழி, ‘ஓர்’ எனத் திரிதல்**

**479. அதனிலை உயிர்க்கும் யாவரு காலையும்**
**முதனிலை ஒகரம் ஓவா கும்மே**
**ரகரத் துகரந் துவரக் கெடுமே.**

***பொருள்:*** ‘ஒரு’ எனும் சொல் நிலைமொழியாய் இருந்து, உயிர் எழுத்தையும், ‘யா’ எனும் எழுத்தையும் முதலாய்க் கொண்ட பெயர்ச்சொல், வருமொழியாய் வந்தால், நிலைமொழியின் முதல் எழுத்தான ‘ஒ’, ‘ஓ’ ஆக மாறும், ‘ரு’கரத்தின் குற்றியலுகரம் மொத்தமாய்க் கழிந்து, ‘ர்’ நிலைக்கும்.

**எடுத்துக்காட்டு:**

*ஒரு + அடை –> ~~ஒ~~ஓ~~ரு~~ர் + அடை = ஓரடை.*
*ஒரு + ஆடை –> ~~ஒ~~ஓ~~ரு~~ர் + ஆடை = ஓராடை.*
*ஒரு + இலை –> ~~ஒ~~ஓ~~ரு~~ர் + இலை = ஓரிலை.*
*ஒரு + ஔவை –> ~~ஒ~~ஓ~~ரு~~ர் + ஒளவை = ஓரௌவை.*
*ஒரு + யாழ் –> ~~ஒ~~ஓ~~ரு~~ர் + யாழ் = ஓர்யாழ்.*

**இரண்டுமுதல் ஒன்பான்கள் முன்னர், 'மா' வந்து புணர்தல்**

***480.* இரண்டுமுத லொன்பான் இறுதி முன்னர்**
**வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்**
**மகர அளவொடு நிகரலு முரித்தே.**

***பொருள்:*** *இரண்டு முதல் ஒன்பது எண் வரையிலான குற்றியலுகர இறுதியைக் கொண்ட நிலைமொழியை அடுத்து, வழக்கில் உள்ள 'மா' எனும் அளவைக் குறிக்கும் சொல், வருமொழியாய் வந்தால், அந்நிலைமொழி எண்கள், மகர எழுத்தை முதலாய்க் கொண்ட ஓர் அளவுப் பெயரான 'மண்டை' என்பதுடன், புணர்ந்ததிற்குச் சமமாய், புணர்தலையும் உடையது.*

*எடுத்துக்காட்டு:*

*இரண்டு + மா = இருமா. ('இரண்டுமா' எனவும் வரும்)*
***மூன்று + மா = மும்மா. ('மூன்றுமா' எனவும் வரும்)***
***நான்கு + மா = நாற்மா. ('நால்மா', 'நான்குமா' எனவும் வரும்)***
***ஐந்து + மா = ஐம்மா. ('ஐந்து மா' எனவும் வரும்)***
***ஆறு + மா = அறுமா. ('ஆறு மா' எனவும் வரும்)***
***ஏழு + மா = எழுமா. ('ஏழு மா' எனவும் வரும்)***
***எட்டு + மா = எண்மா. ('எட்டுமா' எனவும் வரும்)***
***ஒன்பது + மா = ஒன்பதுமா.***

**லகார னகார ஈற்றுச் செய்யுள் முடிபுகள்**

***481.* லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்**
**உம்முங் கெழுவும் உளப்படப் பிறவும்**
**அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்**
**செய்யுள் தொடர்வயின் மெய்பெற நிலையும்**
**வேற்றுமை குறித்த பொருள்வயி னான.**

***பொருள்:*** *லகார னகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட சொல்லை அடுத்து, 'உம்' எனும் சாரியையும், 'கெழு' எனும் சாரியையும் உள்பட பிற சாரியைகளும், மரபின் படி, சொற்க ளுக்கு இடையில் வந்து, வேற்றுமைப் பொருளில், செய்யுளில் தொடர்ந்தால், அவ்வொற்றெழுத்துகள் (லகார னகார ஒற்றெ ழுத்துகள்), கூறவந்த உண்மைப் பொருளை உணர்த்த வேண்டி, திரியாமல் நிலைக்கும்.*

*எடுத்துக்காட்டு:*

*'வானவரி வில்லுந் திங்களும்'. (விலுந் திங்களும் என ஆவதில்லை)*

*'கல்கெழு கானவர் நல்குறு மகளே'. (குறுந்தொகை 71) (கற்கெழு என்றோ, நற்குறு என்றோ ஆகவில்லை)*

### *இவ்வதிகாரத்துப் புணர்க்கப்படா மொழிகள்*

***482.** **உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்***
***குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி***
***நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்***
***உயர்தினை அஃறிணை ஆயிரு மருங்கின்***
***ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்***
***செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்***
***மெய்யொருங் கியலுந் தொழில்தொகு மொழியும்***
***தம்மியல் கிளப்பின் தம்முன் தாம்வரூஉம்***
***எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்***
***அன்னவை யெல்லாம் மருவின் பாத்திய***
***புணரியல் நிலையிடை உணரத் தோன்றா.***

*பொருள்:*

*1. உயிரெழுத்தையும் ஒற்றெழுத்தையும் சொல்லின் இறுதியாகக் கொண்டு, குறிப்பாகவும், பண்பாகவும், இசையொலிப்பாகவும் வந்து, விதிகளுக்கு உட்படாமல், உரிச்சொல்லாக மாறிய குறைச்சொற்களும்,*

*2. உயர்திணை மற்றும் அஃறிணையின் ஐந்து பால்களை உணர்த்தும் பண்புத்தொகைச் சொற்களும்,*

*3. நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்தை ஒரே சமயத்தில் குறிக்கும்*

*'செய்யும்', எனும் பொருளிலும், இறந்தக்காலத்தைக் குறிக்கும் 'செய்த' எனும் பொருளிலும் வரும், 'செய்' எனும் வினைத் தொகைச் சொல்லும்,*

*4. தம் இயல்பை வெளிப்படுத்த தாமே தமக்குமுன் வரும் எண்களின் சேர்க்கையும் உள்பட,*

*பிறவும், அவை போன்ற எல்லாமும், வழக்கின் மருவிற்கு உரியது. புணரியல் நிலைகளில் விளக்கும் வகையில் வராது.*

*எடுத்துக்காட்டு:*

*1. பசப்பு, பசலை, பசத்தல், பசந்தாள், பசந்து, பசந்த, பசவா எனப் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாக வரும், 'பச' எனும் உரிச்சொல்லிற்கு அடியாக, குறிப்பு பற்றி வருவது, 'பச்' எனும் குறைச்சொல்.*

*கரி, கருப்பு, கருமை, கருத்தல், கரிந்தான், கரிந்து, கரிந்த, கரியா எனப் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாக வரும், 'கரு' எனும் உரிச்சொல்லிற்கு அடியாக, பண்பு பற்றி வருவது, 'கர்' என்னும் குறைச்சொல்.*

*ஆர்வம், ஆர்ப்பு, ஆர்த்தல், ஆர்த்தான், ஆர்த்து, ஆர்த்த, ஆர்த்திலா எனப் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாக வரும், 'ஆர்' எனும் உரிச்சொல்லிற்கு அடியாக, இசையொலிப்பு பற்றி வருவது, 'அர்' எனும் குறைச்சொல். (நன்றி: பாவலரேறு பாலசுந்தரம் உரை)*

*2. கரும்பார்ப்பான், கரும்பார்ப்பனி, கரும்பார்ப்பார், கருங் குதிரை, கருங்குதிரைகள் எனும் பண்புத் தொகைச் சொற்களுள், 'கரும்' எனும் குறைச்சொல், கரியன், கரியள், கரியர், கரியது, கரியவை எனப் பின்மொழிக்கு ஏற்ப பொருள்தந்து ஐம்பால் உணர்த்தும். பிரிந்து நின்று, பாலுணர்த்த முடியாததால், மருவில் இடம் பெற்றன. (நன்றி: பாவலரேறு பாலசுந்தரம் உரை)*

*3. கொல்யானை எனும் வினைத்தொகைச் சொல், கொல்லுகின்ற யானை, கொல்லப்போகும் யானை, கொன்ற யானை என, முக்கால வினைகளையும் ஒருசேரக் குறிக்கின்றது.*

*4. ஒரொன்று, ஈரிரண்டு, மும்மூன்று போன்றவை.*

***புறனடை***

***483. கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்***
***வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்***
***விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்***
***வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்***
***நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்.***

***பொருள்:*** *இங்கு கூறப்படாமல், புதிய படைப்புகளில் விதிகளை மீறிவருவனவும், பேச்சுவழக்குப் புலத்தில் மருவி வருவனவும், இங்குக் கூறிய புணரியல் விதிகளிலிருந்து*

வேறுபட்டுத் தோன்றினால், மொழிஞானம் பெற்றவர்கள், நல்ல எண்ணமுடன், அறிவுடன் ஆராய்ந்து, எழுத்து வழக்கிலும், பேச்சு வழக்கிலும், அவற்றை, பொருள் தெளிவு எனும் இலக்குடன், ஒழுங்குப்படுத்துதல் வேண்டும், இலக்கணத்தை மேலும் செழுமைப்படுத்துதல் வேண்டும், என்னும் கருத்துடையவர்கள் அறிஞர்கள்.